உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிற்றம்பலசேகரம்.

இஃது

சென்னைமாநகரம்

சதுர்வேதசித்தாந்த சபைத்தலைவரும்

திருவண்ணாமலை

ஞானதீபக்குடைத் தருமகர்த்தருமாயிருந்த

சைதாபுரம்

உமாபதிமுதலியார் அவர்கள்சகோதரர்

## சை - சிற்றம்பலமுதலியாரால்

புதுமொழி

வெண்பாவாகவும்,

முதுமொழி

விருத்தமாகவும் சேர்த்து

இயாவரும் எளிதிலுணரத்தக்க

உரையுட னியற்றப்பட்டு,

ஷையார் குமாரர்

தென்னார்க்காடுஜில்லா உசூர் சிரஸ்ததாராகிய

## சை - இர்ராஜேஸ்வரமுதலியார்

கேட்டுக்கொண்டபடி,

திருமயிலை

வி-சுந்தரமுதலியாரால்

தமது - சென்னை

விக்டோரியா ஜூபிலி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



1893.

# புத்தக விளம்பரம்.

சென்னை தங்கசாலைவீதி - 324 - வது - நெ - விக்டோரியா ஜூபிலி அச்சுக்கூடத்தில் பதிப்பித்திருக்கும் புத்தகங்கள்.

ஸ்தலமுறைதேவாரம்-திக்குகடிதம்-ரூபா ௬, ஷை தின் கடிதம்-ரூபா-ரு, திருக்குறள் - திருவருட்பயன்மூலமும்,கருத்துரையும் - ரூபா-க, பெரியபுராணவசனச்சுருக்கம்-அணா-க0, திருவிளையாடற்புராணவசனச்சுருக்கம் - அணா-க0, ஷை வசனச்சுருக்கம் இரண்டும் ஒன்றுசேர்ந்தது-ரூபா-க, தோத்திரக்கொத்து (எ0) நூல்களடங்கியது காலிகோகட்டடம் - அணா-கச, ஷை மார்பில்கட்டடம்-அணா-கஉ, அம்மணீயம்-ஐயாசாமீயம்-இராஜேஸ்வரம்-சோதிடநூல்-அணா-அ, சிற்றம்பலரேசகரம்-இது தங்கள் திசாபலன்களைத் தாங்களே தெரிந்துகொள்ளும் சோதிடநூல்-அணா-க0, ஆதிசைவப்பிரபாவம்-அணா-ங, சைவதூஷணபரிகாரம் (ஸ்ரீஆறுமுகநாவலரவர்கள் செய்தது) அணா-ச, பட்டணத்தார்திருப்பாடற்றிரட்டு சரித்திரத்துடன் அணா-உ, ஔவைக்குறள்மூலம்-அணா-உ, ஔவையார் திருவள்ளுவநாயனார்சரித்திரம்-அணா-உ, சிவபோகசாரம், சொக்கநாதவெண்பா-அணா-உ, பதிபசுபாசவிளக்கம்-அணா-க, சிவபுண்ணியத்தெளிவு-அணா-க, திருத்தொண்டர்புராணசாரம்-அணா-க, ஏரெழுபது-அணா-க, விவேகசிந்தாமணி-அணா-க, பத்திரகிரியார்மெய்ஞ்ஞானப்புலம்பல்-அணா-ஞ, சிவப்பிரகாசக்கட்டளை-அணா-ஞ, தத்துவக்கட்டளை-அணா-௨, புட்பவிதி-அணா-௨,இருச்சொல்லலங்காரம்-அணா-௨, காமாமுதலிய அடையாளக்குறிப்பையெளிதில் விளக்கும் வாசகக்குறிப்பு-அணா-௨.

வேண்டியவர்கள், இன்னும் பல புத்தகங்களை ஷை அச்சுக்கூடத்தில், விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

வி — சு.

# இந்நூல் அட்டவணை.


| பக்கம். | அட்டவணை. |
|---|---|
| க-ல் | குறிப்பு |
| உ-ல் | பிறப்பு |
| ,, | சிறப்பு, நான்முகம் |
| ங | நூல் |
| ச | யுகபலன், வருஷபலன் |
| உக | அயனம் |
| உஉ | ருது |
| உங | மாசம் |
| உஎ | தேதி |
| உஅ | வாரம் |
| ஙO | பக்ஷம் |
| ஙக | திதி |
| ஙரு | நக்ஷத்திரம் |
| சங | யோகம் |
| ருO | கரணம் |
| ருங | தியாச்சியம் |
| ருஅ | அமிர்தகடிகை |
| ,, | நாழிகை |
| ருகூ | காலம் |
| சுO | வேளை |
| சுஉ | இலக்கினம் |
| சுகூ | இராசிசமையம் |
| எO | ஷை பாதசமையம் |
| எக | ஷை நக்ஷத்திரபாதம் |
| ,, | ஓரை |
| எஉ | திரேகாணம் |
| எங | நவாம்சம் |
| எஅ | துவாதசாம்சம் |
| எஅ | திரிம்சாம்சம் |
| எகூ | உயிர் உடல் |
| அO | முன்னறியும் |
| ,, | உச்சகிரகம் |
| அங | கெஜகேசரியோகம் |
| ,, | நீசபங்கம், கிரகமாலிகை |
| அரு | ஷை சேகரம் |
| கூஉ | அஷ்டகவர்க்கு |
| கூச | இராசிகளில்சந்திரன் |
| கOO | சந்திரனைக் கிரகங்கள் பார்த்தல் |
| கOங | இராசிகளில் சனி |
| கOரு | கோட்சாரம் |
| கOஎ | விபரீதம், அங்ககிரகம் |
| கOகூ | காலசக்கிரம் |
| ககச | துவாதசபாவம் |
| ககஅ | நவக்கிரககாரகம் |
| கஉO | இலக்கினபலன் சுருக்கம். |
| கஉஉ | ஷை நவக்கிரகம் |
| கஉச | ஆண்பெண் |
| ,, | மூலைப்பால் |
| கஉரு | போஜனம் |
| கஉரு | கல்வி, ஜீவனம் |
| கஉகூ | இருப்பிடம் |
| ,, | விவாகமின்மை |
| ,, | மரிப்பிடம் |
| கஙக | நக்ஷத்திரபாதம் |
| கசஅ | நவக்கிரகதிசாபுக்தி |
| கஎரு | மாரகதிசாயோகம் |
| ,, | சனி சுக்கிரன் |
| கஎசு | கோள்களின்குணம் |
| ,, | மேடவிராசிமுதலிய |
| கஅஉ | சுபாசுபர், ஸ்தானம் |
| கஅங | எல்லாக்கோள்குணம் |
| ,, | சுபகேந்திரம் பாபகேந்திரம் |
| கஅச | எட்டுக்கின்றவன் |
| ,, | கேந்திராதிபத்தியதோஷம் |
| கஅரு | பொதுச்சுபயோகம் |
| ,, | இராஜயோகம் |
| கஅசு | ஷை பங்கம் |
| கஅஎ | மாரகவிலக்கணம் |
| ,, | நித்தியபலன் |
| கஅஅ | இராசிச்சக்கிரப்பேர் |
| ,, | காலச்சக்கிரப்பேர் |
| ,, | ஸ்திரீஜாதகம் |
| கஅகூ | அங்காரகதோஷம் |
| ,, | துற்பலன், நற்பலன் |
| ,, | பிரசவவீடு |
| ககூங | சதுரங்கபலயோகம் |
| ,, | ஆரூடம். |

# சாற்றுகவிகள்.

மதிராஸ் பிரசிடென்சிகாலீஜ்
தமிழ்த்தலைமைப் புலமை நடாத்திய
**தி — ஈ — ஸ்ரீநிவாசராகவாச்சாரியாரவர்களியற்றிய**
கொச்சகம்.

போருஞ்சோதிடநூற்பெருமைபிறங்கிடவே
தேராதார்தாமுந்தெளிந்தாரி னேமாப்பக்
காரார்பொழிற்சைதைக்காவலன்சிற்றம்பலவன்
ஏரார்தன்பெயரொடுசேகரமெனுநூலியற்றினனே.

---

மஹாவித்வான்
புரசை-அஷ்டாவதானம்
**சபாபதிமுதலியாரவர்களியற்றிய**
விருத்தம்.

சுரகுருமுதலோர்தொகுத்தபல்கணிதத்
தொல்லைநூற்பொருணனியாய்ந்து
நிரல்பரவியசிற்றம்பலசேக
ரம்மெனநிலவுமோர்பநுவல்
வரனுறவிரித்தான்சைதைவாழ்ஐயா
சாமிமால்சுதனுமாபதிதன்
விரவுசோதரன்சிற்றம்பலக்குரிசில்
விளம்புதன்பெயரமைவுறவே.

---

சென்னை பிரசிடென்சி காலீஜ்
முதலாவது தமிழ்ப்பண்டிதர்
**கோ — இராசகோபாலபிள்ளையவர்களியற்றிய**
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முன்னைவினைப்பயன்வருங்கான்
முன்னுணராதிடரினனிமூழ்கியேங்கல்
என்னையிருங்கடலுலகீரினியேனும்
பொழிற்சைதைமேயவேந்தல்

தன்னையொப்பிலாச்சிற்றம்பலப்பெயர்நா
வலனீரைந்தவறிலாமே
கொன்னைநமக்களித்தனன்சிற்றம்பலசே
கரமெனுநூல்குறிக்கொளீரே.

---

ஷை காலீஜ்
இரண்டாவது தமிழ்ப்பண்டிதர்
தொ – வேலாயுதமுதலியாரவர்களியற்றிய
ஆசிரியப்பா.

முதுமறைதெரித்தபழுதறுபொருட்பயன்
மண்ணகன்வரைப்பினெண்ணருமக்கள்
யாக்கைபெற்றன்றியியையாயாக்கையு
நெடிதுறினல்லதுமுடிவுபோகா
படிமிசைநெடிதுறப்பல்வயின்வினைத்தடை
அடுக்கியவருதலினமையாவடுக்கிய
கறங்கெனக்கொட்புறலியற்கையேயதனால்
அறிந்தனர்மறந்தனரலமந்துலண்டென
மறந்தலேமயன்றனருணர்ந்தனருய்பாக்
கருநெறிகடப்பக்குருட்டுக்கங்குற்
கொருசுடரளித்தெனமுழுதொருங்குணர்ந்தோ
ரருணெறிபடர்ந்தனரம்மையப்பனுய்த்
தெருணெறியானிழல்செய்தவர்தேசிகன்
மயறபப்பயந்தவழியேவகுத்தனர்
தென்றமிழ்க்கடலினும்வடசொற்பரப்பினு
மன்றமற்றவைமயங்குநாளாக
வியறிரிதமிழ்நாட்டெல்லையினிலங்குற
முன்னையர்முதுமொழிதன்னுறுபுதுமொழி
விரைஇயவொருநூல்சேகரித்துத்தன்
விறற்புகழ்ப்பெயரின்விளக்கினனறத்து
வழிவருமாட்சிவான்குடிகெழுமிய
வண்டலம்புறுவயற்றொண்டநாடதன்வயிற்
றுவரத்தொகுத்ததவமுடைமூவரு
ளுலகுகிலேபெறீஇயவுழவுமுதனடாய்ப்

## சாற்றுகவிகள்.

பொன்னேரிவிற்பெறுபுலஞ்செறிவேளாண்
டனிமரபோங்கச்சைதையம்பதிவாழ்
சிவராயகோத்திரஞ்செய்தவமெனவரும்
ஆண்டியப்பனுமணிவேலம்மையும்
பூண்டியல்பேரமைபொருந்துறத்திருந்து
மையாச்சாமியுமம்மணியம்மையும்
எய்யாத்தவத்தினினிதீன்றெடுப்பக்
கலபமஞ்ஞைப்புலவன்சேவடிப்
போதுசூடுபுமேதகுமுமாபதி
முற்றுந்துணையெனமொழிந்துறு
சிற்றம்பலனெனுஞ்செய்தவத்தோனே.

---

காஞ்சிபுரம் - பச்சையப்பமுதலியார்,
ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

### ஸ்ரீ - கேசவசுப்பராயமுதலியாரவர்களியற்றிய

ஆசிரியவிருத்தம்.

விதுமொழிவாள்வதனமமிர்திளமடவார்
வளர்சயிதைவீறிவாழு
மதுமொழியையாச்சாமிமதலைசிற்றம்
பலப்புலவன்வையமுய்யப்
புதுமொழியுமுதுமொழியும்புணைகணித
நூன்மொழியின்பொலிவுநோக்கி
லெதுமொழிசோதிடமொழியேயிம்மொழிக்கு
நிகர்மொழியாயியம்பற்பாற்றே.

---

புதுவை - சோதிடம்

### தா - அப்பாசாமிபிள்ளையவர்களியற்றிய

இரட்டையாசிரியவிருத்தம்.

சீரூறுமறிவிற்சிறந்திடுமாதியாஞ்
சேடன்வானவர்முனிவரர்
திகழ்கின்றயாவருமருளினுற்றமிழினிற்
றெளியுமுபகாரமாக

ஏருறுசோதிடமியற்றிடாக்குறைவினு
 விலகுபலநூல்களாய்ந்தே
யிவணுறைவோர்முக்காலவர்த்தமானந்தெரிந்
 தின்பசாகரமருந்தத்.
தாருறுசைதாபுரத்தினிற்பொன்னேரி
 தவறில்வேளாளமரபிற்
றவமுறவுதித்தசிற்றம்பலக்கோமான்
 றனிபெயரினன்மாணுற
ஏருறுநல்லசிற்றம்பலசேகரமெனு
 மியற்பெரியநூலளித்தே
யிகபரசுகம்பெற்றகங்களித்தியாவரு
 மியம்புபுகழெய்தினனரோ.

கட்டளைக்கலித்துறை.

மெய்தானுணர்ந்தவர்சோதிடநூல்கள்விசேஷவன்மை, யெய்தாவுரைத்தனரென்றுதிசேடன்றன்னேய்ப்பொழியச், சைதாபுரத்துச்சிற்றம்பலப்பேர்கொடுத்தான்பிறந்து, செய்தான்சிற்றம்பலச்சேர்க்கைநூல்யாண்டுஞ் சிறப்பிக்கவே.

இதன்கருத்து - ஆதிசேடன் - சோசியத்தில் ஒருநூலும் செய்யாததினால், சைதாபுரம் சிற்றம்பலக்கோமானுகஜெனித்து, சிற்றம்பலசேகரமென்கிற இந்நூல் செய்தானென்பதாம்.

---

அக்கவுன்டாண்ட்டு

ஜெனரல்ஆபிசு டிரேசரி சூபிரண்டெண்டாண்ட்

## சி – வை – தாமோதரம்பிள்ளையவர்களியற்றிய

வெண்பா.

முன்னகத்தியோதமுனிவர்மிகுசோதிடநூல்
பன்னினர்சிற்றம்பலவேளின்-றன்ன
பலசேகரித்தொருங்குபார்த்தமைத்தான்சிற்றம்
பலசேகரநூல்பரிந்து.

---

டிப்டிமாஸ்டர்
அட்டெண்டாண்ட் ஆபீசுமானேசர்
பெ – வேங்கடசுப்புமுதலியாரவர்களியற்றிய
வெண்பா.

சிற்றம்பலக்குரவன்சேகரித்தசேகரமுஞ்
சிற்றம்பலச்சூத்திரத்திகிரி - பெற்றவர்க்கு
ளம்மணியமையாஸ்வாமியத்தையர்ந்துணர்ந்தோர்
கண்மணியாக்கொள்வர்களிந்து.

---

உடுமலைப்பேட்டை - தாலுக்முனிசீப்
சை – காசிவிஸ்வநாதமுதலியாரவர்களியற்றிய
வெண்பா.

சோதிடநூல்பானுவெனத்தோன்றியசிற்றம்பலவே
ளோதிடுமிச்சேகரத்திற்கொப்புளதோ - ஜாதகவ
லங்காரமும்பின்னும்மற்றைநூலாயில்சஞ்ச
லங்காணும்புத்திசபலம்.

---

பட்டுக்கோட்டை - தாலுக்முனிசீப்
சை – அருணகிரிமுதலியாரவர்களியற்றிய
வெண்பா.

ஆயிரஞ்ஜோதியுடுவெண்ணியொளிர்த்தாலுமவை
மாயிருஞாலமதியாமோ - ஆயிலெண்
சிற்றம்பலன்றந்தசேகரமெண்சிரமே
மற்றெதைச்சொல்லவரும்வாய்.

---

இந்நூலாசிரியர் சகோதரர்
இந்துமதசித்தாந்தி
சை – உமாபதிமுதலியாரவர்களியற்றிய
வெண்பா.

உகாதியணியணியாயோர்சேகரமாய்
பகாப்பலன்களெல்லாம்பகர்ந்தான் - அகாதமுளெண்
சீர்த்திசைதாபுரம்வாழ்செம்மல்சிற்றம்பலவேள்
நூர்த்துநூர்த்தாய்ந்துபலநூல்.

---

இந்நூலாசிரியரது
அத்தியந்தப்பிரியரும்,
சென்னை
இந்துஜனபூஷணிபத்திராசிரியருமாகிய
## திருமயிலை — வி. சுந்தரமுதலியாரவர்களியற்றிய
நேரிசை ஆசிரியப்பா.

திருக்கிளர்வாசச் - செழுங்கமலத்தில்
இருக்கைமேவி - யினிதுவாழுறூஉம்
சதுரானனத்தன் - தகவினுற்றந்த
அதிரார்கலிசூழ் - அங்கண்மாநிலத்தில்
ஒண்டிசாமுகமும் - இசைபரந்தெங்கும்
கண்டிராவளங்கொள் - கவின்மிகுசென்னையில்
சத்தாந்திரப்பொருள் - தருசதுர்வேத
சித்தாந்தச்சபைத் - திகழ்பெருந்தலைவனும்
நுவலரும்பொய்யே - நுதலியபொருளாம்
விவிலியநூலை - வேதமாக்கொண்டு
மதியிலார்தம்மை - மருட்டுறுங்கிரிஸ்து
மதகண்டனஞ்செயும் - வலியகுடாரியும்
தங்கியவித்வ - ஜனக்குழாத்திடையோர்
திங்களினிலங்கிச் - சிறப்பினுன்றவனும்
உண்ணுமுலையுமை - யுத்தமியிடம்வாழ்
அண்ணுமலையார்க் - கன்புமேலீட்டால்
பஞ்சநன்னிறப் - பட்டுத்திருக்குடை
எஞ்சுறுதளித்திங் - கின்பின்வாழ்ந்தவனும்
ஆயசீர்வாய்ந்த - வணிமலர்ப்பொழில்வான்
மேயநற்சைதை - வியனகர்மேவும்
சிவராயகோத்திரஞ் - சிறக்கமுன்செய்த
தவமோருருவிற் - சார்ந்தெனவந்தோன்
இமாசலன்புதல்விக் - கிறைவனுக்கன்பன்
உமாபதியென்னு - மோங்கியபெயரான்
பின்னர்வந்துதித்துப் - பீடுறுகல்வி

மன்னியபுலவர் - மணியெனவிளங்கி
இலக்கியவிலக்கண - மிழுக்கறத்தெளிந்து
விலக்கியதபுத்து - விதித்தவாநடப்போன்
உலகினிற்புகழா - முடம்பைநிறுத்த
அலகிலாநூல்க - ளரிதினியற்றினோன்
தந்தைதாய்மைந்தன் - தம்பெயர்புவியில்
இந்துமார்த்தாண்ட - னிருக்குமட்டோங்க
ஐயாசாமீயம் - அம்மணீயம்
மெய்யார்புகழின் - விளங்கிராஜேஸ்வரம்
என்னுஞ்சோதிட - விணையிலாநூல்கள்
மன்னியஜகத்தோர் - மகிழ்வுறத்தந்தோன்
இன்னனபலநூல் - இயம்பியதகைசால்
பன்னுறுசிற்றம் - பலப்பெயர்ப்பெரியோன்
தாவருகோள்கள் - தருபலாபலனை
எவருந்தாமே - யெளிதினிங்குணர்வான்
பண்புறுசிற்றம் - பலசேகரமென்
றெண்பெறுதம்பே - ரிசையவோர்பனுவல்
அறைந்தனனன்னை - யவன்றவத்துதித்து
நிறைந்தசாந்தம் - நீடியகல்வி
அறந்தருசிந்தை - யதிசிவபக்தி
சிறந்தவாய்மை - தீதுசெய்யாமை
ஆசினல்லொழுக்க - மாதியகுணமே
பேசுநற்பணியாப் - பிறங்குறக்கொண்டோன்
அகிலம்புகழ்தென் - னாற்காட்டுஜில்லா
திகழுநல்லுசூர் - சிரஸ்ததாரென்னும்
உயருத்தியோக - முரிமையிற்பார்ப்போன்
இயலுறும்பெயரின் - இராஜேஸ்வரனெனும்
விழைதருபுகழ்சால் - மேலோன்
எழிறரவச்சிட் - டிசைநிறுத்தினனே.

சிவமயம்.

# சிற்றம்பலசேகரம்.

## பாயிரம்.

### தறிப்பு.

இந்நூலாசிரியரின் பிதா

சென்னை அசெஸ்மென்ட் ஆபீஸ் மானேஜராயிருந்த

சைதாபுரம்

ஐயாசாமிமுதலியா ரவர்களியற்றிய

இரட்டையாசிரியவிருத்தம்.

அந்தமுளவாங்கிரவாண் டிலகுவைகாசியார்ந்தபதின்மூன் றுதிகதி
யாதிவாரஞ்சோதிநாளில்திரையோதசியியாழ்லக்கினந்தன்னிலே
வந்தகுருசேய்புகர்மடங்கலிற்காரரவுமகிழ்கோலின்மதிவிற்சனி
வாலரவுகுடமேவமாலாடுகதிரேறில்வாய்ந்ததேகோள்கணிலையா
மூந்துகதிராடுமால்சனியேறுபுகரியாழ்முனைகேதூளிர்சேய்துலா
முதலரவுமகரமிசைகுருசந்திரன்மீனமொழியிலிஃதமிசையாகச்
செந்திருவமர்ந்திடுஞ்சென்னைபுரிதன்னிலேசிற்றம்பலக்கோன்வரச்
செப்பினர்களுத்தமசிரோமணிகளிச்சுதன் றீர்க்காயுவும்பெறுகவே.

---

| | | | |
|---|---|---|---|
| | புத | சூரி | சு - கு<br>ல - செ |
| கே | | | |
| | | | ரா |
| சனி | | சந் | |

| | | | |
|---|---|---|---|
| ல - சந்<br>குரு | சூ | பு-ச | சு |
| | | | கே |
| ரா | | | |
| | | செ | |

## பிறப்பு.

நேரிசைவெண்பா.

பொன்னேரி விற்பெற்ற பூவசியன் கங்காகு
லன்னுண்டி யப்பன்வே லம்மாள்பே—ரன்னையாச்
சாமியம்ம ணிக்குச்சேய் சைதையனேர்க் கேதரந்தத்
தாமன்கோத் ரன்சிவரா ஜன்.

## சிறப்பு.

கிரிஸ்துமதத் ரஸ்காரங் கீர்த்திஷிதி காசஞ்
சரித்ரசதுர் வேதசித்தாந் தஞ்செய்—பெருத்தசபை
மேய்ந்தச்சேந்த் ரம்ப்ரசங்க மேலருணேக் கைந்துவர்ணம்
வாய்ந்தகுடை பாலிக்கு மன்.

---

## நூன்முகம்.

---

கணபதி காப்பு.

வெண்செந்துறை.

அழகிய மலைமக ளம்பிகை பால
னெழிறரு கணபதி யிணையடி தொழுவாம்.

வழிபடுங் கடவுளர் துதி.

முடுகுவெண்பா.

முக்கணைக்கி லிக்கணக்குண் முக்யபல னஃதுரைக்க
வெக்கணமு மக்களுக்கி லக்கணமா—முக்கணக்கன்
றந்தமுந்தி வந்ததொந்தித் தந்திபிந்தி வந்தகந்தன்
வந்துவந்து புந்திதந்த வர்.

காரணம்.

விற்பூட்டு வெண்பா.

தாரணியுந் தாய்தந்தை தம்பெயரான் முன்பிரண்டு
சீரியநூ லோதியபோற் றேர்பலனின்—போதனுற்
சேகரமாச் செப்பெனவென் சேயிரா ஜேஸ்வரன்செம்
பாகமுடன் சொன்னெனுற்ப லம்.

சுவரூப சூசகம்.

நேரிசைவெண்பா.

சோதிடத்திற் காதாரந் தூய்கோணுள் ராசியிவைக்
காதரவு நூலம்ம ணீயமாஞ்—ஜாதகத்திற்

குற்றதையால் வாமீயங் கோரும் பலன்சொலுமிச்
சிற்றம் பலசே கரம்.

சித்திவிதி.

மாதா பிதாகுருதெய் வத்திடத்துப் பத்திசுத்தி
மீதா நவக்கோண் விதிபூஜை—யாதாரங்
கொண்டவருக் கெல்லாங்கை கூடுமெனில் வேறென்ன
பண்டுமொழி தப்பாதப் பா.

அருமைபெருமை.

பெற்றவட் கேதெரியும் பிள்ளைப்பேற் றின்னருமை
மற்றவர்க ளென்னறிய மாட்டுவார்—சிற்றம்
பலச்சே கரத்தைப் படித்தவர்முன் பேரைச்
சொலச்சே யருமைதோற் றும்.

அரசாக்ஷி.

சென்னையினூல் சேகரித்தான் சீமை யெழுகடலுக்
கன்னையென வேவந் தவதரித்துக்—கன்னியமாச்
செங்கோ னடாத்துகின்ற திண்டோளி விக்டோரி
தங்காலஞ் சிற்றம் பலம்.

அவையடக்கம்.

புலத்திலுயர் சோதிடர்முன் புன்மையேன் சிற்றம்
பலச்சே கரத்தைப் பகர்த—னிலத்தார்பி
பீலிகைமான் முன்பளந்த பேருலகைத் தானளக்கக்
காலினிய றன்மையொக்குங் காண்.

---

## நூல்.

### தெய்வ வணக்கம்.

விநாயகர் தோத்திரம்.

சிற்றம் பலத்தினடஞ் செய்யு முமாபதிமுன்
பெற்றந்த யானைமுகப் பெம்மானை—யுற்றிறைஞ்சிப்
பாடியெழிற் சிற்றம் பலசே கரத்துரைத்து
நீடியயு காதிபல னேர்ந்து.

அமைப்பு.

அந்நா டலையெழுத்தை யாரழிக்க வல்லவர்க
ளெந்நா ணிதரிசன மீங்கிதுவா—முன்னுன
வீசன்மா யோன்பிரம னிந்திரனு லும்லவவி
லேசந் திராணியிலை யேல்.

---

# யுகபலன்.

---

* முதுமொழி.

சந்தானதீபிகை.

விருத்தம்.

ஆதியாங் கிரேத யுகத்தினிற் கர்ப்பா தானமே யாதியா கவும்பின்
சோதியாந் திரேதந் தனிற்குறி கண்டதாதியா கவுந்துவா பரத்திற்
பேதியாச் செனன தோற்றமே யாதி யாம்பெருங் கலியுக மிதனி
னீதியா மகவு பூமியிற் செனித்த தாதியாகவுங் கொள னெறியே.

(இதன்பொருள்.) நான்குயுகத்துள் முதன்மையாகிய கிரேதாயுகத்தில் கர்ப்பதானஞ்செய்ய நியமித்தலக்கினமே ஜெனன லக்கினமாகவும், பின்பு பிரகாசம்பொருந்திய திரேதாயுகத்தில் சூல்கொண்டகுறிப்பே ஜெனன லக்கினமாகவும், துவாபரயுகத்தில் பேதிக்காத ஜெனனத்தின் தோற்றமே ஜெனன லக்கினமாகவும், பெரிதாகிய கலியுகமென்னும் இந்தயுகத்தில் கிரமமாகக் குழந்தைபூபதமானதே ஜெனன லக்கினமாகவும் கொள்ளுதல் முறைமையாம் என்றவாறு.

இச்செய்யுளிறுதியில் கொளலென்னுஞ் சொல்லுக்கு கொண்டு ஜாதகமெழுதுதல் என்பது தார்ப்பரியார்த்தம்.

---

# வருஷபலன்.

---

## பிரபவ.

† புதுமொழி.

வெண்பா.

சத்கால க்ஷேபன் சகலகுண சம்பன்ன
னித்தியமு மாதே நெறியுடையோன்—புத்திமான்
கால மறிந்துதவுங் கண்ணியவான் றர்மியெனச்
சீலப் பிரபவனைச் செப்பு.

(இ-ள்.) நற்கருமத்திற் காலத்தைச் செலுத்துபவனும், எல்லா நற்குணங்களாலு நிறைந்தவனும், எப்பொழுதும்நன்மார்க்கத்தி னிற்பவனும், விவேகியும், அடுத்தவர்களுக்குத் தகியறிந்து உதவிசெய்யுங்

* முதுமொழியென்பது, முன்னோர் வாக்கியமென்றறிக.

† புதுமொழியென்பது, இந்நூலாசிரியர் வாக்கியமென்றறிக.

கனவானும், அறத்தைச்செய்பவனும் ஆவனென்று பெண்ணே நீ பிரபவவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (க)

**விபவ.**

நித்தியசந் தோஷமுள னிட்களன்வி டன்றனவான்
புத்தியுள பந்துஜென பூஜிதன்மா—வித்துவான்
கீர்த்திபரன் முற்றிலுமே கிள்ளாக்குச் செல்வாக்யன்
சீர்த்திவிப வாண்டானைச் செப்பு.

(இ-ள்.) எப்பொழுதுஞ் சந்தோஷமாயிருப்பவனும், கபடமில்லாதவனும், காமுகனும், திரவியவானும், அறிவுள்ள பந்துஜெனங்களால் பூஜிதையுள்ளவனும், சிறந்த பண்டிதனும், மிகுந்த புகழையுடையவனும், தன் வாழ்நாளளவும் கிள்ளாக்கு எங்குஞ் செல்லும்படியான வாக்குநாணயமுள்ளவனும் ஆவனென்று விபவவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உ)

**சுக்கில.**

பரநாரி நேசன் பலவீன மெய்யன்
தருமசீலன்மிகுந்த தாதா—வுரைநிலையன்
வல்லவனும் வாய்க்கணக்கில் வண்மையுள நல்வசனன்
றுல்யசுக்ல வாண்டிலுதித் தோன்.

(இ-ள்.) பரஸ்திரீகமனனும், பலவீனமான தேகியும், தருமஞ்செய்பவனும், சுத்தனும், உதாரியும், சொற்றவறாதவனும், வாய்க்கணக்கில் வல்லவனும், இதமானவார்த்தையை உடையவனும் ஆவனென்று சுக்கிலவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ங)

**பிரமோதூத.**

அரசர் புகழமைச்ச ஞசில் சுபாஷி
பெரும்போர்க் களமதனிற் பேரான்—றிருவா
பரணப் பிரியன் பயனில்சொற் கேளான்
பிரமோதூ தன்னென்று பேசு.

(இ-ள்.) மன்னவர்களால் மதிக்கத்தக்க மந்திரியும், சுபவார்த்தைகள் பேசுபவனும், யுத்தத்திற் பின்னிடாதவீரனும், ஆபரணங்களைத் தரிப்பதில் விருப்பமுள்ளவனும், அப்பிரயோஜனமான வார்த்தைகளுக்குச் செவிகொடாதவனும் ஆவனென்று பிரமோதூதவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ச)

**பிரஜோற்பத்தி.**

தரும சுரூபி தனவான் வெகுபுத்
திரமித் திரகளத்ர தீர—னரிய

நிரவாக்யன் பந்து ஜெனபூஷிதனைப்
பிரஜோற் பதியானைப் பேசு.

(இ-ள்.) புண்ணியபுருஷனும், விசேஷதிரவியமும், மிகுந்த புத்திரர்களும், நல்ல சிநேகிதர்களும், இல்லறத்திற்குத்தக்க மனையாளும், தைரியமும், சொன்னிலைமை யுடையவனும், பந்துஜெனங்களைப் பூஜிப்பவனும் ஆவனென்று பிரஜோற்பத்திவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௫)

ஆங்கீரச.

நிபுணன் றயாள னெறிபுள்ள சீலன்
செபதபந் தன்னிற் சிரேஷ்டன்—சுபவசன
னோங்குபுகழ்த் தேக னொரேவாக் கியன்றனவா
னங்கீரச னென் றறி.

(இ-ள்.) மிகுந்த கல்வியும், தயவும், பரிசுத்தமும், செபத்திலும் தபத்திலும் சிரேஷ்டமும், நல்வசனமும், புகழுடனும், மாறாதவாக்கும், திரவியமும் உள்ளவன் ஆவனென்று ஆங்கீரசவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (௬)

ஸ்ரீ முக.

போகி தனவான் புஜபெலவேந் தர்மெச்சுந்
தேகிபர நாரிசி நேகனிரு—வாகிகடற்
கூமுகமேற் கீர்த்தியொடு குன்றலில்பே ராண்மையுளோன்
சீமுகவாண் டானென்று தேர்.

(இ-ள்.) சுகமனுபவிப்பவனும், பாக்கியவானும், அரசர்கள்கொண்டாடத்தக்க சரீரமுள்ளவனும், அன்னியஸ்திரீயினிடத்தில் நேசமும், எடுத்தகருமத்தை முடிக்கும்வல்லமையும், உலகில் கீர்த்தியும், மிகுந்த பராக்கிரமமும் உடையவனும் ஆவனென்று ஸ்ரீமுகவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (௭)

பவ.

தனுவிற் பலமுள்ளோன் றாரணியோர் போற்று
மினத்திற் பிரசித்த னென்னுங்—கனவான்
றவறாத வாக்யன் றமோகுணத்த னென்று
பவவருஷத் தானைப் பகர்.

(இ-ள்.) சரீரவலிமையும், உலகத்தார் யாவரும் தொழும்படியானவிதத்தில் மகாபிரசித்தனும், கனமும், சொல்நிலைமையும், கோபகுணமும் உடையவன் ஆவனென்று பவவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௮)

யுவ.

உலுத்தன் குரூபி யுடல மெலிந்தோ
னிலைவரமாம் புத்தியிலா னீர்கு—மூலகி
னவிதலிலாப் பேராசைக் காகர மாவன்னோர்
யுவவருஷத் தானென் றுரை.

(இ-ள்.) உலுத்தத்தன்மையும், அவலக்ஷணமானதேகமும், இளைத்தசரீரமும், உறுதியற்றபுத்தியை உடையவனும், அடங்காத அவாவிற்கு ஓர் வாசஸ்தலமும் ஆவனென்று யுவவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௯)

தாது.

காம்பீரி யன்றனவான் காரியத்தைச் சாதிப்போ
னும்பிரியா நேச னருளாளன்—சோம்பலிலான்
வாதியிணி தீர்க்கு மருத்துவன்மா தர்க்கியெனத்
தாதுவரு ஷத்தானைச் சாற்று.

(இ-ள்.) கெம்பீரமும், திரவியமும், நினைத்தகாரியத்தை முடிக்கும் வல்லமையும், நீங்காச்சிநேகமும், கிருபையும், சோம்பலின்மையை உடையவனும், ரஸவாதஞ்செய்பவனும், வைத்தியனும், தருக்கம் பேசுபவனும் ஆவனென்று தாதுவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௦)

ஈஸ்வர.

அழகுள்ள தேக னமிர்த வசனன்
குழவி பெருத்த குழாத்தோன்—பழுதில்லாப்
பாஸ்கரனைப் பூசிக்கும் பண்புசெல்வன் போகனென
வீஸ்வரசம் வற்சரனை யெண்.

(இ-ள்.) அழகானசரீரமும், அமிர்தவாக்கும், அதிககுழந்தைகளும், குற்றமற்ற சூரியனைத் தொழுங்குணமும், செல்வமும், நல்லபோகமும் உடையவன் ஆவனென்று ஈஸ்வரவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (௧௧)

வெகுதானிய.

தனவான் வியாபாரி சாதுசங்கன் போகி
கனவா னலந்தருஞ்சத் கர்மி—நனிநீள்
புகழாளன் மட்டாப் புசிப்பவனு மென்று
வெகுதா னியனை விளம்பு.

(இ-ள்.) திரவியமும், வர்த்தகமும், சாதுக்கள் கூட்டமும் போகமும் சீர்மையும் உடையவனும், நன்மையைக் கொடுக்கும் நல்லகரு

மங்களைச்செய்பவனும், மிகுந்த கீர்த்தியையுடையவனும், மிதமாகப்பு சிப்பவனும் ஆவனென்று வெகுதானியவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவரியாக எ-று. (கஉ)

### பிரமாதீ.

குரூரத் தொழிலோன் குலவீனன் கோபி
சிரோபூ ஷணமில் சிறியோன்—விரூபி
கரவாளன் கன்மனத்தன் காசளியா னாகப்
பிரமாதி யுற்றவனைப் பேண்.

(இ-ள்.) கொடுமையான தொழில்களைச்செய்பவனும், தாழ்ந்தகுலமும் கோபமும் உடையவனும், எப்பொழுதும் தலையில் வஸ்திரமில்லாமலிருப்பவனும், விகாரமான தேகமும், வஞ்சகமும் கடினநெஞ்சும் உள்ளவனும், ஒருகாசும் கொடாதவனும் ஆவனென்று பிரமாதிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கரு)

### விக்கிரம.

தனவான்சே னாதிபதி தக்க வுதாரி
கனமான பார்வையுள கண்ணன்—தினமானஞ்
சக்ரவர்த்தி போன்மகிழ்ச்சி சார்ந்திருப்ப னாமென்று
விக்ரமநல் லாண்டானை விள்.

(இ-ள்.) அதிகதனமும், தளகர்த்தத்துவமும், உதாரத்துவமும், கம்பீரமான பார்வையுள்ள கண்களை உடையவனும், தினமும் சக்ரவர்த்திபோலச் சந்தோஷமாயிருப்பவனும் ஆவனென்று விக்கிரமவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கச)

### விஷு.

மதியிலா மூடன் மலடனப வர்க்க
கதியளியாச் செய்கைபுரி கன்மி—யதிக
விஷமி விகடப் பிரசங்கி யென்று
விஷுவருஷ மேயவனை விள்.

(இ-ள்.) புத்தியில்லாத பேதையனும், பிள்ளையில்லாதவனும், மோட்சபதத்தைக் கொடாத களவு கட்குடித்தன்முதலிய தீயசெயல்களைச்செய்யும் பாபியும், மிகவும் விரோதங்களைச் செய்பவனும், விகடமாய்ப் பிரசங்கிப்பவனும் ஆவனென்று விஷுவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கரு)

### சித்திரபானு.

சுகிசிருந் தப்பிரியன் சூதாட்டந் தன்னில்
வெகுசமர்த்தன் பல்வகையில் வேட்கை—மிகவுடைய

மானவன் மேம்பாடு வாய்ந்தவனு கச்சித்ர
பானுவரு ஷத்தவனைப் பாடு.

(இ-ள்.) சுகமும், நாட்டியத்தில் விருப்பமும், சூதாடுவதில், பிருக்தசாமர்த்தியமும், பலவிதத்தில் ஆசையும், பெருமையும் உடையவன் ஆவனென்றுசித்திரபானுவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

சு பா னு.

குடும்பிகுலா சாரங் குறித்தியல்வோன் றன்மி
தடித்தெழுமுற் சாகன்சல் லாப—னிடம்வந்
தபானுவிற்ச பைக்கட் டலையொளிர்வ னென்று
சுபானுவிலே யுற்றவனைச் சொல்.

(இ-ள்.) பெண்சாதி பிள்ளை பந்துக்களை யுடையவனும், ஜாதியாசார விதிகளையெண்ணி நடப்பவனும், தருமஞ்செய்பவனும், மிகவுமெழுகின்ற மனக்கிளர்ச்சியுள்ளவனும், சல்லாபமாய்ப் பேசுபவனும், ஆகாயத்திலுதிக்கும் சூரியனைப்போலச் சபையில் தலைமையானவிடத்தில் பிரகாசிப்பவனும் ஆவனென்று சுபானுவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கஎ)

தா ர ண.

கட்டுடலன் பாக்கியவான் காணிற் கலகத்தை
யட்டிடுவன் யூகமொழி யாடுவா—னிட்டமுட
னாரணநூ லோது மமைப்புடைய னுமெனவே
தாரணசம் வற்சரனைச் சாற்று.

(இ-ள்.) திடமானதேகமும், மிகுந்தசெல்வமுள்ளவனும், கலகத்தைக் கண்டால் அதையடக்கிவிடுஞ் சமர்த்தனும், விவேகமாகவார்த்தைபேசுபவனும், வேதாகம புராணங்களை அன்போடு வாசிக்கும் அமிசையுடையவனும் ஆவனென்று தாரணவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கஅ)

பார்த்திப.

மானவர்க்கு நாயகனல் வாசமணி வான்றனதா
சானைமற வான்சேர் மதியினன்றிந்—தானதையை
யார்த்தீமன் கோதையர்பா லங்கணையா னுமென்று
பார்த்தீப வற்சரனைப் பாடு.

(இ-ள்.) மனிதருக்குத் தலைவனும், நல்லவாசனை திரவியங்களை அணிந்துகொள்பவனும், தனது குருவை மறவாதவனும், (வண்டுகள் சத்தித்துப் பொருந்துகின்ற பூமாலையை அணிந்துள்ள ஸ்திரீகளிடத்

தில்) கூடுகிறகாலத்திலல்லாமல் தான் மோகத்தை கொள்ளாதவனும் ஆவனென்று பார்த்தீபவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

**விய.**

திடமினெஞ்சன் கோபி தெரிவையர்மே லாசை
விடமனதி லெண்ணான் வெளிற—னடர்த்ர
விபவான் சிநேகம் விரும்பியுரு னென்ன
வியவாண் டினனை விளம்பு.

(இ-ள்.) ஸ்திரமில்லாத சித்தமுள்ளவனும், கோபியும், ஸ்திரீகண்மேல் மோகத்தைவிடுதற்கு உள்ளத்திற் குறியாதவனும், அறிவில்லாதவனும், மிகுந்த பொருளுள்ளவனும், பிறரிடத்தில் சிநேகத்தை விரும்பிச் செய்யாதவனும் ஆவனென்று வியவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உo)

**சர்வசித்து.**

சுகிர்தவாக் கன்விபவன் சோர்வுதபு சீலன்
றகுதி யுடையன் றயாளன்—றிகழ்கலைக
ளூய்த்துணர்ந்த வன்கனக முள்ளவனு மென்றுசர்வ
சித்துவரு ஷத்தானைத் தேர்.

(இ-ள்.) நல்லவாக்கும், வைபோகமும், கள்ளமற்ற ஒழுக்கமுள்ளவனும், யோக்கியனும் கிருபையுள்ளவனும், மேலான நூல்களை நன்றாகக் கற்றறிந்தவனும், தனவானும் ஆவனென்று சர்வசித்து வருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (உக)

**சர்வதாரி.**

சந்தியவான் சிற்பி சகலவிதத்துஞ் சமர்த்த
னுத்தமப்ர புக்கணட்பை யுற்றிருப்பன்—மெத்தவிவ
காரி சிநேகிதரைக் காத்தளிப்ப னென்றுசர்வ
தாரியிலே வந்தவனைச் சாற்று.

(இ-ள்.) வாக்குநிலைமை யுள்ளவனும், சிற்பசாத்திரம் அறிந்தவனும், சகல வகையிலும் சாமர்த்தியமுள்ளவனும், மேலான பிரபுக்களுடைய சிநேகத்தை அடைந்திருப்பவனும், மிகவும் நியாயமெடுத்துச் சொல்பவனும், சிநேகிதர்களை நன்றாக இரட்சிப்பவனும் ஆவனென்று சர்வதாரிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. ()

**விரோதி.**

ஏசுந்து ரோகி யெதிரிலஞ்ஞை யாரிடத்து
நேசஞ் செயகிணியா நெஞ்சுடையோன்—கூசுங்

குரோதி மிகுந்த கொடுமையனு மென்று
விரோதியி லுதித்தவனை விள்.

(இ-ள்.) இகழப்படும் துரோகியும், ஒப்பில்லாத மதிகேடனும், எப்படிப்பட்டவரிடத்திலும் அன்புசெய்ய எண்ணாதவனும், அஞ்சத்தக்ககோபியும், அதிகதுஷ்டனும் ஆவனென்று விரோதிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உங)

விகிர்தி.

மணிமந்தர வாதி மதனு கமத்தன்
றுணிவுசெறி நெஞ்சினேன் றூய்யன்—கணித
மிகவுணர்ந்தோன் ஞானம் விளம்பிறைவ னாக
விகிர்திதனிற் சார்ந்தவனை விள்.

(இ-ள்.) ககனகுளிகை முதலியமருந்திலும், மாந்திரீகத்திலும் வல்லவனும், கொக்கோகமுதலிய காமநூலறிந்தவனும், அதிகதைரியமுள்ளவனும், சுத்தமானவனும், சோதிடத்தில் மிகத்தேர்ந்தவனும், ஞானத்தைப்போதிக்கின்ற ஆசானும் ஆவனென்று விகிர்திவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உச)

கர.

தினன் றிறமையிலான் றிப்பிரமை கொண்டசித்த
வீனனெவ ருக்கு மினியனல்லன்—போன
பொருளைக் குறித்துப் புலம்பிநிற்ப னென்று
கரவருஷத் தானைக் கருது.

(இ-ள்.) தரித்திரனும், சாமர்த்தியமில்லாதவனும், திகைத்துநிற்கின்ற குணமுள்ளவனும், இழிந்தவனும், எவர்களுக்கும் பிரியமில்லாதவனும், போக்கடித்த பொருளைக்குறித்து வியசனப்பட்டுக்கொண்டிருப்பவனும் ஆவனென்றுகரவருஷத்திற்பிறந்தவனைச்சொல்லுவாயாக.

நந்தன.

மந்திரத்தில் வல்லோன் மணிமுடியோர் தங்களைச்சு
தந்தரித்துக் கொண்டிடுவன் சாத்திரங்கள்—சிந்தையிலு
வந்தறைவன் மேலான வங்கிசத்த னுமெனவே
நந்தனசம் வற்சரனை நாடு.

(இ-ள்.) மாந்திரீகத்தில் வல்லவனும், ரத்தினகிரீடந்தரித்துள்ளவர்களாகிய அரசர்களை வசப்படுத்திக்கொள்ளுஞ்சமர்த்தனும், நல்லசாத்திரங்களைப் பிறருக்குச்சொல்பவனும், உயர்ந்தவமிசத்திற் பிறந்தவனும் ஆவனென்று நந்தனவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக.

### வி ஜ ய.

தீமையிலாச் சுற்றச் செறிவுடையோ னித்தியமு
நேமநிஷ்டை செய்வோ னிருவாகி—தோமி
னிஜமுரைப்போன் சீர்த்தியொடு நின்றிருப்ப னென்று
விஜயதனி லுற்றானை விள்.

(இ-ள்.) நல்ல பந்துக்களால் சூழப்பட்டிருப்பவனும், பிரதிதின மும் தத்துவநூலாராய்தலும், நிஷ்டைசெய்தலுடையவனும், எந் தக்காரியத்தையும் சரிப்பட நடத்துபவனும், குற்றமில்லாத உண்மை பேசுபவனும், கீர்த்தியுடன் வாழ்ந்துகொண் டிருப்பவனும் ஆவனெ ன்று விஜயவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உஎ)

### ஜ ய.

பூமின் கிருபையுற்றோன் பூவளந்தேர் யூகிவெகு
சாமர்த்திய னழகன் சால்புடையோன்—பூமி
தயவிற் புரப்போன் சௌரியவா னாக
ஜயதனிற்சென் மித்தவனைச் சாற்று.

(இ-ள்.) தாமரை மலரிலிருக்கும் இலட்சுமியினுடைய அருளைப் பெற்றவனும், நிலங்களின் வளப்பங்களை அறியும் விவேகியும், மிகுந்த சமர்த்தனும், அழகு வாய்ந்தவனும், மேன்மையுள்ளவனும், பூமியைத் தயவோடு இரட்சிப்பவனும், பராக்கிரமனும் ஆவனென்று ஜயவருஷ த்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உஅ)

### ம ன் ம த.

மதனா கமந்தெரிந்தோன் மண்டலத்தில் யார்க்கு
மிதமே யியற்றிமகி ழீச—னிதமுமெதி
ரொன்னலரைக் கண்டிக்கு முத்தண்டன் மெய்யனென
மன்மதசம் வற்சரனை வாழ்த்து.

(இ-ள்.) காமநூல்களைக் கற்றவைகளிற் கூறியபடி நடப்பவனும், பூமியில் யாவருக்கும் நன்மையையே நித்தமும் செய்து சந்தோஷிக்கி ன்ற மேலோனும், தன்னையெதிர்த்த சத்துருக்களை அதஞ்செய்யும் பராக்கிரமனும், நிஜத்தைப்பேசுபவனும் ஆவனென்று மன்மதவருஷ த்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உகூ)

### து ன் மு கி.

சீலமே யில்லான் சினமே வளரகத்தான்
சாலவே யன்னத்தைச் சாப்படுவான்—ஞாலமேற்
றன்மெய்ப் பிணியுன் றரித்திரனுங் காரியென்று
துன்முகியிற் றோய்ந்தவனைச் சொல்.

(இ-ள்.) ஆசாரமில்லாதவனும், கோபமே குடிகொண்டுவளரும் நெஞ்சினனும், அதிகமாகச் சோற்றைத்தின்பவனும், தேகத்தில் நோயுள்ளவனும், வறியவனும், ஆங்காரியும் ஆவனென்று துன்முகிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௰)

**ஏவிளம்பி.**

எந்நாளு முண்மை யியம்பா னொளிமிகுசெம்
பொன்னா பரணந்தான் பூணலுறா—னின்னாச்சு
தேவிளம்பி நெஞ்சிற் செருக்குவன்மா பாபியென
வேவிளம்பி வந்தானை யெண்.

(இ-ள்.) எப்பொழுதும் நிஜத்தைப்பேசாதவனும், மிகுந்த வொளியுள்ள சிவந்த பொன்னாற்செய்த நகைகளை அணியாதவனும், தீயசூதுக்களையே பேசிச் சந்தோஷிக்கிறவனும், கொடியபாவியும் ஆவனென்று ஏவிளம்பி வருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (௧௧)

**விளம்பி.**

சன்மார்க்க சீலன் றயையுள்ளோன் சாந்தகுணன்
றுன்மார்க் கரைக்கண்டாற் றூத்திரிப்பன்—பின்னுங்
களங்கமிலான் ஞானி கனவானா மென்று
விளம்பியாண் டானை விளம்பு.

(இ-ள்.) நன்னடக்கையும், கிருபையும் சாந்தகுணமும் உள்ளவனும், துஷ்டரைக்கண்டால் அவர்களைத் தொழுபவனும், பரிசுத்தமானநெஞ்சனும், ஞானமும் கண்ணியமும் உடையவனும் ஆவனென்று விளம்பிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௨)

**விகாரி.**

தனவான் பயஸ்தன் றனுப்பிடை யுற்றோன்
மனமேற் சலனமொடு வாழ்வோன்—றுனிதீர்
மகாரு முதவினமு மற்றிலனீங் கென்ன
விகாரியிற்சென் மித்தோனை விள்.

(இ-ள்.) பாக்கியவானும், பயமுள்ளவனும், வியாதியுற்ற தேகியும், மனதிற் சஞ்சலத்தோடு வாழ்பவனும், மகிழ்ச்சியைக்கொடுக்கும் பிள்ளைகளையும், உதவிசெய்யத்தக்க பந்துக்களை இல்லாதவனும் ஆவனென்று விகாரிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. ()

**சார்வரி.**

ஆசார முள்ளோ னதிபோகி சத்தியவான்
றூசானு தாசன் றனவந்தன்—றேசாரு

நேர்மையுள மாவிரத னீதிபர னுமெனவே
சார்வரிசம் வற்சரனைச் சாற்று.

(இ-ள்.) நல்லொழுக்கமுள்ளவனும், மிகவும் போகம் அனுபவிப்பவனும், உண்மைபேசுபவனும், அடியார்களுக்குத் தொண்டுசெய்பவனும், பணக்காரனும், ஒளிபொருந்திய சரியான விரதங்களை அனுட்டிப்பவனும், நீதிதவறுதவனும் ஆவனென்று சார்வரிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கச)

பிலவ.

சாந்தகுணன் றனவான் றக்கோர்மெச் சும்புகழோன்
மாந்திரிய சாத்திரத்து மாவல்லோ—னேந்து
முலையவர்பா னேசன் முதிர்வசன னாகப்
பிலவதனிற் சார்ந்தவனைப் பேண்.

(இ-ள்.) சாத்துவிககுணமும் பொருளும் உள்ளவனும், சான்றோர்கொண்டாடும் கீர்த்திமானும், மாந்திரிய சாத்திரத்தில் மிகுந்த வல்லவனும், ஸ்திரீகளிடத்தில் இஷ்டமுடையவனும்,நன்றாக ஆலோசித்துப்பேசுகிறவனும் ஆவனென்று பிலவவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (கரு)

சுபகிருது.

பந்துஜென போஷன் பராக்கிரமன் பாவையரைத்
தந்திரத்தி னேய்த்திடுவோன் சன்மார்க்க—னந்து
முபகாரஞ் செய்வோ னொளிர்தருமி யென்னச்
சுபகிருது வற்சரனைச் சொல்.

(இ-ள்.) பந்துக்களைப் பாதுகாப்பவனும், வீரனும், ஸ்திரீகளை உபாயத்தினாலே ஏய்ப்பவனும், ஒழுக்கமுள்ளவனும், மிகுந்த உபகாரியும் தருமவானும் ஆவனென்று சுபகிருதுவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கசு)

சோபகிருது.

அத்துவித மார்க்க னழகனமைச் சன்ஞானி
யொத்து பலபாஷை யோதுகிற்போன்—மெத்து
துரிதரகி தன்மன் சுகவானுஞ் சோப
கிருதுவிலுற் றானைக் கிள.

(இ-ள்.) அத்துவைதியும், சௌந்தரியனும், மந்திரியும், ஞானவானும், இஷ்டத்தோடு பலபாஷைகளைப் படிப்பவனும், பாபமில்லாதவனும், இராஜ அமிசையும் பேரின்பமுடையவனும் ஆவனென்று சோபகிருதுவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று, (கள)

### குரோதி.

பலவகையூண் கொள்வோன் பரதார மோகன்
சலமிகவுஞ் சாதிப்போன் றர்க்கி—கலகன்
விரோதி விகடப் பிரசங்கி யென்று
குரோதியனைந் தானைக் கூறி.

(இ-ள்.) பலவித வுணவுகளை விரும்பிப் புசிப்பவனும், பரஸ்திரீக மனஞ்செய்பவனும், மிகவும் வயிரஞ் சாதிப்பவனும், தர்க்கம் பண்ணு பவனும், கலகமூட்டுபவனும், யாவருக்கும் பகைவனும், அகடவிகடமா கப் பிரசங்கிப்பவனும் ஆவனென்று குரோதிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௩அ)

### விசுவாவசு.

தனவா னுறவினரைத் தற்காப்போன் றன்மி
மனமேற் களங்கமிலா மன்னன்—றினமு
நிசமே புகனெறியோ னீதிபர னென்ன
விசுவாவ சூற்பவனை விள்.

(இ-ள்.) தனவட்டியனும், பெரிய குடும்பங்களைச் சம்ரட்சணை செய்பவனும், தருமசீலனும், பரிசுத்தமான மனதுள்ள பிரபுவும், எப்பொழுதும் உண்மையே பேசுபவனும், நீதிமானும் ஆவனென்று விசுவாவசு வருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௩௯)

### பராபவ.

குலநாசன் மூடன் குரோதிமிகு பாவி
கலகமே செய்வோன் கபடி—யுலகிற்
பராவுதுணை வோரைப் படையாதோ னாகப்
பராபவசம் வற்சரனைப் பாடு.

(இ-ள்.) தன்னுடைய குடியை நாசஞ்செய்பவனும், மதிகேட னும், கோபியும், மிகுந்த பாபியும், கலகம் பண்ணுபவனும், வஞ்சகனும், உலகத்தில் சொல்லப்பட்ட சகோதரரையற்றவனும் ஆவனென்று பரா பவவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௪௦)

### பிலவங்க.

புந்திதகை யில்லாதான் புன்சிறுவர் கேண்மையினன்
பந்துவை நேசிப்பான் பலரையுமு—வந்து
கலவங்க மாதருக்குக் கண்போல்வா னென்று
பிலவங்க வாண்டானைப் பேசு.

(இ-ள்.) அறிவும் யோக்கியதையும் இல்லாதவனும், தனக்குஞ்சி றியவர்களோடு சிநேகஞ் செய்பவனும், பந்துக்களிடத்தில் பக்ஷமுள்

ளவனும், பொருள்கொடுக்கும் பல்ரையும் மகிழ்ந்து கூடுகின்ற ஸ்திரீகளர்கும் வேசிகளுக்கு நேத்திரத்தை யொத்தவனுகிய விடனும் ஆவனென்று பிலவங்கவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.()

கீலக.

அதிசுந்த ரன்சூர னன்புடைய நேசன்
மதிமந் திரிபோகி மன்ன—னிதமுமிகு
சீலமுடன் றெய்வபக்தி செய்பவனு மென்னக்
கீலகவாண் டானைக் கிள.

(இ-ள்.) மிகுந்த அழகனும், வீரியனும், யாவரிடத்தும் மிகுந்த பக்ஷமுள்ளவனும், விவேகமுடைய மந்திரியும், சுகங்களை அனுபவிப்பவனும், இராஜனும், நித்தியமும் மிகுந்த ஒழுக்கத்தோடு கடவுளை வழிபடுவோனும் ஆவனென்று கீலகவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சஉ)

சௌமிய.

சௌந்தகுண னேசன் சருவஜென முந்துதிநல்
வேந்தன் புறங்கொடா வீரியன்று—வாந்தந்
தவுபுரா ணப்பிரியன் றன்னியனு மென்றே
சவுமியவிற் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) சாந்தகுணமும் யாவரிடத்தும் அன்பும் உடையவனும், எல்லாஜெனங்களும் கொண்டாடுகின்ற நல்ல அரசனும், முதுகிடாத வீரனும், ஒளியுள்ள புண்ணிய புராணங்களை விரும்பிக்கேட்பவனும், தனவானும் ஆவனென்று சௌமியவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சங)

சாதாரண.

பற்பல நூலின் பயனைமர பிற்புகலும்
விற்பனன் வீயாத மேம்பாட்டோ—னற்புடைய
மாதாவைப் போற்றிடுவான் மன்னுநடு வுள்ளவனுச்
சாதார ணேற்பவனைச் சாற்று.

(இ-ள்.) பலபலசாத்திரங்களின் அர்த்தங்களையும் சம்பிரதாயமாகச் சொல்லுகின்ற சிறந்தபண்டிதனும், அழியாத மேம்பாட்டையுடையவனும், அன்புள்ள தன்தாயாரைச் சம்ரட்சணை செய்பவனும், அசையாத நடுவுநிலைமை யுள்ளவனும் ஆவனென்று சாதாரணவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சச)

விரோதிகிருது.

பேராசை கொண்டோன் பிணியனல்கூர்ந் தோன்சினத்த
னேராத வார்த்தையின னிட்டூரன்—தீராப்

பெருநடையன் லோபியெனப் பெண்ணே விரோதி
கிருதுவிலுற் றானைக் கிள.

(இ-ள்.) பேராசையுள்ளவனும், நோயாளியும், தரித்திரனும், கோபியும், தகாதவார்த்தைகளைப் பேசுபவனும், கொடியவனும், ஓயாமல் அதிகமாக நடப்பவனும், உலுத்தனும் ஆவனென்று பெண்ணே நீ விரோதிகிருது வருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. ()

**பரிதாபி.**

குணமிலிகண் டோரைக் குலாவுவோன் பாங்காப்
பணமீட்டு வோன்வீணன் பாவா—யணுவும்
பிரீதியகத் தற்றோன் பிணியாள னென்று
பரீதாபி வற்சரனைப் பாடு.

(இ-ள்.) குணமில்லாதவனும், கண்டவர்களெல்லாரையுங் கொண்டாடுபவனும், பத்திரமாகப் பொருளைச் சேர்ப்பவனும், பிரயோசனமற்றவனும், பிறரிடத்தில் அன்புசற்றுமில்லாத நெஞ்சனும், நோயாளியும் ஆவனென்று பெண்ணே நீ பரீதாபிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சசு)

**பிரமாதீச.**

பந்து துவேஷி பரதார மோக
னிந்தனையே சொல்லுநிருமூட—னெந்தக்
கிரமமுமில் லாதோன் கெடுதிபுரி வோனைப்
பிரமாதீ சொற்பவனைப் பேசு.

(இ-ள்.) பந்துக்களை விரோதிப்பவனும், பிறனுடைய ஸ்திரீயை விரும்புவோனும், நிந்தனைகளையே பேசுகின்ற மகாமூடனும், யாதொருகிரமமுமில்லாதவனும், தீமைசெய்பவனும் ஆவனென்று பிரமாதிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சஎ)

**ஆனந்த.**

சகலகலை தேர்நிபுணன் சற்குணசம் பன்னன்
றகுமான காரியஞ்செய் சாந்தன்—வெகுமானி
தானந் தவமிவற்றைத் தானியற்று வோனெனவே
யானந்த வாண்டானை யாடு.

(இ-ள்.) சகல சாத்திரங்களையுந்தெரிந்த மகாபண்டிதனும், நற்குணத்தானிறைந்தவனும், தகுமான காரியத்தைச்செய்யும் பொறுமையுள்ளவனும், மிகுந்தமானியும், தானத்தையும் தவத்தையும் செய்பவனும் ஆவனென்று ஆனந்தவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சஅ)

இராட்சச.

பேதையரைக் கொண்டாடிப் பேசுகின்ற நீர்மூடன்
தீதையே செய்யுந் திறமுடையோன்—சூதை
யிராப்பகலு மாடியுளத் தின்புறுவோ னென்ன
விராட்சசவிற் சேர்ந்தவனை யெண்.

(இ-ள்.) அறியாமையே வடிவாகிய ஸ்திரீகளைப்புகழ்ந்து பேசுகிற சுத்தமூடனும், பொல்லாங்கையே செய்யும் போக்கிரியும், எந்நேரமும் சூதாடிச் சந்தோஷிப்பவனும் ஆவனென்று இராட்சச வருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சகூ)

நள.

சீல நெறிபடர்வோன் சிந்தாத் தருமபரி
பாலன்றீம் பண்டங்கள் பட்சணிப்போன்—கால
வளவறிந் தாகார மருந்துவோ னென்று
நளவருஷத் தானை நவில்.

(இ-ள்.) நல்லொழுக்கமென்னும் வழியிலே நடப்பவனும், அழியாத தருமங்களைப் பரிபாலிப்பவனும், மதுரமான வுணவுகளை உண்பவனும், காலத்தின் அளவை அறிந்து அதற்குத்தக்கபடி புசிப்பவனும் ஆவனென்று நளவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.(ரு௦)

பிங்கள.

தபசிதன வான்ஞானி சற்கருமஞ் செய்வோன்
சுபவாக் கியந்தனையே சொல்வோ—னிபமுள்ள
சங்கடமெல் லாந்தவிர்க்குஞ் சற்குணவா னாகப்
பிங்களவிற் றோய்ந்தவனைப் பேசு.

(இ-ள்.) தபசியும், திரவியவானும், ஞானியும், நல்லகருமங்களைச்செய்பவனும், சுபகரமான வாக்கியங்களையே சொல்பவனும், பழிப்பான பொல்லாங்குகளெல்லாவற்றையும் நிவிர்த்திசெய்யும் உத்தமகுணமுள்ளவனும் ஆவனென்று பிங்களவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ருக)

காலயுத்தி.

திரிகாலச் செய்திகளுந் தேரு நிபுணன்
குருவாக்கை யென்றுமுளங் கொள்வோ—னரிசூழு
ஞாலமிசைக் கீர்த்தியினை நாட்டுவோ னுமென்று
காலயுத்திச் சேர்ந்தவனைக் காண்.

(இ-ள்.) பூதபவிஷ்ய வர்த்தமானங்களில் நடக்குங் காரியங்களை அறியும் நிபுணனும், குருவாக்கை எப்போதும் எண்ணி நடப்பவனும்,

கடல்சூழ்ந்த உலகத்தில் தன் கீர்த்தியை ஸ்தாபிப்பவனும் ஆவனென்று காலயுத்திவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (ருஉ)

சித்தார்த்தி.

குருபத்தி யுஞ்சற் குணமுமுள்ள கோமான்
பெருகுதனம் பெற்றோன் பிரான்றன்—றிருவடியை
மெத்தார்த்தி யோடிறைஞ்சு மேலோ னெனவணங்கே
சித்தார்த்தி வந்தவனைச் செப்பு.

(இ-ள்.) குருவினிடத்தில் பத்தியும், நல்லகுணமும் உள்ள அரசனும், மிகுந்த பொருளுடையவனும், சராசரப்பொருட்குத் தலைவனாகிய கடவுளினது திருவடிகளை மிகுந்த அன்போடுவணங்கும் பெரியோனும் ஆவனென்று பெண்ணே நீ சித்தார்த்தி வருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (ருங)

ரௌத்திரி.

அன்னியநல் லாரை யணைந்துமகிழ்ந் திருப்போன்
கொன்னியலா மூர்க்ககுணங் கூடினோ—னன்ய
ருரைமதியைக் கேட்டொழுகு வோனு விரவுத்
திரிதனிற்சென் மித்தவனைத் தேர்.

(இ-ள்.) அன்னியஸ்திரீகளைப் புணர்ந்து மகிழ்ந்து வாழ்பவனும், பெருமையற்ற மூர்க்ககுணத்தையுடையவனும், பிறர்சொல்லும் புத்தியைக்கேட்டு நடப்பவனும் ஆவனென்று ரௌத்திரிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ருச)

துன்மதி.

வெள்ளறிவோன் யோக விகற்பமுள மாமானி
துள்ளிவிளை யாடுந் தொடர்புடையோ—னுள்ளமொடு
பொன்மருவும் பண்டத்தைப் போற்றுவோ னுமென்று
துன்மதியிற் றோய்ந்தவனைச் சொல்.

(இ-ள்.) அறிவில்லாதவனும், யோகபங்கமுள்ளவனும், மிகுந்த மானியும், குதித்து விளையாடுகின்ற முயற்சியுடையவனும், கருத்தோடு பொன்னினாற் செய்த வஸ்துவையும் பொருந்திய மற்றைப் பண்டங்களையும் காப்பாற்றுவோனும் ஆவனென்று துன்மதிவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ருரு)

துந்துபி.

அங்க முயர்ந்தோ னழகனதி போகவா
னெங்கும் பிரகாச மேய்ந்துளோன்—றுங்கமுள

பந்து ஜெனப்பிரியன் பாவலர்கட் கன்பனெனத்
துந்துபியிற் சார்ந்தவனைச் சூழ்.

(இ-ள்.) உன்னதமான தேகமுள்ளவனும், அழகனும், மெத்த போகவானும், எவ்விடத்துங் கீர்த்தியைப் பொருந்தினவனும், பரிசுத்தமுள்ள பந்துக்களிடத்திலும் வித்துவான்களிடத்திலும் நேசமுள்ளவனும் ஆவனென்று துந்துபிவருஷத்திற்பிறந்தவனைச்சொல்லுவாயாக.

## உருத்திரோற்காரி.

சத்தியவா னற்பிரபு சன்மார்க்கன் றன்னியவான்
வித்துவஜெ னக்கோட்டி மேவினோன்—மெத்தசமு
சாரிகுரு மேற்பத்தி சார்ந்தோனு ருத்திரோற்
காரியனைத் தானைக் கருது.

(இ-ள்.) உண்மைபேசுபவனும், நல்லபிரபுவும், நல்லொழுக்கமுள்ளவனும், வித்துவான்கள் கூட்டத்தைப் பொருந்தினவனும், மிகுந்த குடும்பியும், குருவினிடத்தில் பத்தியுள்ளவனும் ஆவனென்று உருத்திரோற்காரி வருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக. ()

## இரத்தாக்ஷி.

செம்மைநிறத் தேகன் சிவந்தவுரோ மன்றனுவி
லெம்மைவடுப் பெற்றோ னவாவுறுவோன்—பொம்ம
லிரத்தாட்சி யோன்விருதாச் சண்டைசெய்வோ னென்ன
விரத்தாட்சி யாண்டானை யெண்.

(இ-ள்.) சிவந்ததேகமும் சிவந்தமயிரும் உள்ளவனும், உடம்பில் அம்மைவடுவைப்பெற்றவனும், பேராசைப் படுபவனும், பொலிவாகிய இரத்தம்போலச்சிவந்த கண்களையுடையவனும், வீண்சண்டை செய்பவனும் ஆவனென்று இரத்தாக்ஷி வருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (௫அ)

## குரோதன.

உலுத்தன் குரோதி யுழைப்பாளி யென்று
நலப்புடைய மெய்யுரையா நாவோன்—வலுத்த
திரேகிபிறர் தேடுபொருளைக்கவர்வோ னாகக்
குரோதனசம் வற்சரனைக் கூறு.

(இ-ள்.) உலோபியும், குரோதமுள்ளவனும், பிரயாசப்படுபவனும், எப்பொழுதும் நல்ல உண்மையைப்பேசாதவனும், திடமான தேகமுள்ளவனும், பிறர்சம்பாதித்த திரவியத்தை அபகரிப்பவனும் ஆவனென்று குரோதனவருஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௫௯)

### அக்ஷய்.

எல்லாப் பொருளு மியைந்திருக்குஞ் சம்பன்ன
னெல்லாப் பொருள்களுமற் றில்லாதோன்—பொல்லாத
கட்சியைக்கைக் கொள்ளான் கடிந்துரைப்ப னென்றணங்கே
யட்சயவி லுற்றவனை யாய்.

(இ-ள்.) எல்லாப்பொருள்களாலும் நிறைந்திருப்பவனும், எல்லாப்பொருள்களும் இல்லாதவனும், பொல்லாதவழியிற் பிரவேசியாதவனும், கண்டிப்பானவார்த்தை சொல்பவனும் ஆவனென்று பெண்ணே நீ அக்ஷயவருஷத்திற் பிறந்தவனைச்சொல்லுவாயாக எ-று. (சுo)

---

## அயனபலன்.

### உத்தராயனம்.

யுத்தரங் கப்பிரியன் யூகமுபா யத்தியற்றிச்
சத்துருவை யோட்டிச் சயமுறுவோ—னித்தியமுஞ்
சுத்திபரன் ஞானநூல் சூழுந் தகையனென
வுத்ரா யனத்தானை யோது.

(இ-ள்.) சமர்செய்வதில் விருப்பமுள்ளவனும், வியூகங்களை உபாயத்தினலேகட்டிச் சத்துருக்களை ஓடச்செய்து வெற்றியை அடைபவனும், எப்பொழுதும் சுசிகரமுள்ளவனும், ஞானசாத்திரங்களை ஆராயுந் தன்மையுடையவனும் ஆவனென்று உத்தராயனத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (க)

### தக்ஷிணாயனம்.

சாகையினற் சீலன் றயவுநிறை காட்சியன்வே
தாகமபு ராணமிவை தானுணர்ந்தோன்—மோகமெனும்
பற்றற்ற ஞானி பரத்தினிலை தேர்பவனு
நற்றக்கி ணாயனனை நாடு.

(இ-ள்.) அழியாத நல்லசீலமும், கிருபை நிறைந்த பார்வையுள்ளவனும், வேதம் ஆகமம் புராணம் ஆகிய இவைகளைக் கற்றறிந்தவனும், மோகமென்றுசொல்லப்பட்ட பற்றுநீங்கிய ஞானியும், சிவத்தினிலையை விசாரிப்பவனும் ஆவனென்று நல்ல தக்ஷிணாயனத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உ)

---

# ருதுபலன்.

## வசந்தருது.

தசும்புடலீ டாயுகமுஞ் சார்ந்தவன்சிற் றுண்டி
மிசைந்திடுவன் வாசமணி மெய்ப்பன்—பசும்பா
லைசைந்தவனுச் சித்திரைவை காசிமதி கண்ணும்
வசந்தருது வந்தவனை வாழ்த்து.

(இ-ள்.) திரவியமும் தீர்க்காயுசும் பொருந்தினவனும், பலகாரங்களைத் தின்பவனும், வாசனைத்திரவியங்களைத் தேகத்திற் பூசிக்கொள்பவனும், பசுவின்பாலை விரும்பியுண்பவனும் ஆவனென்று சித்திரையும் வைகாசியும் ஆகிய இவ்விரண்டு மாதங்களுங்கூடிய வசந்தருதுவிற் பிறந்தவனைப்புகழ்ந்து சொல்லுவாயாக எ-று. (க)

## கிரீஷ்மருது.

மானிசம யோச்சிதமா வார்த்தைபகர் வோன்கனவான்
ஞானிமெலி வாருடல னல்லகுண—வானம்
விராய்க்குளிப்ப னென்றுனி யாடிமதி மேவுங்
கிரீஷ்மருது வோனைக் கிள.

(இ-ள்.) மானியும், சமயோசிதமாக வார்த்தைசொல்பவனும், கண்ணியமுள்ளவனும், ஞானியும், மெலிந்ததேகியும், நல்ல குணமுடையவனும், சலத்தில் முழுகிக்குளிப்பவனும் ஆவனென்று ஆனியும் ஆடியும் ஆகிய இவ்விரண்டு மாதங்களுஞ் சேர்ந்த கிரீஷ்மருதுவிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உ)

## வருஷருது.

துன்று சுசியுடையன் றூயதலத் தில்வசிப்பன்
பொன்றுமள வும்புசிப்பன் பொங்குவர்ப்பை—யென்று
வருமா வணிபுரட் டாதிமதி வாய்ந்த
வருஷருது வந்தவனை வாழ்த்து.

(இ-ள்.) அதிக சுசியுள்ளவனும், புண்ணியஸ்தலங்களிலே வாசஞ்செய்பவனும், சாகுமளவும் மிகுந்த உவர்ப்புப்பண்டங்களை விரும்பித் தின்பவனும் ஆவனென்று வராநின்ற ஆவணியும் புரட்டாதியும் ஆகிய இவ்விரண்டு மாதங்களும் பொருந்திய வருஷருதுவிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ங)

## சரருது.

நாகக் குபத்தினரை நாடியணை காமியுத்தி
யோகப் பெருமையினு ளெண்மகிப—னாகந்

திரமைப் பசிகார்த் திகைமாதஞ் சேர்ந்த
சாருதுவிற் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) மலையையொத்த முலைகளையுடைய ஸ்திரீகளை விரும்பிக் கூடுகிற காமியும், உத்தியோகப்பெருமையுள்ளவனும், நல்ல அரசனும் ஆவனென்று ஐப்பசியும் கார்த்திகையும் ஆகிய இவ்விரண்டு மாதங்களுஞ் சேர்ந்தசாருதுவிற்பிறந்தவனை உறுதியாகச்சொல்லுவாயாக.(௪)

ஏமந்தருது.

தண்ணிணரற் கூந்தலர்நே சன்சமர்த்த னெய்யுடல
னண்ணினரை யாதரிப்போ னற்பயிரன்—கண்ணியவான்
சுந்தரமா நோக்கனென மார்கழிதை துன்னியவே
மந்தருது வந்தவனை வாழ்த்து.

(இ-ள்.) குளிர்மையுள்ள மலர்களைச்சூடிய இருளையொத்த கூந்தலையுடைய ஸ்திரீகளிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனும், மிருதுவான்தேகியும், அடுத்தவர்களைச் சம்ரட்சணைசெய்பவனும், நல்ல மேழிச்செல்வனும், கனவானும், அழகிய கண்களையுடையவனும் ஆவனென்று மார்கழியும் தையும் ஆகிய இவ்விரண்டு மாதங்களுங்கூடிய ஏமந்தருதுவிற்பிறந்தவனைப் புகழ்ந்து சொல்லுவாயாக எ-று. (ரு)

சிசிரருது.

நன்னடைய னீரி னயந்தாடு வோன்சுசியன்
மன்னுமிசை தானணிந்த மாதீர—னென்னப்
பசுமையுறு மாசியொடு பங்குனிமா தஞ்சேர்
சிசிரருது வுற்றவனைத் தேர்.

(இ-ள்.) நல்ல நடக்கையுள்ளவனும், சலத்தில் விரும்பி விளையாடுபவனும், பரிசுத்தனும், நிலையான கீர்த்தியைத்தரித்த மகாதீரமுள்ளவனும் ஆவனென்று குளிர்மிகுந்த மாசியும் பங்குனியும் ஆகிய இவ்விரண்டு மாதங்களும்பொருந்திய சிசிரருதுவிற் பிறந்தவனை அறிவாயாக எ-று. (சு)

---

## மாசபலன்.

### சித்திரை.

வேதாகமத்தை விசாரணைசெய் வோன்றகப்பன்
மாதாவைப் பேணு மதிமகன்பூ—மீதாரு
மெத்தலமுங் கீர்த்தி யியைந்துமகிழ் வோனெனநற்
சித்திரையிற் சேர்ந்தவனைச் செப்பு.

(இ-ள்.) நான்கு வேதங்களையும் இருபத்தெட்டு ஆகமங்களையும் ஆராய்ந்தறிபவனும், தகப்பனையும் சிறந்ததாயையும் போஷிக்கும் புத்தியுள்ளபுத்திரனும், பூமியிலுள்ள எல்லாத்தேசங்களிலும் கீர்த்தியை ப்பொருந்தி மகிழ்பவனும் ஆவனென்று நல்ல சித்திரைமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (க)

## வை கா சி.

பற்பலநூ லுட்பொருளைப் பாங்குடனே கூறுகின்ற
விற்பனனெப் பாஷையுந்தேர் வேந்தனிவ—னற்படியிற்
செய்கா சுளதீரன் சீரியனென் றெண்ணுதலாய்
வைகாசி யானை வழங்கு.

(இ-ள்.) பலபல சாஸ்திரங்களிலுள்ள பொருளைச் சொல்லவேண்டியக்கிரமப்படி சொல்லுகின்ற பண்டிதனும், எல்லாப்பாஷைகளையும் அறிந்த அரசனும், உலகத்தில் நல்லவழியாற் சம்பாதித்த பொருளையுடைய தயிரியசாலியும், கண்ணியவானும் ஆவனென்று பெண்ணே நீ வைகாசிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உ)

## ஆ னி.

தீர்க்கா யுசுவுடைய சேய்களுடன் வாழ்தனவான்
வேர்க்காச் சினத்தோன் மிகுசமர்த்த—னீர்க்கூவி
லீனமடை யாவமைச்ச னீண்டுதிட முள்ளவனு
வானியவ தாரனையிங் காய்.

(இ-ள்.) தீர்க்காயுசு உள்ள புத்திரர்களுடன் வாழுந் திரவியவானும், அற்பகோபியும், மிகுந்த சாமர்த்தியத்தை யுடையவனும், கடல்சூழ்ந்த பூமியில்சிறந்த மந்திரியும், அதிதீரனும் ஆவனென்று ஆனிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (ங)

## ஆ டி.

தனவான் சுசீலன் றயாபரன்மாண் புள்ள
மனையா ளுடனே வசிப்போன்—கனிவோடு
கூடிமகிழ் தோகையர்கள் கூட்டத் தமர்வோனென்
றாடியிலுற் றானை யறி.

(இ-ள்.) திரவியவானும், பரிசுத்தனும், கிருபையுடையவனும், மாட்சிமையுள்ள மனைவியுடன் வாழ்பவனும், கனிகரத்தோடு கூடிமகிழும் ஸ்திரீகளுடைய கும்பலில் இருப்பவனும் ஆவனென்று ஆடிமாதத்திற் பிறந்தவனை அறிவாயாக எ-று. (ச)

### ஆவணி.

நற்பனவர் மேற்பத்தி நம்பிக்கை நாட்டுமேவ
னற்பரை யெப்போது மணுகியிடான்—றற்பரனை
யாவலொடு பூசைதுதி யாற்றுநெறி யாளனென
யாவணியிற் றோய்ந்தவனை யாடு.

(இ-ள்.) நல்ல பிராமணர்களிடத்தில் பக்தியும் விசுவாசமும் வைத்திருப்பவனும், ஈனர்களை எப்பொழுதுங் கூடாதவனும், பரமசிவனை ஆசையோடு பூசையும் தோத்திரமும் செய்யும் நெறியையுடையவனும் ஆவனென்று ஆவணிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

### புரட்டாதி.

பற்பலதே சத்துவளப் பந்தெரிவோ னங்கணைவோன்
றற்புகழுந் பேசுந் தகையுடையோன்—வற்பின்
முரட்டாட்டங் கோப முனிந்திடுந்தூ யோனைப்
புரட்டாதிப் போந்தவனைப் போற்று.

(இ-ள்.) பலபல தேசங்களின் வளப்பங்களை அறிபவனும், அத்தேசங்களிலே சஞ்சரிப்பவனும், தன்னைத்தானே புகழ்ந்து பேசுந்தன்மையுள்ளவனும், வலுமையான முரட்டுத்தனத்தையும் கோபத்தையும் நீக்கிவிடுஞ் சுத்தனும் ஆவனென்று புரட்டாதிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சு)

### ஐப்பசி.

சஞ்சலன் செந்நிறத்தோன் றுங்கரிய செய்கையோன்
பிஞ்சமுடை யோன்மதுரப் பான்மொழியாய்—நெஞ்சதனி
லெப்பொழுது மிட்டரே மெண்ணுகின்ற பாதகனென்
றைப்பசிவந் தானை யறை.

(இ-ள்.) சபலசித்தனும், சிவந்த நிறத்தையுடையவனும், சகிக்கக்கூடாத செயல்களைச்செய்பவனும், தரித்திரனும், மனதில் எப்போதும் கொடுமையை நினைக்கின்ற பாபியும் ஆவனென்று சுவைபொருந்திய பாலைப்போலும் இனிய மொழியையுடையவளே, நீ ஐப்பசிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (எ)

### கார்த்திகை.

தனவான் றடங்கண்ணன் றக்க சரீரி
கனமான செய்கைக்குக் கர்த்த—னினத்தாருட்
கீர்த்தியினு லேயொளிர்வன் கேளிருடன் வாழ்வனெனக்
கார்த்திகையிற் சேர்ந்தவனைக் காண்.

(இ-ள்.) திரவியவானும், விசாலமான கண்களையுடையவனும், மட்டதிட்டமான தேகியும், பெரியகாரியங்களைச்செய்யும் பிரபுவும், தன் ஜாதியார்க்குள் கீர்த்தியினாலே பிரகாசிப்பவனும், சுற்றத்தாருடன்கூடி வாழ்பவனும் ஆவனென்று கார்த்திகைமாதத்திற் பிறந்தவனைக் குறிப்பாயாக எ-று. (அ)

### மார்கழி.

அன்னபிதா வுக்கினிய னாசானை யெப்பொழுதுந்
தன்னிதயத் தேவைக்குஞ் சற்குணவான்—பொன்னைமிக
வார்வமொடார்ச் சிப்போ னறம்புரிவோ னாமென்று
மார்கழிமா தத்தானை வாழ்த்து.

(இ-ள்.) மாதாபிதாக்களுக்கு இனிமையாக நடந்துகொள்பவனும், குருவைச்சந்ததமும் மறவாமல் தன்மனதில் நினைத்துக்கொண்டிருக்கும் நல்லகுணமுள்ளவனும், பொருளைமிகவும் ஆசையோடு சம்பாதிப்பவனும், தருமத்தைச் செய்பவனும் ஆவனென்று மார்கழிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கூ)

### தை.

சஞ்சலமார் சித்தன் றனவான் குணசாலி
நைஞ்சவுட லன்வார்ந்த நாசியினா—னஞ்சநடைத்
தையலரைத் தான்பிரியான் றற்றுமழுக் காற்றினனாந்
தையிலிவண் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) கலக்கம்பொருந்திய நெஞ்சனும், திரவியவானும், விசாலமான குணமுள்ளவனும், மெலிந்ததேகியும், நீண்டமூக்கனும், அன்னத்தின்நடைபோலும் நடையையுடைய ஸ்திரீகளைவிட்டுப் பிரியாதவனும், மிகுந்த பொறாமையுள்ளவனும் ஆவனென்று தைமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக. எ-று. (கO)

### மாசி.

அதர்மனவி வேகிகுலத் தாசார மில்லா
னிதமுமிக னேடுகின்ற நெஞ்சன்—றதியறிந்து
பேசுமியல் பற்றோன் பிணியாள னென்றணங்கே
மாசியனைத் தோனை மதி.

(இ-ள்.) தருமஞ்செய்யாதவனும், மதிகேடனும், குலத்துக்குரிய ஆசாரமில்லாதவனும், எப்பொழுதும் விரோதத்தைத்தேடுகின்ற நெஞ்சுடையவனும், சமையத்தையறிந்து பேசுந்தன்மை இல்லாதவனும், நோயாளியும் ஆவனென்று மாசிமாதத்திற் பிறந்தவனை என்னுவாயாக எ-று. (கக)

### பங்குனி.

கானத்தி லேபிரியன் காழ்த்தவினை யோட்டுகின்ற
தானமுந் தன்மஞ்செய் தகையுடையோன்—மானினியே
மங்கலமார் வாக்கை மருவுமகி பாலனெனப்
பங்குனியிற் சேர்ந்தவனைப் பாடு.

(இ-ள்.) சுரகானத்தில் இஷ்டமுள்ளவனும், வயிரமான தீவினையைப்போக்குகின்ற தானத்தையும் தருமத்தையும் செய்யுங் கிருபையுடையவனும், மங்களகரம் பொருந்திய வாக்கையுடைய அரசனும் ஆவனென்று பெண்ணே நீ பங்குனிமாதத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கஉ)

---

## தேதிபலன்.

குளித்தலதி போசனத்தைக் கொள்ளலெவர்க் குஞ்சோ
றளித்தல் பயப்படுத லாக்கல்—களித்துவிருந்
துண்டல்பர வீட்சணத்தோ டோங்குசுகிப் பூர்த்தியின்மேற்
கொண்டொழுகல் பல்வையக் கூட்டு. (க)

கூட்டுதக யாத்ரை குடியிடம்விட் டேகறுய
ரோட்டுசுப யாத்ரைபரி யோக்கமுடன்—காட்டுகுலா
திக்கமூ ராதிக்கஞ் சேர்குடும்பா திக்கமொடு
தொக்கதுவ சாதிக்கத் தோய்வு. (உ)

தோயமுறுதேசா திக்கமனை மேற் சுளித்த
லோய்விறுபி லின்மே லுறுமோக—மாய்வதிலா
நித்திரையோ டொண்சயன நேர்ச்சிபர தாரநலந்
துய்த்த லொழியாத் துயர். (ங)

* துயல்பயண விக்கினமன் சூழ்ந்தியற்று தண்டந்
நயப்செய் விடநெருப்பாற் றுன்னும்—பயமுடனே
யோதுதனு ரோக மெனமுறையே யொண்ணுதலாய்
தேதிபல னாகுமெனத் தேர். (ச)

(இ-ள்.) நீராடலும், அதிகபோசனத்தைக் கொள்ளுதலும், யாசகர்யாவருக்கும் அன்னம் படைத்தலும், பயப்படுதலும், சமையல் செய்தலும், சந்தோஷித்து விருந்துண்ணலும், மேலான நோக்கமுடைத்தாதலும், மிருந்த சுகங்களை அனுபவித்தலும், வாகனத்தின் மீதேறிக்

* இவை நான்கும் குளகம். தண்டியலங்காரம். "குளகம் பலபாட்டொருவினை கொள்ளும்."

கொண்டு சஞ்சரித்தலும், பலவாகனங்களின் வாய்ப்பும், (அவற்றோடு) எண்ணப்பட்ட தீர்த்தயாத்திரை செய்தலும், ஸ்தானப்ரஷ்ட மாகுத லும், துன்பத்தைப் போக்குகின்ற மங்கள யாத்திரைசெய்தலும், வாக னுதிக்கமும் எடுத்துச் சொல்லப்பட்ட குலாதிக்கமும், கிராமாதிக்கமு ம் பொருந்திய குடும்பாதிக்கமும், துவசாதிக்கத்தின் சித்திப்பும், சல ம் பொருந்திய தேசாதிக்கமும், மனைவிமேற் கோபித்தலும், ஒழியாத நெடுந்தூக்கமும், மனைவியிடத்து அதிக மோகமும், சொர்ப்பனமுதலிய அவஸ்தையற்ற நித்திரையும், நல்ல சயனத்தின் வாய்ப்பும், பிறன் இல்லாளது இன்பத்தை அனுபவித்தலும், தீராத துக்கமும், செல்லும் பிரயாணத்தடையும், அரசனெண்ணிச்செய்யுந் தண்டனையும், து ன்பத்தைச்செய்யும் விஷத்தாலும், அக்கினியினாலும் வரும் பீதியும், சொல்லப்பட்ட சரீர வியாதியும் என முறையாக முப்பது தேதிக்கும் பலனாகும் என்று பெண்ணே நீ தெளிவாயாக எ-று.

---

## வாரபலன்.

### ஆதிவாரம்.

மாரனைப்போ லும்மழகன் மண்ணிற் பிரசித்தன்
வீரனுறு பொன்னுடையோன் மெல்லியலாய்—தேருமறை
வாயினரைப் பூசிக்கு மன்சிவந்த கண்ணனென
ஞாயிறவ தாரனைநீ நாட்டு.

(இ-ள்.) மன்மதனை ஒத்த அழகனும், பூமியில் பிரக்கியாதியுடை யவனும், பராக்கிரமனும், மிகுந்த திரவியவானும், ஆராயப்பட்டவேத த்தை வாயினிடத்துடைய பிராமணர்களைப் பூசைசெய்யும் அரசனும், சிவந்த நேத்திரமுள்ளவனும் ஆவனென்று பெண்ணே நீ ஆதிவாரத் திற் பிறந்தவனை உறுதியாகச் சொல்லுவாயாக எ-று. (க)

### சோமவாரம்.

விரதமனுட் டிப்போன் வெகுமானி தர்ம
பரிபா லனம்புரிவோன் பாவாய்—திரைபுடையிற்
றங்கவனி மேற்புகழைத் தாபிப்போ னுமென்று
திங்கடனிற் றோய்ந்தவனைத் தேர்.

(இ-ள்.) விரதங்களை அனுட்டிப்பவனும், மிகுந்த மானமுடைய வனும், தருமத்தைப் பரிபாலிப்பவனும், கடல்சூழ்ந்த பூமியின்மேல் கீர்த்தியை நாட்டுபவனும் ஆவனென்று பெண்ணே நீ சோமவாரத் திற் பிறந்தவனைத் தெளிவாயாக எ-று. (உ)

### மங்களவாரம்.

சொன்ன மொழிதவர்வோன் சூதகத்த னேசுமற்பன்
மன்னுவரு மானமிலான் மாவபத்த—னென்னரத்தச்
செவ்வாய்க் கயனயனச் செந்திருவை யொப்பவளே
செவ்வாய்க் கிழமையனைச் செப்பு.

(இ-ள்.) வாக்குத்தத்தத்தை நிறைவேற்றாதவனும், வஞ்சகனும், இகழப்பட்ட ஈனனும், நிலையான வருமான மில்லாதவனுங், சுத்த பொய்யனும் ஆவனென்று, இரத்தம்போன்ற சிவந்த வாயையும், கய ல்போன்ற கண்களையும் உடைய இலட்சுமியை ஒப்பவளே நீ மங்கள வாரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௩)

### புதவாரம்.

சத்தியவான் விப்பிரரைச் சந்ததமும் பூசிப்போன்
புத்திமா னற்கருமம் போற்றுவோன்—சுத்த
பதமருள் கர்த்தாவைப் பராவுவோ னாகப்
புதனிடை வந்தானைப் புகல்.

(இ-ள்.) பொய் சொல்லாதவனும், பிராமணர்களை எப்பொழுதும் பூசிப்பவனும், புத்திமானும், நல்ல காரியங்களைக் கருத்தோடு செய்பவ னும், மேலான பதவியை அருளுகின்ற கடவுளை எப்பொழுதும் ஆரா திப்பவனும் ஆவனென்று புதவாரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

### குருவாரம்.

மகந்தன்னைச் செய்வோன் மதியூகி சீலன்
மகந்தன்னிற் சத்தியவான் றர்மி—மிகுந்த
கியாதியுள மன்னரசர் கேண்மையினு னென்று
வியாழமதி லுற்றவனை விள்.

(இ-ள்.) யாகங்களைச் செய்பவனும், விவேகியும், ஒழுக்கமுடைய வனும், பூமியில் ஒருபோதும் பொய் பேசாதவனும், தருமங்களைச் செ ய்பவனும், மிகுந்த புகழுள்ள அரசனும், பல இராசாக்களுடைய சிநே கத்தை யுடையவனும் ஆவனென்று குருவாரத்திற் பிறந்தவனைச் சொ ல்லுவாயாக எ-று. (௫)

### சுக்கிரவாரம்.

தனதானியஞ் செறிந்த சம்பத்து வாய்ந்தோன்
மனுநெறியின் மண்ணளிக்கு மன்னன்—கனகரும
முள்ளியியற்றுங் குணவா னென்னவொளி ரிழையாய்
வெள்ளியில் வந்தானை விளம்பு.

(இ-ள்.) தனமும் தானியமு மிகுந்த ஐசுவரியத்தைப் படைத்தவனும், மனு நெறியின்படி பூமியை ஆளுகின்ற அரசனும், மேலான காரியங்களை யோசித்துச் செய்கின்ற குணவானும் ஆவனென்று பிரகாசிக்கின்ற ஆபரணத்தை யுடையவளே நீ சுக்கிரவாரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சு)

### சனிவாரம்.

பரநாரி நேசன் பலவீன தேகன்
விரத மியற்றுத விழலன்—றரையிற்
கனமில் வினத்துக் கருமியென மாதே
சனியிற் பிறந்தவனைச் சாற்று.

(இ-ள்.) பரஸ்திரீயினிடத்துப் பட்சமுள்ளவனும், வலியற்ற சரீரத்தையுடையவனும், விரதங்களை அனுட்டிக்காத வீணனும், பூமியில் பெருமையில்லாத பந்துக்களையுடைய பாபியும் ஆவனென்று பெண்ணே நீ சனிவாரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (எ)

---

## பக்ஷபலன்.

### சுக்கிலபக்ஷம்.

தர்மகுண சீலன் றயையுள்ளோன் புத்திமான்
மர்மமிலாத் தூமனத்தன் மாதனவான்—கர்மபரி
பக்குவனும் போகியெனப் பாகைநிக ரின்மொழியாய்
சுக்கிலபக் கோற்பவனைச் சொல்.

(இ-ள்.) தர்ம சிந்தையும் ஒழுக்கமும் கிருபையும் உள்ளவனும், விவேகியும், களங்கமில்லாத பரிசுத்தமான மனதுடையவனும், மிக்க தனாட்டியனும், காரியங்களை வெகுபக்குவமாகச் செய்பவனும், போகங்களை அனுபவிப்பவனும் ஆவனென்று, கற்கண்டைப்போலு மினிய மொழியையுடையவளே நீ பூர்வபக்ஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (க)

### கிருஷ்ணபக்ஷம்.

சுயகாரிய வாதி சுகமில்லா னீச
னயமில்வச னன்பந்து நாசன்—பயமின்
முரட்டுக் குணமுடைய மூர்க்கனெனத் தோகாய்
கிருட்டிண பக்கத்தாற் கிள.

(இ-ள்.) தன்னுடைய காரியத்தில் சாக்கிரதையுள்ளவனும், கஷ்டப்பிராணியும், அனுசாரனும், கடுஞ்சொல்லனும், குடும்பநாசனும்,

மிகுந்த முரடனும் ஆவனென்று பெண்ணே நீ அமரபக்ஷத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௨)

---

## திதிபலன்.

### பிரதமை.

எல்லாக் கருமமு மெண்ணிப் புரிமதியோன்
சல்லாப வாக்கன் றனவந்த—னல்லாய்
ததற்படச் சீராக்குந் தகுதியுடை யோனு
முதற்றிதியிற் போந்தவனை முன்.

(இ-ள்.) எல்லாக் காரியங்களையும் யோசித்துச் செய்கின்ற புத்திமானும், யாரிடத்துஞ் சந்தோஷமாகப் பேசுபவனும், தனவானும், நிலைப்படும்படி கீர்த்தியைச்செய்கின்றநடுவுநிலைமை யுடையவனும் ஆவனென்றுபெண்ணே நீபிரதமைத் திதியிற் பிறந்தவனைஎண்ணுவாயாக.

### துதியை.

கீர்த்திமான் சத்தியவான் கேதமிலாச் செய்கையான்
பூர்த்தியாந் தன்னினத்தைப் போஷிப்பன்—வார்த்தைத்
திதியுடையோன் மன்பொருளைச் சேகரிப்ப னென்று
துதியையிலே தோய்ந்தவனைச் சொல்.

(இ-ள்.) மிகுந்த புகழையுடையவனும், பொய்பேசாதவனும், குற்றமற்ற தொழில்களைச் செய்பவனும், நிறைந்த தன் பந்துஜனங்களை இரட்சிப்பவனும், வாக்கு நிலையுடையவனும், மிகவும் பொருளைச் சேர்ப்பவனும் ஆவனென்று துதியைத் திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௨)

### திருதியை.

புண்ணியவாக் குள்ள புரவலன்பீ தன்சில
னெண்ணுங் கரும மியற்றிடுவோன்—மண்ணிற்
றிருப்பணியைச் செய்துவைக்குந் திண்ணியனு மென்னத்
திருதியையிற் சேர்ந்தவனைத் தேர்.

(இ-ள்.) சுபாஷிதமுள்ள அரசனும், அச்சமுற்றவனும், சுத்தமுள்ளவனும், நினைக்குங் காரியங்களைச்செய்து முடிப்பவனும், உலகத்தில் தேவாலயங்களைக் கட்டிச் சந்தோஷிக்கின்ற வலிய தேகனும் ஆவனென்று திருதியைத்திதியிற் பிறந்தவனை மதிப்பாயாக எ-று. (௩)

### சதுர்த்தி.

யாத்திரையே போவ னலகிறெழில் செய்வனன்பன்
பாத்திரநோக்கித் தருமம் பண்ணுவன்வேல்—சீத்து

மதர்த்தவிழி யாய்மந் திரவாதி யாகச்
சதுர்த்தியிடைச் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) பலதேசங்களிற் சஞ்சரிப்பவனும், அளவில்லாத காரியங்களைச் செய்பவனும், யாவரிடத்தும் நேசமுள்ளவனும், பாத்திரமறிந்து தருமத்தைப் பண்ணுபவனும், மந்திரவாதியும் ஆவனென்று, வேலைத்தரத்தி மதர்த்த விழியை யுடையவளே நீ சதுர்த்தித் திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௪)

பஞ்சமி.

சலனமதி யுள்ளவன்வே தாகமந் தேர்வோன்கோ
மலவுடல னெய்யவிடை மாதே—புலகினிடை
வஞ்சியரைக் கூடிமகிழ் மாகாமி யாமெனவே
பஞ்சமியில் வந்தானைப் பார்.

(இ-ள்.) சஞ்சலபுத்தியுள்ளவனும், வேதாகமங்களை ஆராய்பவனும், மிருதுவான தேகமுடையவனும், உலகத்தில் ஸ்திரீகளைச் சேர்ந்து மகிழ்கின்ற மிகுந்த காமியும் ஆவனென்று, நுண்ணிய இடையையுடைய பெண்ணே நீ பஞ்சமித் திதியிற் பிறந்தவனை எண்ணுவாயாக.

சஷ்டி.

தேகமெலி வுள்ளோன் றேசமெச்சும் பிரபு
வாகையுறு மன்னவர்சன் மானத்தோன்—வேகமொடு
கிட்டுர மாஞ்சினமு நேர்ந்தவனு மென்றுமதி
சட்டியினிற் றோய்ந்தவனைத் தான்.

(இ-ள்.) இளைத்த சரீரமுள்ளவனும், தேசத்தார் கொண்டாடுகின்ற பிரபுவும், வெற்றியைப்பொருந்திய அரசர்களா லுபசரிக்கப் படுபவனும், அவசரமும் கொடிய கோபமுமுள்ளவனும் ஆவனென்று சஷ்டித்திதியிற் பிறந்தவனை மதிப்பாயாக எ-று. (௬)

சப்தமி.

காடினியாம் வாக்யன் கபரோகி மாபலவா
னீடுசபாக்கிர னேமியோன்—பீடுடனே
யத்தமதைத் தேடு மருளுடையோ னண்டகையாச்
சத்தமியி லுற்றவனைச் சாற்று.

(இ-ள்.) கடினமான வார்த்தையைச் சொல்பவனும், க்ஷயரோகியும், மிகுந்த பலமுள்ளவனும், பெரிய சபையில் அக்கிரகண்ணியனாயிருப்பவனும், அரசனும், பெருமையோடு திரவியத்தைச் சம்பாதிக்கின்ற தயாளனும், ஆண்டன்மையுள்ளவனும் ஆவனென்று சப்தமித்திதியிற்பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௭)

## அஷ்டமி.

காமாந்த காரன் கபரோகி புத்ரருள
சீமான் றிருவமருஞ் செங்கோலன்—பூமீது
விட்டகலாப் பேராசை மேவினு னென்றணங்கே
யட்டமியிற் சார்ந்தவனை யாய்.

(இ-ள்.) காமுகனும், க்ஷயரோகியும், புத்திரரையும் பிறவிச்செல்த்தையும் உடையவனும், இலட்சுமி விரும்பி வாசஞ்செய்யும்படி செங்கோலைச் செலுத்தும் அரசனும், உலகத்தில் நீங்காத அவாவையுடையவனும் ஆவனென்று, பெண்ணே நீ அஷ்டமித் திதியிற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (அ)

## நவமி.

பெருபிர சித்தன் பெருத்த சரீரி
தருமனைவி புத்திரரைச் சாரான்—மிகவுங்
குவவுமுலை வேசியரைக் கூடியிருப் போனு
நவமியிற்சென் மித்தவனை நாட்டு.

(இ-ள்.) மிகப் பிரபலமானவனும், ஸ்தூலதேகியும், தனக்குத்தகுந்த பெண்சாதி பிள்ளைகளைச் சார்ந்திராமல் மிகவும் விலைமாதர்களைச் சேர்ந்து அவர்களோடு வசிப்பவனும் ஆவனென்று நவமித்திதியிற் பிறந்தவனை உறுதியாகச் சொல்லுவாயாக எ-று. (கூ)

## தசமி.

வண்மையுள சீலன் வாக்கு நிலைமையோ
னண்ணுமனை சேயிவர்பா னட்டமுளோன்—மண்ணி
னிசமான தர்மி நிதியாள னென்க
தசமியவ தாரனைத் தான்.

(இ-ள்.) உண்மையான ஒழுக்கமுள்ளவனும், வாக்குப் பிசகாதவனும், பொருந்திய பெண்சாதி பிள்ளை ஆகிய இவர்களிடத்தில் விருப்பமுள்ளவனும், பூமியில் உறுதியான தருமத்தைச் செய்பவனும், தனவானும் ஆவனென்று தசமித்திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

## ஏகாதசி.

வேதப் பிராமணர்பால் விஸ்வாசன் மாதனவான்
பேதமிலா வேலைவலாட் பெற்றிருப்பா—னீதிபரன்
வாகான செய்கைபுரி மானவனு மென்றுநல்லா
யேகாதசி யானை யெண்.

(இ-ள்.) வேதத்தை யோதும் பிராமணர்களிடத்தில் அன்புடையவனும், மிகுந்த திரவியவானும், இஷ்டப்படி நடக்கும் வேலைக்கார

மையுடைத்தா யிருப்பவனும், நீதிமானும், அழகான செயல்களைச் செய்பவனும் ஆவனென்று, பெண்ணே நீ ஏகாதசித்திதியிற் பிறந்தவனைக் கருதுவாயாக எ-று. (௧௧)

துவாதசி.

புண்ணியமே செய்யும் புரவலனற் சீல
னெண்ணிறன தான்யமிவை யெய்தினேன்—மண்ணா
னவினகரு மத்தைத்தா னடிமுடிப் போனைத்
துவாதசியிற் றோய்ந்தவனைச் சொல்.

(இ-ள்.) தருமத்தைச் செய்கின்ற அரசனும், நல்ல ஒழுக்கமுடையவனும், அளவற்ற தனதானிய சம்பத்தைப் பெற்றவனும், உலகத்தில் புதுமையான காரியங்களை யோசித்துச்செய்து நிறைவேற்றுபவனும் ஆவனென்று துவாதசித்திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.

திரயோதசி.

உலுத்தன் றனவா னுறவில்லாக் கர்மி
கலகலத்த மாந்த ரீகத்திற்—பலத்த
பிரயாசங் கொண்டு பெருமையுறு வோனைத்
திரயோ தசியானைத் தேர்.

(இ-ள்.) உலோபியும், திரவியவானும், உறவின்முறையில்லாத பாபியும், பயனற்ற மாந்தரீகத்தில் மிகுந்த வருத்தத்தை எடுத்துக்கொண்டு பெருமையை அடைபவனும் ஆவனென்று திரயோதசித்திதியிற் பிறந்தவனைத் தெளிவாயாக எ-று. (௧௩)

சதுர்த்தசி.

அசலார்தஞ் சொத்தை யபகரிக்குஞ் சித்தன்
விசுவாசம் யாரிடத்து மேவான்—பிசகே
பிதற்றிடுவன் மானே பெருங்கோபி யென்று
சதுர்த்தசியிற் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) அன்னியருடைய பொருளை அபகரித்துக்கொள்பவனும், யாவரிடத்தும் விசுவாசத்தை வையாதவனும், பிறருடைய குற்றங்களையே எடுத்துப் பேசுபவனும், மிகுந்த கோபியும் ஆவனென்று பெண்ணே நீ சதுர்த்தசித்திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.()

பௌரணமி.

வித்தைபுத்தி யுள்ளவடல் வேந்தன்மிகு சாந்தனென்றுஞ்
சத்தியத்தி னீங்காச் சரித்திரத்தோ—னித்தலத்திற்
காருணிய னெஞ்சிற் கபடமிலா னென்றணங்கே
பூரணைபுற் றானைப் புகல்.

(இ-ள்.) வித்தையும் புத்தியும் உள்ள கொற்றவனும், மிகுந்த பொறுமையுடையவனும், எப்பொழுதுஞ் சத்தியத்தினின்றுந் தவறு த ஒழுக்கத்தையுடையவனும், இவ்வுலகத்தில் தயாளனும், மனதிற் கள்ளமில்லாதவனும் ஆவனென்று பெண்ணே நீ பூரணைத்திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௫)

அமாவாசி.

உக்கிரனென் டோளிபரி யூர்திமுற்றெய்வந் தொழுவன்
றக்கமறை சாற்றிவசியஞ் செய்வன்—மிக்க
விமான மியற்றியின்பு மேவுவனு மென்ன
வமாவாசி யானை யறை.

(இ-ள்.) வீரபத்திரன் காளி துர்க்கை முதலிய உக்கிரமுள்ளதெய்வங்களைப் பூசிப்பவனும், தகுந்த மந்திரங்களை உச்சரித்துப் பிறரை வசியம் பண்ணுபவனும், அநேகமான விமானங்களைச் செய்வித்துச் சந்தோஷிப்பவனும் ஆவனென்று அமாவாசித் திதியிற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௬)

---

## நக்ஷத்திரபலன்.

### அச்சுவினி.

சீமான் றனவான் சிறப்புடைய மேதாவி
கோமான் மிகுந்த குணவானிப்—பூமே
லிசையுறுவன் றேசாபி மானியா மென்க
வசுவினியில் வந்தவனை யாய்ந்து.

(இ-ள்.) இலட்சுமிகரமுள்ளவனும், திரவியவானும், சிறந்த அறிஞனும், அரசனும், மிகுந்த நல்லகுணத்தையுடையவனும், இவ்வுலகத்தில் புகழைப் பெறுபவனும், தன் தேசத்தார்மேல் அபிமானமுள்ளவனும் ஆவனென்று யோசித்து அச்சுவினிநட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧)

### பரணி.

காட்டிகமாந் தேகன் சாசகுண வாள
னீட்டியதன் றென்று நினைந்திடா—னட்டிற்
கருவம் படைத்தவன்மா காமியா மென்று
பரணிநா ளோனைப் பகர்.

(இ-ள்.) காம்பீரமான தேகியும், இனியகுணமுடையவனும், பிறர்தனக்குச்செய்த நன்றியைச் சிறிது மெண்ணாதவனும், உலகத்தில்

அகங்காரியும், மிகுந்தகாமுகனும், ஆவனென்று பரணி நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௨)

கார்த்திகை.

வாக்ஜாலகன் றனவான் வாதத்திலே பிரியன்
மூர்க்கன் படிப்பறியான் மூண்டபகற்—றூக்கமுளன்
பூர்த்தியாப் பொய்புகன்று பொன்னைக் கவர்வனெனக்
கார்த்திகைநாள் வந்தவனைக் காண்.

(இ-ள்.) வாயாடுபவனும், திரவியவானும், இரசவாதத்திலே விருப்பமுள்ளவனும், கோபியும், வித்தையைக்கற்றுணராதவனும், பகலிலே மிகுந்த நித்திரையை யுடையவனும், மிகுதியாகப் பொய்யைப்பேசிப் பிறர்பொருளை அபகரிப்பவனும் ஆவனென்று கார்த்திகை நட்சத்திரத்திற் பிறந்தவனைக் குறிப்பாயாக எ-று. (௩)

உரோகணி.

பால்வெண்ணெ யுண்போன் பரநாரியர் பிரியன்
மேல்விலாசப் புருவன் மெய்ஞ்ஞானி—வேலைத்
தராதிபர் நேசன் சொற்றவறு தவனு
வுரோகணிநா ளுற்றவனை யோர்.

(இ-ள்.) பாலையும் நெய்யையும் விரும்பி உண்பவனும், அன்னியஸ்திரீகளிடத்தி லிச்சையுள்ளவனும், மேலே அகன்ற புருவத்தையுடையவனும், தத்துவஞானியும், கடல்சூழ்ந்த பூமியையாளும் அரசர்களுக்கு அன்பனும், வாக்குநிலையுள்ளவனும் ஆவனென்று உரோகணி நட்சத்திரத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௪)

மிருகசீரிடம்.

நற்புத்தி மான்குஞ்சி நன்குடனே காமமுளன்
பற்பலதே சந்திரியும் பண்பாளன்—புற்சிரங்கு
கூருடலன் வேவியலைக் கொள்கரத்த னுமிருக
சீரிடநாட் சேர்ந்தவனைச் செப்பு.

(இ-ள்.) நல்ல விவேகியும், குடுமியழகையும் ஆசையையுமுடையவனும், பலபல தேசங்களிற் சஞ்சரிக்கும் இயல்புள்ளவனும், புல்லிய சிரங்கு செறிந்த தேகியும், வேலினது சாயலைக்கொண்ட கையையுடையவனும் ஆவனென்று மிருகசீரிட நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௫)

திருவாதிரை.

திடத்தசரீ ரன்சீலன் சீறுசின முள்ளோன்
படித்தலத்தி னட்பியற்றும் பாங்கன்—கிடைத்த

பொருடேடிக் காப்பாற்றும் புத்தியிலா னென்னத்
திருவா திரையானைத் தேர்.

(இ-ள்.) வலுத்த தேகியும், பரிசுத்தனும், சீறுகின்ற கோபமுள்ளவனும், உலகத்தில் பிறரிடத்திற் சிநேகஞ்செய்யும் உரிமையையுடையவனும், தனக்குக் கிடைத்த பொருளைக் காப்பாற்றும் விவேகமில்லாதவனும் ஆவனென்று திருவாதிரை நட்சத்திரத்திற் பிறந்தவனைத் தெளிவாயாக எ-று. (௬)

## புனர் பூசம்.

அந்தரங்கத்த னதிகதன வான் காமி
விந்தைமலர்க் கையான்மா வித்துவான்—சிந்தை
மனதுடையன் பித்தன் மகாகீர்த்தி மானுப்
புனர்பூச நாளோனைப் போற்று.

(இ-ள்.) மருமியும், மிகுந்த செல்வனும், ஆசையுள்ளவனும், புதியதாமரைப் பூப்போலுங் கரத்தையுடையவனும், சிறந்த பண்டிதனும், கிலேசத்தை மனதினிடத்துடையவனும், பித்ததேகியும், மகாப்ரசித்தனும் ஆவனென்று புனர்பூச நட்சத்திரத்திற் பிறந்தவனைப் புகழ்ந்து சொல்லுவாயாக எ-று. (எ)

## பூசம்.

பூஜா துரந்தரன் பூஜிதன் மாதனவான்
ராஜாதி ராஜ ரிரக்திபுளன்—மாஜால
னுசைபிற்றன் னீன்றோரை யாதரிப்போ னென்றணங்கே
பூசமணாக் தோனைப் புகல்.

(இ-ள்.) அரி அர பூஜை செய்தலை மறவாதவனும், கனவானும், அதிக தனுட்டியனும், இராஜர்களுடைய நேசத்தையுடையவனும், சிறந்த மாயவித்தையைச் செய்பவனும், ஆசையோடு தன்னைப் பெற்ற தாய் தந்தையரை இரட்சிப்பவனும் ஆவனென்று பெண்ணே நீ பூசநட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (அ)

## ஆயிலியம்.

கண்டவற்றைத் தின்பன் கபடியெவர்க் குங்கலங்கா
திண்டன் மிகுந்த வெகுளியினன்—கண்டிதமா
ஞாயமதைச் சொல்வ னயனகாம் பீரியனென்
றாயிலியத் தார்ந்தவனை யாய்.

(இ-ள்.) கண்ட பண்டங்களைத்தின்பவனும், தன் கருத்தைப் பிறர்க்கொளிப்பவனும், எவருக்கும் அஞ்சாத திண்ணியனும், அதிககோபியும், கண்டிப்பாக நியாயத்தைச் சொல்பவனும், பெருத்த கண்களை

யுடையவனும் ஆவனென்று ஆயிலிய நட்சத்திரத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௯)

மகம்.

புண்ணியவான் மானி புருஷோத் தமனதிக
கண்ணியவா னுய்ந்தெடுத்த கல்விமான்—மண்ணின்
மிகுமழகன் வார்த்தை மிதமாச் சொல்வோனு
மகவுடு பிறந்தவனை வாழ்த்து.

(இ-ள்.) தருமஞ்செய்பவனும், அபிமான முள்ளவனும், உத்தமபுருஷனும், மிக்க கனவானும், நூல்களை நன்ருகப் படித்தறிந்த பண்டிதனும், பூமியில் மகாசுந்தரனும், மிதமாக வார்த்தையுரைப்பவனும் ஆவனென்று மகநட்சத்திரத்திற் பிறந்தவனைப் புகழ்ந்து சொல்லுவாயாக.

பூரம்.

பல்லழகன் சபலன் பன்னுமதி கேடனுரை
சொல்வன்மிகு சமர்த்தாத் தோகையரைப்—புல்லியெங்கே
நேரமுமே நீங்கா னெடிய தியாகியெனப்
பூரமணைந் தோனைப் புகல்.

(இ-ள்.) அழகிய தந்தங்களையுடையவனும், சபலசித்தனும், துற்புத்தியுள்ளவனும், அதிசமர்த்தாக வார்த்தையாடுபவனும், ஸ்திரீகளை எந்நேரமுங்கூடி அவரைவிட்டுப் பிரியாதவனும், அதிக உதாரியும் ஆவனென்று பூரநட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.

உத்திரம்.

நன்றிமற வாதநெஞ்ச னல்லகுணம் படைத்தோ
னென்றுமமே யோக மிசைந்தவன்பேர்—குன்ருமற்
புத்தியில்யோ சித்தியல்வோன் போற்றுமபி மானியென
வுத்திரநா ளுற்றவனை யோர்.

(இ-ள்.) பிறர் தனக்குச்செய்த உபகாரத்தை என்றும் நினைப்பவனும், நல்லகுணமுள்ளவனும், யோகவானும், தன்கீர்த்தி அழியாதபடி மனதில் யோசித்து நடப்பவனும், அபிமான முள்ளவனும் ஆவனென்று உத்திர நட்சத்திரத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௧௨)

அஸ்தம்.

நற்கருமஞ் செய்வ னயமெவர்பா லும்முரைப்போன்
விற்பனன்பூங் கோதாய் மிகுகாமி—பொற்பணியும்
வித்தமுமுள் ளோனெடிய மேம்பாட்டோ னுமெனவே
யத்தமதில் வந்தவனை யாய்.

(இ-ள்.) சற்காரியங்களைச் செய்பவனும், யாவரிடத்தும் இனிய வார்த்தையைச் சொல்பவனும், வித்துவானும், மிகுந்த ஆசையுடைய வனும், பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களும் திரவியமும் உள்ளவனும், அதிக பிரபலியனும் ஆவனென்று பூவையணிந்த கூந்தலையுடையவளே நீ அஸ்த நட்சத்திரத்திற் பிறந்தவனை மதிப்பாயாக எ-று.

### சித்திரை.

நடையிற் கதியுடைய னற்கருமஞ் செய்வோன்
மடியின் முகத்தின் மறுவன்—புடவிதனிற்
சுத்த மருமிபிறர் தோகையரை வீழ்பவனுச்
சித்திரையிற் சேர்ந்தவனைத் தேர்.

(இ-ள்.) நடக்கும்போது வேகமாக நடப்பவனும், நல்ல காரியங்களைச் செய்பவனும், வயிற்றிலு முகத்திலும் மச்சத்தையுடையவனும், உலகத்தில் மிகுந்த மருமியும், அன்னியர்களுடைய ஸ்திரீகளை விரும்புகிறவனும் ஆவனென்று சித்திரை நட்சத்திரத்திற் பிறந்தவனைத் தெளிவாயாக எ-று. (௧௪)

### சுவாதி.

தெய்வமுபா சித்தன் றிடதேகி பாக்கியவான்
வைவளரு மாயுதங்கை வைத்திடுவன்—பொய்விளம்பான்
சாதலூறு மட்டுந்தாய் தந்தையர்பா லன்புளனுச்
சோதியிடைத் தோய்ந்தவனைச் சொல்.

(இ-ள்.) தெய்வங்களை வழிபடுவோனும், வலுத்த சரீரத்தையுடையவனும், திரவியவானும், கூர்மைபொருந்திய ஆயுதத்தைக் கையிற்பிடித்திருப்பவனும், மெய்பேசுபவனும், சாமளவும் தன்னைப் பெற்றோரிடத்தில் பட்சமுள்ளவனும் ஆவனென்று சோதி நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௫)

### விசாகம்.

கீதநட மாதியிடைக் கேண்மைமிக வைத்திருப்பன்
சூதன் பரிகாசச் சொல்லறைவன்—போதி
விசாவனைய கூந்தலாய் நீள்யூகி யென்று
விசாகமதி லுற்றவனை விள்.

(இ-ள்.) சங்கீதம் நாட்டிய முதலியவைகளில், இட்டத்தை மிகவும்வைத்திருப்பவனும், வஞ்சகனும், பரிகாசவார்த்தைகளைச் சொல்பவனும், மிகக்கூரிய புத்தியுள்ளவனும் ஆவனென்று, இராவையொத்த பூவையணிந்த கூந்தலையுடையவளே நீ விசாக நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௬)

### அனுஷம்.

அன்னியர்பெண் ணேச னடைக்காய் நனிதின்பன்
மன்னவர்சன் மானனுயர் வாக்குடையன்—மின்னு
தனவான் சுகவான் றமரையளிப் போனு
வனுடமணேந் தானே யறை.

(இ-ள்.) பிறர் மனைவியரிடத்து விருப்பமுள்ளவனும், வெற்றிலையும் பாக்கும் மிகவுந் தின்பவனும், அரசர்களா லுபசரிக்கப்படுபவனும், மேலானவாக்கை யுடையவனும், பிரகாசிக்கின்ற பொருளுள்ளவனும், சுகத்தை யனுபவிப்பவனும், பந்துக்களை இரட்சிப்பவனும் ஆவனென்று அனுஷ நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.()

### கேட்டை.

பரநாரி தோளைப் பரிசிப்பன் வேகி
பிரபுவெனும் பேர்படைப்பன் பெண்ணே—தருமத்தை
நாட்டவர்கண் மீக்கூற நாட்டிடுவெ னுமெனவே
கேட்டையில்வந் தானைக் கிள.

(இ-ள்.) அன்னியருடைய ஸ்திரீகளைப் புணர்பவனும், தீவரமுள்ளவனும், பிரபுவென்று சொல்லப்படும் பெயரையடைபவனும், தன்தேசத்தார் புகழும்படி தருமத்தை நிலைப்படுத்துபவனும் ஆவனென்று, பெண்ணே நீ கேட்டை நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

### மூலம்.

என்றுந் தொழில்செய்வ னின்னு வசூசமுள
னன்றலாச் செய்கை நனிபுரிவன்—மன்றவா
சாலன்செய்ந் நன்றி தனைமறப்பன் செல்வனென
மூலஞ் செறிந்தவனை மூன்.

(இ-ள்.) எப்பொழுதும் யாதாமொருவேலையைச் செய்துகொண்டிருப்பவனும், வெறுப்பைத் தருகின்ற அசுத்தத்தை யுடையவனும், புண்ணியமல்லாத பாவச்செயல்களைச் செய்பவனும், மிகப் பேசுபவனும், பிறர் தனக்குச்செய்த நன்றியை நினையாதவனும், பொருளுடையவனும் ஆவனென்று மூலநட்சத்திரத்திற் பிறந்தவனை யெண்ணுவாயாக எ-று. (கக)

### பூராடம்.

பரவுப காரி பணிவாளன் யூகி
மருவுசுகந் துய்ப்பனனி வார்ந்த—கரமுடையன்
சோராத மானியெனச் சூட்டோ திமநடையாய்
பூராடத் தானைப் புகல்.

(இ-ள்.) பிறர்க்குபகாரஞ் செய்பவனும், வணக்கமுள்ளவனும், புத்திமானும் சுகத்தை யனுபவிப்பவனும், மிகவும் நீண்ட கைகளையுடையவனும், நீங்காத மானமுள்ளவனும் ஆவனென்று, தலைச்சூட்டையுடைய அன்னத்தின் நடைபோலும் நடையை யுடையவளே நீ பூராட நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௨௦)

## உ த் தி ரா ட ம்.

புகழை விரும்புவோன் சுத்தனவாப் புல்லா
வகமுடையன் சாந்த னணங்கே—சுகபோகி
வித்தியா பேட்சையுளன் மிக்கதன வானென்ன
வுத்திரா டோற்பவனை யுன்.

(இ-ள்.) கீர்த்தியை விரும்புவோனும், பரிசுத்தனும் பேராசையைப் பொருந்தாது திருப்தியை அடைந்த மனதை உடையவனும், பொறுமையுள்ளவனும், சுகத்தை அனுபவிப்பவனும், கல்வியிற் பிரியமுள்ளவனும், மிகுந்த திரவியவானும் ஆவனென்று, பெண்ணே நீ உத்திராட நட்சத்திரத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௨௧)

## தி ரு வோ ண ம்.

தனவா னிராஜன் றரும குணத்தன்
மனதினிடைத் தெய்வ மறவான்—தினமுங்
குருவின்மேற் பட்சத்தைக் கொண்டுறைவா னென்று
திருவோணத் தானைத் தெரி.

(இ-ள்.) பொருளுடையவனும் அரசனும் தருமத்தைச்செய்யுங் குணமுள்ளவனும், மனதில் தெய்வத்தை மறவாதவனும், எப்பொழுதும் குருபக்துஆகிய இவர்களிடத்தில் விசுவாசத்தைப் பொருந்தி வாழ்பவனும் ஆவனென்று திருவோண நட்சத்திரத்திற் பிறந்தவனை அறிவாயாக எ-று. (௨௨)

## அ வி ட் ட ம்.

தொடைக ளிரண்டுந் தொனிக்கு மிடறுந்
தடித்தவனற் பாவாய் தனவான்—படியிற்
றெவிட்டாத வேட்கையினன் றேர்சுகவா னென்ன
வவிட்டாவ தாரனையிங் காய்.

(இ-ள்.) இரண்டு தொடைகளும் தொனிக்கின்ற கண்டமும் பருத்தவனும், திரவியவானும், பூமியினிடத்தில் அதிக ஆசையை உடையவனும், நாடப்பட்ட சுகத்தை யனுபவிப்பவனும் ஆவனென்று, அழகிய பிரதிமையை ஒப்பவளே நீ அவிட்ட நட்சத்திரத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௨௩)

### சதயம்.

காலங் குறித்தியல்வன் கண்ணியவான் புத்திவி
சாலன் முயற்சியுளன் சாந்தனனு—கூல
னதிகமா யாது மருந்திடா னென்று
சதயமதிற் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) காலத்தையெண்ணி அதற்குத் தக்கபடி நடப்பவனும், கனவானும், விசாலமானபுத்தி யுள்ளவனும், முயற்சியை விடாதவனும், பொறுமையை யுடையவனும், யாவர்க்கும் அனுகூலமானவைகளைச் செய்பவனும், புசிக்கப்படுவதெதையும் அற்பமாகப் புசிப்பவனும் ஆவனென்று சதய நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.

### பூரட்டாதி.

பயந்தவனைப் போலப் படர்வனதி சோர
னயந்தமொழி நாவா லெவர்க்கு—மியம்பியவர்
சேரொட்டா தோட்டுஞ் செயலுடையோ னுமெனவே
பூரட்டா திக்குரியற் போற்று.

(இ-ள்.) பயப்பட்டவனைப்போல நடப்பவனும், மிகுந்த திருடனும், எவர்க்கும் நயமானசொல்லை வாயாலேசொல்லி அவர் தன்னைக் கிட்ட ஒட்டாமல் அவரை ஓட்டுகின்ற தொழிலை யுடையவனும், ஆவனென்று பூரட்டாதி நட்சத்திரத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

### உத்திரட்டாதி.

மிதமா வுரைப்பன் மிகுந்த தனவா
னதிபண் டிதன்சீல னுவ—னிதமுங்
கரக்காது தானமிடக் கற்பிப்ப னென்றுத்
திரட்டாதி யுற்றவனைத் தேர்.

(இ-ள்.) மிதமாகப் பேசுபவனும், அதிகதிரவிய முள்ளவனும், சிறந்த வித்துவானும், ஒழுக்கத்தையுடையவனும், நித்தியமுந் தானத்தை ஒளியாது கொடுக்கும்படி கட்டளையிடுபவனும் ஆவனென்று உத்திரட்டாதி நட்சத்திரத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (உகூ)

### இரேவதி.

அங்கமதின் மச்ச னழகன் றிடமதிய
னெங்கணும் பந்துக்களுட னேயிருப்பன்—செங்கொல
லரோவிறைய னுதிமனே யானேச னென்ன
விரேவதியிற் போந்தவனை யெண்.

(இ-ள்.) தேகத்தில் மறுவுள்ளவனும், சுந்தரனும், ஸ்திரமானபுத்தியை யுடையவனும், எவ்விடத்தும் பந்துக்களோடுசேர்ந்து வாழ்பவ

னும், கொஞ்சம் பொருளுள்ளவனும், முதற் பாரியாளிடத்திற் பிரிய த்தையுடையவனும் ஆவனென்று இரேவதி நட்சத்திரத்திற் பிறந்தவ னை யெண்ணுவாயாக எ-று. அரோ - அசைநிலை. (உஎ)

---

## யோகபலன்.

### விஷ்கம்பம்.

பசுமாடு வாய்ந்திருப்பன் பந்துஜெனத்தோ
னிசைவகிப்பன் மின்னு மிழையாய்—நசையுடனே
புட்பந் தனையணிவன் புல்லாரைக் கொல்வனென
விட்கம்ப முற்றவனை விள்.

(இ-ள்.) பசுக்களையும் திரவியத்தையும் அடைந்திருப்பவனும், பந்துஜெனங்களை யுடையவனும், கீர்த்தியைப் பெறுபவனும், ஆசையோடு புஷ்பத்தை அணிந்து கொள்பவனும், சத்துருக்களை அதஞ்செய்ப வனும் ஆவனென்று, பிரகாசிக்கின்ற ஆபரணத்தையுடையவளே நீ விஷ்கம்பயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (க)

### பிரீதி.

எல்லாக் கருமத்து மிட்டங் கொளுமனத்தன்
பொல்லாக் கருமத்திற் போகானே—நல்லாய்
சிரேயசெவர்க் கும்புரிவன் தீரமுடை யோனுப்
பிரீதியிற்சென் மித்தவனைப் பேண்.

(இ-ள்.) எல்லா விஷயங்களிலும் இஷ்டத்தைக் கொள்ளுகின்ற மனதை யுடையவனும், தீயகாரியங்களிற் பிரவேசியாதவனும், யாவருக்கும் சுகவாழ்வையே விரும்புவோனும், தைரியமுள்ளவனும் ஆவனென்று, பெண்ணே நீ பிரீதியோகத்திற் பிறந்தவனைக் கருதுவாயாக.

### ஆயுஷ்மான்.

பெலமான தேகன் பிழையற்ற சீல
னலமான காரியத்தை நாட்டும்—தலைமைபோ
னோயுறாரா னுண்ணறிவ னூருண் டிருப்பனென
வாயுஷ்மான் வந்தவனை யாய்.

(இ-ள்.) வலுத்த சரீரியும், குற்றமற்ற ஒழுக்கத்தை யுடையவனும், நல்லகாரியங்களை நிலைநிறுத்துஞ் சிரேஷ்டனும், வியாதியால் வாடாதவனும், கூரியபுத்தியுள்ளவனும், நூறுவருஷம் வரையும் சீவிப்பவனும் ஆவனென்று ஆயுஷ்மான் யோகத்திற் பிறந்தவனை யெண்ணுவாயாக எ-று. (ங)

**சௌபாக்கியம்.**

சுகபோகி நல்ல சுரூபியுரை காப்போன்
றகையனெவ ருமகிழத் தக்கோன்—மகியிற்
சிவயோக சீலனெனச் செந்திருவை யன்னாய்
சவுபாக் கியோற்பவனைச் சாற்று.

(இ-ள்.) சுகங்களை யனுபவிப்பவனும், அழகியவடிவை யுடையவனும், சொற்பிசகாதவனும், பெருமையையுடையவனும், யாவருஞ் சந்தோஷிக்கத்தக்கவனும், பூமியில் சிவயோகத்தைச் செய்யும் பரிசுத்தனும் ஆவனென்று, இலக்குமியை ஒப்பவளே நீ சௌபாக்கியயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (சு)

**சோபனம்.**

நற்குணமும் பொன்னுமுள னல்லகரு மம்புரிவன்
பற்பலலங் காரமவை பண்ணுவதில்—விற்பனன்வெம்
பாபநசிக் கும்பதிக்குப் பாங்கினடப் போனெனவே
சோபனமுற் றோனைத் துதி.

(இ-ள்.) நல்லகுணத்தையும் பொருளையும் உடையவனும், நல்ல காரியங்களைச் செய்பவனும், பலபல அலங்காரங்களைச் செய்வதில் சமர்த்தனும், வெய்ய பாபங்களைக்கெடுக்கும் புண்ணியஸ்தலங்களுக்குக் கிரமத்தோடு யாத்திரை போவோனும் ஆவனென்று சோபனயோகத்திற் பிறந்தவனைப் புகழ்ந்து சொல்லுவாயாக எ-று. (ரு)

**அதிகண்டம்.**

நிலத்திற் பலவகையி னீள்குழலாய் பொன்னைச்
சொலும்பக் குவத்திற் றொகுப்பன்—குலத்திற்
பதியாக வீற்றிருக்கும் பாடுடைய னென்ன
வதிகண்ட வுற்பவனை யாய்.

(இ-ள்.) பூமியினாலும் இன்னும் பலவிதத்தினாலும் திரவியத்தைச் சொல்லப்பட்ட பக்குவத்தோடு சேர்ப்பவனும், தன்குலத்தில் அரசனைப்போல வீற்றிருக்கும் பெருமையையுடையவனும் ஆவனென்று, நீண்ட கூந்தலையுடையவளே நீ அதிகண்டயோகத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (சு)

**சுகர்மம்.**

புனிதன் வெகுசென பூசித னல்ல
வனிதையர் நேசன் மதியன்—றனிக
னிகமும் பரமு மிரண்டு மடைவோனைச்
சுகர்மஞ் செனித்தவனைச் சொல்.

(இ-ள்.) பரிசுத்தனும் வெகுஜெனங்களால் கொண்டாடப் படுப வனும், நற்குணமுள்ள ஸ்திரீகளிடத்தில் அன்புடையவனும், விவேகி யும் தனவானும் இம்மை மறுமையாகிய விரண்டுபெயன்களையும் அடை பவனும்ஆவனென்று சுகர்மயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக.

திருதி.

பிறர்பொருளை வெஃகும் பெருநசையை யேய்ந்தோன்
றிறமுடனே காரியத்தைச் செய்வோன்—பொறையா
ரிருதயமுள் ளோனினிய வார்த்தையனு மென்று
திருதியிடைச் சேர்ந்தவனைத் தேர்.

(இ-ள்.) அன்னியருடைய பொருளை விரும்பும் பேராசையைப் பொருந்தினவனும், ஒழுங்கோடு காரியங்களைச் செய்பவனும், பொறு மைதங்கிய நெஞ்சையுடையவனும், இன்சொற் சொல்பவனும் ஆவ னென்று திருதியோகத்திற் பிறந்தவனைத் தெளிவாயாக எ-று. (௮)

சூலம்.

கலகப் பிரியன் கடுமையுளன் கோபி
நிலவனைய துண்டத்தாய் நீசக்—குலத்தினரைப்
பாலித்தல் செய்வன் பகைஞரைத்தான் வெல்வனெனச்
சூலத்தி லுற்றவனைச் சூழ்.

(இ-ள்.) கலகஞ்செய்வதில் விருப்பமுள்ளவனும், கொடியவனும், கோபியும், தாழ்ந்த சாதியாரை இரட்சிப்பவனும், சத்துருக்களைச் செ யிப்பவனும் ஆவனென்று, பூர்ணசந்திரனையொத்த முகத்தை யுடைய வளே நீ சூலயோகத்திற் பிறந்தவனைக் குறிப்பாயாக எ-று. (௯)

கண்டம்.

அனுசார வாச னருமை யறியான்
மனோதிடமில் லாதவன் மானே—வினவிற்
சண்டை யிடுவன் றருக்குமகங் காரியென்று
கண்ட மடைந்தவனைக் காண்.

(இ-ள்.) அனுசாரம் தன்னிடத்திற் குடிகொண்டிருக்கப் பெற் றவனும், அருமையை அறியாதவனும், தைரிய மற்றவனும், ஒன்றைக் கேட்டால் சண்டைபோடுபவனும், மிகுந்த அகங்காரத்தை யுடைய வனும் ஆவனென்று, பெண்ணே நீ கண்டயோகத்திற் பிறந்தவனை யு ணர்வாயாக எ-று. (௰)

விருத்தி.

பரகா வியமுமுறை பண்டிதனுஞ் சில்லோர்
குலங்கோத் திரமறிவன் கோமா—னுலகத்

திருக்குமே லோரை யிணங்குதன வானு
விருத்திமே யோனே விளம்பு.

(இ-ள்.) பலகாவியங்களையும் பிறர்க்குச் சொல்லுகின்ற வித்துவானும், சிலருடைய குலவளத்தையும் கோத்திரவளத்தையும் அறியவனும், அரசனும், பூமியின்கணுள்ள பெரியோரைச் சேர்ந்திருக்கும் செல்வனும் ஆவனென்று விருத்தியோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௧)

## துருவம்.

அதிக தனமுடைய னுசாரி யன்றன்
பதமபய மாகப் படிவன்—மதியார்
கருவமிதத் தோட்டிக் கலந்துறைவ னென்று
துருவமதிற் றோய்ந்தவனைச் சொல்.

(இ-ள்.) மிகுந்த பொருளுடையவனும், தன் குருவினுடைய பாதங்களே சரணாக அடைந்திருப்பவனும், தன்னை மதியாதவர்களுடைய கருவத்தை இன் சொல்லாலே போக்கி அவர்களோடுகூடிச் சிநேகமாயிருப்பவனும் ஆவனென்று துருவயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௨)

## வியாகாதம்.

நேசமிலான் விகட னின்மூடன் மாவாசா
பாசந் தனிலிருக்கப் பார்த்தமரா—னேசு
தியாரகத்தன் றேசாந் தரம்போவ னென்று
வியாகாத முற்றவனை விள்.

(இ-ள்.) சிநேககுண மில்லாதவனும், பரிகாசம் பண்ணுபவனும், அதிகமூடனும், ஒருவர் மிகுந்த ஆசாபாசத்தி லிருக்கப்பார்த்துச் சந்தோஷியாதவனும், வஞ்சம் பொருந்திய மனதையுடையவனும், அன்னியதேசங்களிற் போய்ச் சஞ்சரிப்பவனும் ஆவனென்று வியாகாதயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௧௩)

## அரிஷணம்.

ஞானி மிகுதனவா னற்கா ரியம்புரிவோன்
மானி விருந்தினரை வந்திப்போன்—சீனிச்
சருக்கரையும் பாலுஞ் சரியாவுண் போனென்
றரிஷண முதித்தவனை யாய்.

(இ-ள்.) அறிஞனும், மிகுந்த பொருளுடையவனும், நல்லகாரியங்களைச் செய்பவனும், மானமுள்ளவனும், விருந்தாளிகளை யுபசரிப்பவனும், சீனிச்சருக்கரையும் பாலுஞ் சமமாகப் புசிப்பவனும் ஆவனென்று அரிஷணயோகத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௧௪)

## வச்சிரம்.

காமமிகு செல்வன் கனவான் சுரோத்திரிய
பூமியுளன் மேடையொடு பூங்காவு—நேமியோர்
மெச்சுமா வைத்திருப்ப னென்னவே மெல்லியலாய்
வச்சிரமேல் வந்தவனை வாழ்த்து.

(இ-ள்.) காமுகனும் தனவானும் கண்ணியவானும், சுரோத்திரிய பூமியுள்ளவனும், மேல்வீடும் பூந்தோட்டமும் உலகத்தார் கொண்டாடும்படி வைத்துக்கொண்டிருப்பவனும் ஆவனென்று, பெண்ணே நீ வச்சிரயோகத்திற் பிறந்தவனைப்புகழ்ந்து சொல்லுவாயாக எ-று.(கரு)

## சித்தி.

சகல செனப்பிரியன் சத்கீர்த்தி வேந்த
னகில மெலாம்புகழு மன்பன்—பகவனிடைப்
பத்தியொடு தொண்டுமிகப் பாங்கிற் புரிவனெனச்
சித்தியதிற் சேர்ந்தவனைத் தேர்.

(இ-ள்.) சகல செனங்களாலும் விரும்பப்பட்டவனும், நல்ல புகழைப்பெற்ற அரசனும், உலகத்தார் யாவருங் கொண்டாடும்படியான விசுவாச முள்ளவனும், குருவினிடத்தில் மிகவும் பத்தியையும் பணிவிடையையும் கிரமத்தோடு செய்பவனும் ஆவனென்று சித்தியோகத்திற் பிறந்தவனை அறிவாயாக எ-று. (கசு)

## விதீபாதம்.

வஞ்சகமுஞ் சூது மடநல்லாய் தங்கிவளர்
நெஞ்சன் சிநேகிதரை நீணிலத்தி—லஞ்சச்
சதியாற்றி விட்டுத் தனிநடப்ப னென்று
விதிபாத மேயவனை விள்.

(இ-ள்.) வஞ்சனையுஞ் சூதும் பொருந்தி வளர்கின்ற மனதையுடையவனும், தன் சிநேகிதர்களுக்கும் விரிந்த உலகத்தில் அஞ்சும்படி பொல்லாங்கைச் செய்துவிட்டுத் தனியேபோய் விடுபவனும் ஆவனென்று, பெண்ணே நீ விதிபாதயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கஎ)

## வரியான்.

துஷ்டர்தங்கோ யாரெனினுந் தூங்கக் கழுத்தரிவா
னிஷ்டர்களை யெல்லா மிழந்திட்டுக்—கஷ்டம்
பரிவா னபத்தம் பகர்ந்திடுவா னென்க்
வரியா னுதித்தவனை மற்று.

(இ-ள்.) துஷ்டர்களுக்குத் தலைவனும், யாராயினுந் தூங்காநிற்ப அவர்கழுத்தை யறுப்பவனும், சிநேகிதர்களையெல்லாம் இழந்துவிட்டுக் கஷ்டத்தை அனுபவிப்பவனும், பொய்மையே பேசுபவனும் ஆவனென்று வரியான்யோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக. எ-று.

**பரீகம்.**

பொல்லாங்கைச் செய்து பொருள்சேர்த் திடும்பிசுனன்
சல்லாப மேயறியாச் சண்டாள—னல்லாய்
மரீ இயவரை யும்மெத்தும் வஞ்சகனு மென்று
பரீகமணைக் தானைப் பகர்.

(இ-ள்.) தீயகாரியங்களைச்செய்து பொருளைச் சம்பாதிக்கும் உலோபியும், சரசகுணம் இன்னதென்றறியாத ஈனனும், தன்னோடு சிநேகித்தவரையும் மோசஞ்செய்கின்ற கபடனும் ஆவனென்று, பெண்ணே நீ பரீகயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கசு)

**சிவம்.**

சதாகா லமுநல்ல சாத்திரத்தை யோர்ந்து
நிதான முடனடக்கு நேமன்—பிதாவை
புவகையொடு போற்று முரவோ னெனவே
சிவமதிலுற் றோனைத் தெளி.

(இ-ள்.) எப்பொழுதும் புண்ணியநூல்களை ஆராய்ந்து அவைகளிற் சொல்லப்பட்ட உண்மைப்படி நடக்கு நியமத்தை யுடையவனும், தன்தகப்பனைச் சந்தோஷத்தோடு காப்பாற்றுகின்ற விவேகியும் ஆவனென்று சிவயோகத்திற் பிறந்தவனை யுணர்வாயாக எ-று. (உ0)

**சித்தம்.**

வேந்தர்கள் சன்மானன் மெய்ய ரபிமானன்
காந்தியுடன் பெண்ணே கடலுலகிற்—சார்ந்திருப்பன்
முத்தி வசனனெங்குஞ் செல்லு மொழியனெனச்
சித்த முதித்தவனைத் தேர்.

(இ-ள்.) அரசர்களா லுபசரிக்கப்படுபவனும், பிராமணர்களிடத்தில் அபிமானமுள்ளவனும், புகழுடனே கடல்சூழ்ந்த உலகத்திற்பொருந்தி வாழ்பவனும், மோட்ச நெறியைப் பிறருக்குச் சொல்லுபவனும், எவ்விடத்துஞ் சொல்லுகின்ற சொற்சத்தியை உடையவனும் ஆவனென்று, பெண்ணே நீ சித்தயோகத்திற் பிறந்தவனை அறிவாயாக எ-று.()

**சாத்தியம்.**

வேத விதியும் வியாகரண முங்கிரமத்
தோதி யுணர்ந்த வுயர்புலவன்—பேதைநல

கோத்திரத்திற் பெண்ணைக் கொளல்கொடுத்தல் செய்வனென்
சாத்தியத்திற் புக்கவனைச் சாற்று. [று

(இ-ள்.) நான்கு வேதங்களிற் கூறிய விதிகளையும், இலக்கணத்தையும் முறையாகக் கற்றறிந்த மேலான பண்டிதனும், நல்ல கோத்திரத்தில் பெண்ணைக் கொள்ளுதலுங் கொடுத்தலுஞ் செய்பவனும் ஆவனென்று, பெண்ணே நீ சாத்தியயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உஉ)

சுபம்.

அழகார் முகத்த னரிவையர்க ணேசன்
கழிபொருளை யீட்டுங் கருத்தன்—பிழைசேர்
கபரோகி கீர்த்திமான் காரிகையே யென்னச்
சுபயோகஞ் சேர்ந்தவனைச் சூழ்.

(இ-ள்.) அழகிய முகத்தையுடையவனும், ஸ்திரீகளிடத்தி லன்புள்ளவனும், மிகவும் பொருளைச்சேர்க்குங் கருத்தை யுடையவனும் குற்றம்பொருந்திய க்ஷயரோகத்தை யடைந்தவனும், பிரபலியனும் ஆவனென்று, பேண்ணே நீ சுபயோகத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக.

சுப்பிரம்.

சஞ்சலன்விற் பன்னன் சமர்த்தனழ கன்றருமி
வெஞ்சினத்தன் கட்டடலன் மெல்லணைமேற்—றுஞ்சிடுவன்
செப்பிகழுங் கொங்கையாய் சீர்த்தியுறு செல்வனெனச்
சுப்பிரமிங் குற்றவனைச் சொல்.

(இ-ள்.) கவலைபொருந்திய நெஞ்சனும், பண்டிதனும் வல்லவனும், சுந்தரனும் தருமஞ் செய்பவனும், வெய்யகோபத்தை யுடையவனும், திடதேகியும் மிருதுவான பஞ்சணைமேற் சயனிப்பவனும், கீர்த்தியைப்பெற்ற தனவானும் ஆவனென்று, செப்பினைப்பழிக்கின்ற தனத்தையுடையவளே நீ சுப்பிரயோகத்திற்பிறந்தவனைச் சொல்லுவாயாக.

பிரமம்.

பொன்னைக் கலனைப் புதைத்துவைத்து மற்றவற்றைத்
தன்னை யளித்தோர்க்குஞ் சாற்றிடா—னுன்னித்
தருமத்தைச் செய்வன் றயாளனு மென்று
பிரமத்திற் போந்தவனைப் பேசு.

(இ-ள்.) செம்பொன்னையும் ஆபரணங்களையும் பூமியிற் புதைத்துவைத்து அவைகளைப் பற்றியொன்றும் தன்னைப் பெற்றெடுத்தவர்களுக்கும் சொல்லாதவனும், தீர்க்காலோசனை செய்து தருமத்தைச்

செய்பவனும், தயாளகுணமுள்ளவனும் ஆவனென்று பிரமயோகத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (உரு)

### மாகேந்திரம்.

எல்லா மறியு மியல்புடையன் பாக்கியவா
னுல்லாச மாயெவர்க்கு மோதியவை—யெல்லாரு
நாகேந் தியகரத்தாய் நல்கும் பிரபுவென
மாகேந் திரத்தவனை வாழ்த்து.

(இ-ள்.) எல்லாவிதங்களையும் அறியுந் தன்மையுள்ளவனும், தனவானும் எவர்களுக்கும் அவர்கள் கேட்டவற்றைச் சந்தோஷமாய்க்கொடுக்கின்ற பிரபுவும் ஆவனென்று, ஒளிபொருந்திய சங்கைத்தாங்கிய கைகளையுடையவளே நீ மாகேந்திரயோகத்திற் பிறந்தவனைப் புகழ்ந்து சொல்லுவாயாக எ-று. (உசா)

### வைதிருதி.

பரதூ ஷணன்பலவான் பாதகத்தன் ருன
தருமம் புரிவன் றனவான்—மருமலியுங்
கைதைமல ராதி களிப்போ டணிவனென்று
வைதிருதி யானை மதி.

(இ-ள்.) பிறரைத் தூஷிப்பவனும், வலியுள்ளவனும், துரோகியும், தான தருமங்களைச் செய்பவனும், திரவியவானும், வாசனைமிகுந்த தாழம்பூ முதலிய பூக்களை மகிழ்ச்சியோடு தரித்துக்கொள்பவனும் ஆவனென்று வைதிருதியோகத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. ()

---

## கரணபலன்.

### பவம்.

பாபகரு மம்புரிந்து பாரிற் பலருமிடு
சாபந் தனைச்சுமந்து சஞ்சரிப்பன்—சோபங்
கவியுடலன் சற்றுங் கருணையிலா னாகப்
பவகரண முற்றவனைப் பாடு.

(இ-ள்.) பாவத்தொழில்களைச்செய்து பூமியிலுள்ள பலரு மிடுஞ் சாபத்தைச் சுமந்துகொண்டு திரிபவனும், சோம்பலால் மூடப்பட்ட தேகியும், அற்பமுந் தயையில்லாதவனும் ஆவனென்று பவகரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (க)

### பாலவம்.

பூமண் டலமெல்லாம் போற்றுகின்ற கண்ணியன்பிற்
சாமத்திற் சங்கீர்த் தனஞ்சுரங்க—ளாமன்பிற்

பாலனைய தீமொழியாய் பாடுவ னுமென்று
பாலவம்வந் தானைப் பகர்.

(இ-ள்.) உலகத்திலுள்ளவர்கள் யாவரும் புகழுகின்ற கண்ணிய வானும், உஷத்காலத்திற் சங்கீர்த்தனங்களையும், சுரங்களையும் ஆசையோடு பாடுபவனும் ஆவனென்று, பாலையொத்த இனியசொல்லையுடையவளே நீ பாலவகரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.

கௌலவம்.

தேர்களிறு வாசி திறற்கலா ளென்னுமிவை
சேர்கருமந் தன்னையே செய்திடுவன்—பேருஞ்
சவுபாக் கியமுமுள னுமென்று தையால்
கவுலவமுற் றானைக் கருது.

(இ-ள்.) இரதகஜதுரக பதாதிகளென்று சொல்லப்பட்ட இவைகள்சேர்ந்த இராஜகாரியங்களைச் செய்பவனும், கீர்த்தியையும், ஐசுவரியத்தையும் உடையவனும் ஆவனென்று, பெண்ணே நீ கௌலவகரணத்திற் பிறந்தவனை எண்ணுவாயாக எ-று. (௩)

தைதுலை.

புண்ணிய சீலன் புனிதவச னம்புகலுந்
திண்ணியனி யாவர்க்குஞ் செம்மையோன்—மண்ணிடத்துக்
கைசலியா தீயுங் கனவா னழகனெனத்
தைதுலையிற் சார்ந்தவனைச் சாற்று.

(இ-ள்.) அறநெறியில் நடப்பவனும், களங்கமற்ற வார்த்தையை சொல்லுகின்ற வலுத்த தேகியும், யாவருக்கும் ஏற்கநடப்பவனும், உலகத்தில் ஓயாமற் கொடுக்கின்ற கனவானும், அழகனும் ஆவனென்று தைதுலைகரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (௪)

கரசை.

சத்துருவைச் சேதிக்குஞ் சாமர்த் தியன்புகழோன்
மித்துருவை யாதரிப்போன் மேவன்னை—யத்தன்
குருவிறையை நித்தங் குறித்தேத்து வோனைக்
கரசை யடைந்தவனைக் காண்.

(இ-ள்.) பகையாளிகளை அடர்த்து வெல்லுகின்ற வல்லமையுடையவனும், கீர்த்திமானும், சிநேகிதர்களைப் பரிபாலிப்பவனும், தன்னிடத்து ஆசைவைத்துள்ள மாதாவையும் பிதாவையும் குருவையும் தெய்வத்தையும் நிதமுந் தியானித்துத் தோத்திரிப்பவனும் ஆவனென்று கரசை கரணத்திற் பிறந்தவனை யெண்ணுவாயாக எ-று. (௫)

### வணிசை.

நிபுணன்வாக் காளி நிலைதவறும் பெண்ணைச்
சபலிக்கச் செய்வன் சரசன்—விபவப்
பணிதுகிலே*நாளும் பரிந்தணிவ னென்று
வணிசையுதித் தானை வழங்கு.

(இ-ள்.) மிகவல்லவனும் தட்டப்படாத வாக்கையுடையவனும், கற்பு நிலைகுலைந்த ஸ்திரீகளை மயங்கும்படி செய்பவனும், இனிய குணமுள்ளவனும், பகரமான ஆடை ஆபரணங்களை யெப்பொழுதும் விரும்பி அணிந்து கொள்பவனும் ஆவனென்று வணிசைகரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கூ)

### பத்திரம்.

சமயத்தைப் பூசிக்குஞ் சம்பிரதா யன்னோர்
நிமையளவும் பெண்ணாசை நீங்கா—தமர்வனொளிர்
புத்திநிலை யில்லாப் புருடனென மெல்லியலே
பத்திரமீ துற்றவனைப் பார்.

* (இ-ள்.) தன்னுடைய சமய மான்மியங்களைச் சிறப்பிக்கும்படியான சம்பிரதாயனும், ஒருநிமிஷநேரமும் ஸ்திரீ ஆசை ஒழியா திருப்பவனும், பிரகாசமானபுத்தி ஸ்திரமில்லாதவனும் ஆவனென்று, பெண்ணே நீ பத்திரகரணத்திற் பிறந்தவனைக் கவனிப்பாயாக எ-று. (எ)

### சகுனி.

அகந்தையினன் முன்ன மகிலத் தவரைப்
பகைத்துப் பிறகு பரிவ—னகத்தை
மிகவியற்றும் பேதையென மின்வளைக்கைத் தோகாய்
சகுனியிற்சென் மித்தவனைச் சாற்று.

(இ-ள்.) முன்னம் ஆங்காரத்தினல் உலகத்தாரைவிரோதித்து பின்பு தானேபரிந்து அவரை வேண்டிக்கொள்பவனும், பாபத்தை மிகவுஞ்செய்கின்ற மூடனும் ஆவனென்று, பிரகாசிக்கின்ற வளையலை யணிந்த கரத்தையுடைய மயிலை ஒப்பவளே நீ சகுனிகரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (அ)

### சதுஷ்பாதம்.

எல்லா மறிவு மியல்புடைய ஞெண்கலையில்
வல்லார் மொழிதருஞ்சீர் மாலையின—னல்லாய்
புதுப்பொருள்செய் தற்குளுற்று மானவனைப் போற்று
சதுஷ்பாத மேயவனைத் தான்.

(இ-ள்.) சகல விபகாரங்களையும் அறியுங்குண முடையவனும், நல்லசாத்திரங்களில் வல்லவர்கள் சொல்லுகின்ற புகழாகிய மாலையை அணிபவனும், அதிகபொருளைச் சம்பாதிக்க முயற்சி செய்பவனும் ஆவனென்றுசதுஷ்பாத கரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று.

**நாகவம்.**

சுந்தரஞ் சேர்வதனன் சொற்சமர்த்தன் பாக்கியவா
னிந்திரனைப் போல்வாழ் வியைந்திருப்பன்—சந்ததமும்
தேக வலியுடையன் சீரியசெய் வோனெனவே
நாகவமுற் றானை நவில்.

(இ-ள்.) அழகிய முகத்தை யுடையவனும், சாதுரியமாகப் பேசுபவனும், தனவானும் எப்பொழுதும் தேவேந்திரனைப்போல வாழ்க்கையைப் பொருந்தியிருப்பவனும், தேகவலி யுடையவனும், சிறப்பானகாரியங்களைச் செய்பவனும் ஆவனென்று நாகவகரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கo)

**கிமிஸ்துக்கினம்.**

சஞ்சலமார் புத்தியினன் சந்தோஷ மாப்பேசு
மஞ்சன் பலவிதத்து மாசமர்த்தன்—கிஞ்சித்
சமயோ சிதனதிக தந்திரியா மென்று
கிமிஸ்துக் கினனைக் கிள.

(இ-ள்.) சஞ்சலம் பொருந்திய புத்தியையுடையவனும், யாவரிடத்துஞ் சந்தோஷமாகப் பேசுகின்ற மைந்தனும், நானுவகையிலும் மிகுந்த திறமையுள்ளவனும், சிலசைமயங்களிற் கற்பனையாகப் பேசுபவனும், மிகுந்ததந்திரவாதியும் ஆவனென்று கிமிஸ்துக்கின கரணத்திற் பிறந்தவனைச் சொல்லுவாயாக எ-று. (கக)

---

தியாச்சியங்கள்.

## வருஷாதிவருமாறு.

முதுமொழி - விருத்தம்.

மோனமாம் வருடாந்தத்தின் மூவைந்து நாளதாகும்
மானினி னஸ்டிற்பானு மருவிட முன்னும்பின்னும்
ஆனது மூன்றுநாட்க ளயனசூ லங்களாகும்
ஈனமி லாடுகோலி லென்றுமூன் றரைநாளென்றே. (க)

ஏகமின் மற்றைமாத மெவற்றிற்கு மரைநாளாகும்
ஓதிய பஞ்சாங்காந்த முள்ளது கடிகைமூன்றும்

தி துறு கிரகணந்தத் தினிலொரு வாரமாகும்
மூதுரை யாகக்கொண்டு மொழிந்திடு சூலந்தானே. (உ)

'(இ-ள்.) வருடமுடிவு பங்குனிமீ பின்னிட்ட பதினைந்துநாளும்' இரண்டயனத்து தைமீ ஆடிமீ முதலில் மூன்றுநாளும், கடைசியில் மூன்றுநாளும், சித்திரை ஐப்பசி முதலிலும் கடைசியிலும் மூன்றரைநாளும், மற்றையமாதங்களில் முதலிலுங் கடையிலும் அரைநாளும், பஞ்சாங்கமாகிய வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் இவ்வைந்திற்குரிய நாழிகைகளுக்கு முடிவில் மூன்றுநாழிகையும், கிரகணந் தொட்டுவிட்ட நாள் தொடங்கி ஏழுநாட்களும் சூலம் எ-று.

---

## மாசாதிவருமாறு.

புரிவிதி முதன்மாதத்திற் பூசமுஞ் சோதிசெய்யும்
எருதிலுத் திராடம்பிண்டி யாழ்தனி லுத்திராடம்
விரிசிறைப் புண்ணீர்நண்டில் விளம்பரி தனிலாடங்கள்
வரமகள் சதையமந்த வணிகனீள் புரட்டைநாளே. (க)
பூசமா மகன்றீத்தேளிற் புகழ்ந்திடு முரசினோடு
வீசிய சுளகுதாமே வில்லிற்பாம் புங்கைமானிற்
கேசவன் மூலஞ்சாலிற் கேட்டைநீள் பரணிமீனில்
வாசநற் குழலாய்தீதா மாதசூ னியத்தினாளே. (உ)

(இ-ள்.) சித்திரைமீ பூசம் சோதி சித்திரையும்,வைகாசிமீ உத்திராடம் புனர்பூசமும், ஆனிமீ உத்திராடமும், ஆடிமீ அவிட்டம் பூராடமும், ஆவணிமீ பூராடம் உத்திராடமும், புரட்டாசிமீ சதையமும், ஐப்பசிமீ பூரட்டாதியும்,பின்னும் கார்த்திகைமீ பூசம் கேட்டை கிர்த்திகையும்,மார்கழிமீ உத்திரட்டாதி விசாகமும், தைமீ ஆயிலியம் அஸ்தமும், மாசிமீ திருவோணம் மூலமும், பங்குனிமீ கேட்டை பரணியும் சேர்ந்தது மாதசூனியம் எ-று.

---

## திகதியாதிவருமாறு.

### புதுமொழி-இரட்டையாசிரிய விருத்தம்.

மேடத்தி லாறுபதி னைந்திடப மேழுபதி னாறுபதி னேழ் விளக்கம், மேவியாழ் முதலாறு கடகமுப யம்பத்து வீறுமிரு பதுதேதியாம், சேடிலகு வரியிரண் டொன்ப திருபத்தெட்டு சிறுமிபதி னாறுமிருபான், றிகழொன்பதொடுதுலா மாறுதேட் டிங்கண்முதல் சேர்பத்து பதினேழினில், கோடுவில் லாறுநவ

பதினொன்று மான்முதல் கூடிரண் டொருமூன்றுடன், குறுகு பதி னறுபதி னேழ்மாசி பதினைந்து கொண்டபதி னறுபதினே ழ், ஓடுமீன் வருமாறு பதினைந்து பத்தொன்ப தொடுகூடு கரி நாள்களில், ஒருபலனை விழையுலகர் நற்காரியஞ்செயா தொழி கமற் றவைகொள்கவே. (க)

(இ-ள்.) சித்திரைமீ சாவ கருவ, வைகாசிமீ எவ கசாவ கஎவ, ஆனிமீ கவ சாவ, ஆடிமீ உவ க0வ உ0வ, ஆவணிமீ உவ கூவ உஅவ, புரட்டாசிமீ கசாவ உகூவ, ஐப்பசிமீ சாவ, கார்த்திகைமீ கவ க0வ கஎவ, மார்கழிமீ சாவ கூவ ககவ, தைமீ கவ உவ நவ கசாவ கஎவ, மாசிமீ கருவ கசாவ கஎவ, பங்குனிமீ சாவ கருவ ககூவ ஆகிய இந்நாள் ஆகாவாம் எ-று.

---

## வாராதிவருமாறு.

### புதுமொழி-வெண்பா.

இரவிமணி நாலரைமே விந்தே ழரைசேய்
பரவுமூன் றேமால் பனிரெண்—டரசனு
ளொன்றரைமேல் வெள்ளி யுறும்பத் தரைசனிநா
ளன்றொன்பான் ராகுகா லம்.

(இ-ள்.) ஞாயிற்றில் சஉ-மணி, திங்களில் எஉ-மணி, செவ்வாயில் ந-மணி, புதனில் கஉ-மணி, வியாழத்தில் கஉ-மணி, வெள்ளியில் க0உ-மணி, சனியில் கூ-மணி மேல், இராகுகாலம் ஒரு முகூர்த்தகாலம் வரை யிலிருக்கும் எ-று.

---

## திதியாதிவருமாறு.

### முதுமொழி-விருத்தம்.

செப்புதிதி தியாச்சியத்தின் வகை யுரைக்கக்கேணீ
திகழுகின்ற பிரதமிக்கே நாலாற தாகும்
ஒப்பரிய துதியைக்கீ ராறுதிரி தியைக்கே
யுயரைம்ப துடனைந்தா மோதிடுபஞ் சமிக்கும்
தப்பறுசட் டிக்குமிங்கைம் பாகினேடுநான்காந்
தக்கசதுர்த் திக்குநவ மிக்குதகு மைந்தாம்
முப்பஃதோ டொன்றாகு மொழிந்திடு சத்தமிக்கே
முன்னிடுமட் டமிக்கிருபா னுமெனவே யுரைப்பர். (க)

உரைத்திடுநற் றசமிக்கு முப்பதுடன் மூன்றா
மொன்றுமே காதசிக்கே யோதுதுவாதசிக்கே

விரைக்குழலா யொழிபஃதோ டைந்தாகு மேழு
மேவுசதுர்த் தசிக்காகும் விளம்பிருபத் தாறும்
திருத்துதிரை யோதசிக்கே யிருபானே டொன்பான்
றிகழ்கின்ற பூரணைக்காஞ் செப்பிடுமோ ராறே
புரைத்தவிரு ளுற்றவமா வாசைக்கே யீங்குப்
புகலுவர்நாற் கடிகைவிட மெனப்புலவர் புகழ்ந்தே. (௨)

(இ-ள்.) சொல்லுகின்ற திதிகளினுடைய தியாச்சியத்தின்வகை விபரமாவது, பிரகாசம்பொருந்திய பிரதமைதிதி-௨௪, ஒப்பிடக்கூடாத துதியைதிதி-௧௨, திரிதியை திதி-௫௫, ஓதாநின்ற பஞ்சமி சஷ்டி திதி-௫௪, சதுர்த்தி நவமிதிதி-௫, சப்தமி திதி-௩௧, அஷ்டமி திதி-௨௦, பின்னும் தசமிதிதி-௩௩, ஏகாதசி திதி-௧, துவாதசி திதி-௧௫, சதுர்த்தசி திதி-௭, திரையோதசி திதி-௨௬, பௌரணை திதி-௨௯, அமாவாசை திதி-௬, இந்த நாழிகைக்குமேல் நாலு நாழிகை தியாச்சியமென்று புலவர் சொல்லுவார்கள்; இதை வாசனைபொருந்திய அளகபாரத்தை உடையவளே நீ அறிவாயாக எ-று.

---

## நக்ஷத்திராதிவருமாறு.

### இதுவுமது.

புகறருபூ ராடமுடன் பரணியுத்ரட் டாதி
பொருந்திருபா னுடனன்காம் புனர்தமகந் தோணி
இகலுமங்கி தனக்காறைந் தாஞ்சோதி விசாக
மியன்மிருக சிரங்கேட்டை யிவைக்கீ ரேழாகுந்
தகையனுட மோணமவிட் டந்தனக்கீ ரைந்தாஞ்
சாற்றுகுரு நாள்பூரஞ் சித்திரை யுத்ராட
நகைதருநா லைந்தாகு நாலெட்டா யிலிய
நாலைந்தோ டிரண்டென்றே நாட்டிடு நவ்விற்கே. (௧)

நவ்விவிழி யாய்சதைய முத்திரமீ ரொன்பா
னல்லபரி நாடனுக்கே நவிலுவதைம் பானே
திவ்வியமாம் ரோகணிக்கே நாற்பானு மென்ப
திருந்தியநல் லாதிரைக்கே செப்புபதி னொன்றுங்
கவ்வுமிரு பத்தொன்று மாமென்ப மூலங்
கருதுமிரு பானுடனைம் பத்தாறும் பத்தோ
டொவ்வியவா றும்பூரட் டாதியிவற் றின்மே
லுறுகடிகை நான்குவிட மெனவுரைப்ப ருயர்ந்தோர். (௨)

(இ-ள்.) பூராடம் பரணி உத்திரட்டாதி உதித்த நாழிகை முதல் உசு-நாழிகைக்குமேல். புனர்பூசம், மகம், ரேவதி, கார்த்திகை, ௩௦க்குமேல். சுவாதி விசாகம் மிருகசிரம் கேட்டை, கசு-க்குமேல். அனுஷம், திருவோணம், அவிட்டம், க௦-க்குமேல். பூசம், பூரம், சித்திரை, உத்திராடம், உ௦-க்குமேல். ஆயிலியம், ௩உ-க்குமேல். அஸ்தம், உஉ-க்குமேல். பின்னும் சதையம், உத்திரம், கஅ-க்குமேல். அசுவனி, ௫௦-க்குமேல். ரோகணி, ச௦-க்குமேல். திருவாதிரை, கக, உக-க்குமேல். மூலம், உ௦, ருசு-க்குமேல். பூரட்டாதி, கசு-க்குமேல் நாலுநாழிகை தியாச்சியமென்று பெரியோர் சொல்லுவர் எ-று. (க)

## யோகாதிவருமாறு.

கலித்துறை.

கருதுவிட்கம்பமைங் கன்னலின்மேலதி கண்டங்கண்டம்
விரவியவேழின் மிசைசூலமெட்டிற்கு மீதணங்கே
யுரவியல்வச்ரம் வியாகாதமொன்பதின் மேனலமாம்
பரிகமொடுவை த்ருதிவிதிபாதம் விடமுற்றுமே.

(இ-ள்.) விஷ்கம்பம் உதித்தநாழிகை ரு-க்குமேலும், அதிகண்டம் கண்டம் எ-க்குமேலும், சூலம் அ-க்குமேலும், வச்சிரம் வியாகாதம் கூ-க்குமேலும் நன்மையாம்; பரிகம், வைதிருதி, விதிபாதம், இம்மூன்றும் முற்றிலும் விஷமாம்; பெண்ணே நீ இதை எண்ணுவாயாக எ-று

## கரணாதிவருமாறு.

புதுமொழி - வெண்பா.

சரந்திர மாங்கரணங் தன்னில்விட்டி யாம்பத்
திரஞ்சகுனி யேசதுஷ் பாத—மருவிய
நாகவங்கி மத்துக்ன மிவ்வைந்து நாடுங்காற்
றோகையுத வாவென்று சொல்.

(இ-ள்.) இருவகைப்பக்ஷத்திதியொன்றிற்கு இரண்டுகரணங்கள் வருவனவற்றில், சரம் திரமென்றெண்ணிய கரணங்களில், விட்டியாகிய பத்திரமும், தொடர்பாய்ச் சதுர்த்தசி அமாவாசி பிரதமை இம்மூன்றில் வருகிற சகுனியும் சதுஷ்பாதமும் நாகவமும், கிமஸ்துக்கினமாகிய இவ்வைந்தும் ஆராயுமிடத்து ஆகாவாமென்று பெண்ணே நீ சொல்லுவாயாக எ-று. (௬)

## இலக்கினதிவருமாறு.

விருத்தம்.

மகள்விடை சிலேயினேடு மறிமுதற் சொல்லுங்கூறு
மிகலரி குடங்கோல்வீணை யிவையின்மத் திமமாங்கூறு
மகரமீ னண்டினேடு மன்னுதேள் கடையின்கூறுந்
திகழ்பணி கழுகுபன்றி தீதுறு விடமதாமே.

(இ-ள்.) கன்னி, ரிஷபம், தனுசு, மேஷம் உதித்தமுதலில், ௨-நாழிகை பாம்பு உண்ணும். சிங்கம், கும்பம், துலாம், மிதுனம், உதித்த நடுவில் ௨-நாழிகை கழுகு உண்ணும். மகரம், மீனம், கடகம், விருச்சிகம் உதித்தமுடிவில், ௨-நாழிகை பன்றி உண்ணும். இந்நாழிகை தீதென்பதாம் எ-று. (க)

---

## அமிர்த கடிகை.

புதுமொழி-வெண்பா.

வருடமதி தேதியொடு வாரந் திதியும்
பெருவுடுயோ கங்கரணம் பேரா—விராசிபுட
னின்னுமுள தீக்கடிகை யெண்ணியதன் மேலுற்ற
கன்னலமிர் தக்கடிகை காண்.

(இ-ள்.) வருஷம், மாதம், தேதி, வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் இராசிமுதலானவற்ரேடு இன்னுமுள்ள தீயநாழிகைகளையு மெண்ணி (தள்ளவேண்டிய நாழிகையைத்தள்ளி) அதன்மேல் வரும் கடிகையை அமிர்தகடிகையென்று எழுதுவாயாக எ-று.

---

## அறுபதுநாழிகையின்பலன்.

முதுமொழி-விருத்தம்.

கோரமவுண் டேவாள கைக்குமன்றுற் கிரியை
கோடையின சனக்கோபங் கொடுவிடந்தீ கோதற்
றூர்தன்மய லாந்தகம்பி ரேதபுரி பாவ
மதிதேவங் கணநாத மெமனரவ மமிர்த
மோர்மிருது கோமளம் ப்ரபலம் வாசமீச
மியம்பிறைதி கம்பரம்வா னிறைகவிதை நாசம்
பாரதிப மலர்சனிசேப் ப்ரவர்த்தகந் தீக்கோரம்
பார்ப்பான்சேப் சுதமமிர்த பூரணம்பான் மதியே.

மதிமயக்கம் பாக்கியங்கே ளுசம்வெகு மானம்
வங்கிசக்கே டுற்பாத மறலியுரு மகிழ்மாய்
வதிதனமற் பகல்சுமுகந் தெட்சண குரூர
மாதண்ட மமலமதி சுபமல ததீதந்
சதியில்பயோ ததிசுழல்சந் த்ராங்கமறு பதற்காஞ்
சார்ந்திரவி யுதயமுதல் ஜனனவரை கன்னல்
விதியில்வருந் தொகையெதுவோ வதற்குநிகழ் பலனை
விளம்பிடுவை களங்கமற விடிந்தகடிப் பலனே.

(இ-ள்.) க-வது கோரம், உ-வது இராக்கதம், ந-வது தேவம், ச-வது குபேரம், ரு-வது இராக்கதயோகம், சு-வது கின்னரம், எ-வது இஷ்டகுலகோபம், அ-வது விஷம், கூ-வது அக்கினி, க0-வது அகளங்கம், கக-வது மாயாந்தகம், கஉ-வது பிரேதபுரிபாவம், கந-வது அதிதேவம், கச-வது கணேசம், கரு-வது காலன், கசு-வது சர்ப்பம், கஎ-வது அமிர்தம், கஅ-வது அபிராமம், ககூ-வது மிருது, உ0-வது கோமளம், உக-வது பிரபலம், உஉ-வது சுவாசம், உந-வது ஈசம், உச-வது வாகீசம், உரு-வது திகம்பரம், உசு-வது தேவேந்திரம், உஎ வது கவிதை, உஅ-வது நாசம், உகூ-வது பூபதி, ந0-வது கமலம், நக-வது சனிசுதம், நஉ-வது பிரவர்த்தகம், நந-வது அக்கினிகோரம், நச-வது எமகண்டம், நரு-வது சுதம், நசு வது அமிர்தபூரணம், நஎ வது சந்திரம், பின்னும் நஅ-வது மதிமயக்கம், நகூ-வது சௌபாக்கியம், ச0-வது குலநாசம், சக-வது உபசாரம், சஉ-வது வங்கிசநாசம், சந-வது உத்பாதம், சச-வது காலரூபம், சரு-வது சந்தோஷம், சசு வது மிருதம், சஎ-வது சுசீதனம், சஅ-வது திமிரம், சகூ-வது திவா, ரு0-வது சந்திரமுகம், ருக-வது பிரதெக்ஷணம், ருஉ-வது காலாக்கினி ருந-வது தண்டம், ருச-வது நிருமலம், ருரு-வது சுபம், ருசு-வது அசுபம், ருஎ-வது அதீதம், ருஅ-வது பயோததி, ருகூ-வது சுழல், சு0-வது சந்திரதேகம், ஆகையால் சூரிய உதயமுதல், ஜனனகாலவரையில் எண்ணிவருந் தொகைக்குள்ள பலனை விளம்புவாய் எ-று. (க)

---

## காலபலன்.

முதுமொழி - விருத்தம்.

அஞ்சமெலன வாதரித்த லதிகஜெனத் துறவெற்
கற்கெனில ஞசார மற்பசுத ரமைதி
மிஞ்சுமிருள் பருகிரவி வருமுதய மாகில்
வெகுமானந் தனம்பாக்யம் வெகுஜெனமித் திரமாம்

விஞ்சுறவு மொழிச்செலவோ டிறைபரிசில் ருணமில்
வெகுதனமத் யானமெனி லபரமிதிற் சமமா
மெஞ்சுமத்த மனமவமா னங்குறையற் பாயு
வெனக்கால பலனையறி யிடுகிடைய மாதே.

(இ-ள்.) பகற்காலமாகில், வெகுஜெனரட்சகன், வெகுஜென மித்திரன் ஆம்; நிசிகாலமாகில், அனுசாரம், அற்பபுத்திரர், அடக்கம் ஆம்; உதயகாலமாகில், வெகுமானம், தனம், பாக்கியம், வெகுஜெனமித்திரன் ஆம்; மத்தியானகாலமாகில், வெகுஜெனமித்திரன், வெகுஜெனுங்கிகாரவசனம், இராஜவெகுமானம், இருணமின்மை, வெகுதனம் ஆம்; அபரான்னமாகில், சமபாக்கியம் ஆம்; அத்தமன சந்தியாகில், அவமானம், தரித்திரம், அற்பாயு ஆம்; என்று ஒடுங்கிய இடையையுடைய பெண்ணே நீ காலபலனை அறிவாயாக எ-று.

---

## வேளைபலன்.

### முதுமொழி-விருத்தம்.

### சாத்வீகம்.

பரவுசாத் திகவேளைக்குப் பளிங்கொளி நிறமுமுள்ளான்
விரவுநல் லறிவுபுத்தி விதரண ஞானமுள்ளான்
குரவர்மேற் பத்தியுள்ளான் கொடுமைசேர் துன்பமில்லான்
வரவுறு மின்பமெல்லாம் வருமவன் றனக்குமாதே.

(இ-ள்.) பிரகாசம் பொருந்திய தேசசும், நல்ல அறிவும், புத்தியும், விதரணஞானமும், குருபத்தியும், கொடுமைசேரும் படிக்கான் பொல்லாங்கை நீக்கலும், அடையவேண்டிய சுகத்தையடைதலும் உளவாம் சாத்வீகவேளையில் பிறந்தவனுக்கு எ-று.

### இராஜசம்.

அன்பிரா சதவேளைக்கே சனித்தவ னறிவுமுள்ளான்
இன்பத்தி லாசைபற்று மியலுநல் லுரைகற்பாளன்
பொன்புவி கலைகளிந்தப் புவிக்குப காரமுள்ளான்
துன்பமற் றரசாய்நீதி செலுத்துவான் சுகமுமுள்ளான்.

(இ-ள்.) அன்பும், நல்லறிவும், இன்பத்தில் விருப்பமிகுதியும், இயற்கையிலே நல்வசனத்தோடு கல்வியும், சொர்னதானம், பூதானம், வஸ்திரதானம் செய்யும் லோகோபகாரமும், ஒருவருக்குந் தீமையில்லாமல் நடுநிலையாய் அதிகாரம் செலுத்தலும், சுகமும் உளவாம் இராஜசவேளையில் பிறந்தவனுக்கு எ-று.

## தாமசம்.

வலியதா மதவேளைக்குள் வந்துசன் மித்தோன்செய்கை
பொலியநித் திரையெப்போதும் புரிந்துளான் பொய்யேசொல்
நலியவே மயக்கஞ்சோம்பு நண்ணிடு மந்தனுவான் [வன்
பலகலை யறிவுமில்லான் பாவசிந் தையனேயாவன்.

(இ-ள்.) நித்திரையிலெப்போதும் விருப்பமும், பொய்யேபேசுத லும், நிதானமில்லாமையும், சோம்பலுள்ளமனமும், கல்வியறிவில் லாமையும், பாபத்தைச்செய்யும்படியான மனசும் உளவாம் தாமதவே ளையில் பிறந்தவனுக்கு எ-று.

## வேளைக்குள் வேளைபலன்.

இருந்துசாத் வீகந்தன்னிற் சாத்வீகந் துறவுசாந்தி
வருந்திடா வகையுற்சாகி மற்றதில் ராசதந்தான்
திருந்திய தானசிந்தை சிறந்திடுஞ் சாந்தமுள்ளான்
பொருந்திய தாமதந்தான் போதவே மந்தனுவான்.

(இ-ள்.) சாத்வீகத்தில் சாத்வீகமாகில் துறவியாதலும், சாந்தகு ணமும், வருத்தப்படாமையும் மனோத்சாகமும் உளவாம்;சாத்வீகத்தில் இராசசமாகில் தானஞ்செய்வதில் மனமும்பெருமைபொருந்தியசாந்த மும் உளவாம்; சாத்வீகத்தில் தாமதமாகில் அதிக மந்தபுத்தி உளவாம்.

தக்கரா சதத்தில்ராச தம்பெறிற் றருமராகம்
ஒக்கவே யதனிற்றாம தம்பெறி லிகழ்ச்சியுள்ளான்
திக்கெனப்பாவஞ் செய்யுஞ் சிந்தைய னுவன்கண்டீர்
மிக்கசாத் வீகமாயின் மெய்ஞ்ஞானி யிரக்கவானும்.

(இ-ள்.) இராஜசத்தில் இராஜசமாகில் தருமஞ்செய்வதில் விரு ப்பம் உளவாம்: இராஜசத்தில் தாமதமாகில் அவமானமும், ஒருவர்ம னம் திடுக்கென்னும்படியான பாவத்தைச்செய்யு மனதும் உளவாம்; இராஜசத்தில் சாத்வீகமாகில் மெய்மைபொருந்திய ஞானமும் காரு ண்ணியமும் உளவாம் எ-று.

ஈறுதா மதத்திற்றாம தம்பய மிகழ்ச்சிபாவம்
கூறுநித் திரைமயக்கங் குறித்ததி லாசையுள்ளான்
வேறிரா சதங்களிப்பு வெகுளியுண் ணுததுண்டல்
சீறிலாச் சாத்துவீகஞ் செல்விபோய் வருத்தஞ்செய்யும்.

(இ-ள்.) தாமதத்தில் தாமதமாகில் அச்சமும், அவமானமும், பா பமும், நித்திரையும், தியக்கமும், நினைத்தநினைப்பில் பிரியமும் உளவா ம்; தாமதத்தில் ராசசமாகில், களித்தலும், கோபித்தலும், தின்னப்ப

டாததைத் தின்றலும் உளவாம்; தாமதத்தில் சாத்வீகமாகில், ஸ்ரீதேவி போய் மூதேவி வாசம் உளவாம் எ-று.

---

## இலக்கினபலன்.

### முதுமொழி - விருத்தம்.

### மேடம்.

நாடியமேட லக்கினபலன்றுன் ராசபூ சிதன்றிரபுத்தி - நகைசெய்வ னடிமை யுளனுயரந்த நலிந்தமெய் தனமுளன்சு மர்த்தன்,—நீடியதரும சாத்திரங்கேட்ப னீள்கழுத்தோனெ றிவசன - னிறைந்திடுகோபி யிளைத்திடு முழந்தா ணோர்படு மிருகத்தை வதைப்பன்,—பாடியவைந்திற் றீப்பயமேழிற் பத்தினிற் சுரமிரு பதிலோர் - பாவலன்வாக்கா ளேயுளதிரண்டு பத்திரண்டினிற்பயம் பாம்பால்,—தேடியையைந்திற் சலத்தி னுற்கண்டஞ் செறிந்தநாலேழினிற் பிளவை - சென்மலக் கினத்தைச் சுபக்கிரகங்க டெரிசிக்க வயதுநூறுண்டே.

(இ-ள்.) இயாவரும் நாடத்தகுதியான மேடலக்கினத்தில் பிறந் தவனுக்கு இராஜர்மெச்சுதலும், சபலிக்காத புத்தியும், நகை நாணய ங்களை விருத்திசெய்தலும், ஆளடிமைகளைப் பெறலும், மிகுந்த அழ கும், இளைத்தசரீரமும், திரவியமும், சாமர்த்தியமும், சார்வதாய் தர்ம சாஸ்திரங் கேட்டலும், நீண்டகழுத்தும், சொல்வண்மையும், முன் கோபமும், சிறுமுழங்காலும், கண்டமிருகங்களைக் கொல்லலும், ஐந் தாவது பிராயத்தில் அக்கினிபயமும், ஏழாவது பத்தாவது பிராயத் தில் சுரபீடிதமும், இருபதாவது பிராயத்தில் கவிராயனது வாக்கினு ல் வியாதியும், இருபத்திரண்டாவது பிராயத்தில் சர்ப்பபயமும், இ ருபத்தைந்தாவது பிராயத்தில் ஜலகண்டமும், இருபத்தெட்டாவது பிராயத்தில் பிளவைப்புண்ணும் உளவாம்; இது ஜென்மலக்கினமாக இருந்து, சுபக்கிரகங்கள் பார்வையுண்டாகில், வயது ௱ வரையிலிருப் பான் எ-று.

### கலிவிருத்தம்.

மார்கழி பூரணை மன்னிய வியாழம்
ஏர்பெறு ரோகணி யிரவொரு பத்தாம்
சீர்பெறு கடிகையிற் சேர்தலை நோயால்
நேர்பெறப் புகல்வர் நிரியாண மென்றே.

(இ-ள்.) தனுர்மாதப் பூரணைத்திதியில் வியாழக்கிழமையும், ரோ கணியும், கூடிய இராத்திரி ௧0 - நாழிகையில், சிரநோயால் நிரியாண மென்று சோதிடப்பகுப்பை அறிந்தவர்கள் சொல்லுவார்களாம் எ-று.

## ருஷபம்.

ஆண்டிடுமிடப லக்கினம்பரமர்க் கன்புறு பூசைசத்திய வான் - அற்பபோசனவான் றூலதேகத்த னடிமையாளன் புளிப் பிரியன்,—வேண்டிய கணிதன் வஸ்திராபரணன் மெல் லிய செவியினன்புத்தி - விரும்பியகுழவி போல்விளையாடி வெற்றியாய்ப் பிறர்பொருள் கொள்வன்,—தூண்டிடுமிரும லு ளன்பெறு மைந்தர் சொல்விருப் பன்வயதைந்தில் - சுரபயங் கழுத்திற் பிணிபதினாறிற் றுலங்குபத்தொன்பதி விருமல்,— தாண்டியவிருப துடனிருபத்தேழ் தன்னிலே சுரஞ்சுபக்கிர கம் - தானுமேபார்க்க வயதெழுபத்தேழ் தரையினில் வாழ்ந் திருப்பானே.

(இ-ள்.) ஆண்டுகொள்ளும்படியான இடபலக்கினத்தில், பிறந் தவனுக்கு பரமசிவனைப் பக்திவிசுவாசமாய்ப் பூஜைசெய்தலும், வாக் குநிலைமையும், மிதபோஜனமும், பருத்ததேகமும், ஆளடிமையுண் டாதலும், புளிப்புவத்துவைப் புசித்தலில் ஆசையும், வேண்டியமட் டும் கணிதசாஸ்திரத்தை விசாரித்திருத்தலும், வஸ்திரம், ஆபரணம் அணிதலும், மெதுவானகாதும், புத்தியறியாக் குழந்தையைப்போல் வேடிக்கைவிநோதமாய்ப் பராக்குக்காட்டிப் பராளுடைய சொத்தை லகுவாய்க் கிரகித்தலும், தரிக்கவொட்டாத இருமலும், பெற்றபிள்ளை களுடைய மழலைச் சொல்லைக்கேட்பதில் விருப்பமும், ரு-வது வயதில் சுரபயமும், கசு-வது வயதில் கண்டத்தில் வியாதியும், ககூ-வது வய தில் க்ஷயமும், உ0-வது உஎ-வது வயதில் காய்ச்சல் காணலும் உளவா ம்; இந்தலக்கினத்தைச் சௌமியக்கிரகங்கள் வீக்ஷிக்கில் வயது எஎ- வரையில் வாழ்ந்திருப்பான் எ-று.

ஆவணி முற்பக் கத்திரை யோதசி
மேவுநல் லுத்தி ராடமுந் திங்கள்
தாவறு சாயங் காலவே ளையினில்
ஓவறு சுரத்தா னிரியாண முறுமே.

(இ-ள்.) ஆவணிமாதம் பூர்வபக்ஷம், திரையோதசியில் உத்திரா டமும், திங்கட்கிழமையும், கூடியமாலைப்பொழுதில், சுரபீடிதத்தால் நிரியாணமாம் எ-று.

## மிதுனம்.

இனியதோர் மிதுன பலன்புகழுடையோ னிலச்சையு முளன்வெகுகபடி - இயலுமாசார பரனிருசொல்ல னியற்று வன் விரதநல் வசனன்,—புனிதமாய்த் தனது காரியம்பார்ப்

பன் போந்திடு பித்தரோ கியுமாம் - பொருந்தியசாம வண்ண மெய்யாளன் புகலுமூன் றினிலப மிருத்தாம்,—நனியுமோ ரைந்தி லக்கினிபயமா நாலிரண்டாயுதபீடை - நண்ணியபத் திற் சத்துருபயமா நாடமீரொன்பதில் வாதம்,—தனிமையா மிருபத் தெட்டினிற்கண்ணேப் தருஞ்சுபக் கிரகமே பார்க்கில் - தக்கதோர்வருஷ மறுபதுமைந்துந் தரையினி லிருப்ப னென் றுரைப்பாய்.

(இ-ள்.) இன்பம் பொருந்திய மிதுனலக்கினத்தில் பிறந்தவனுக்கு கீர்த்தியும், வெட்கமும், மிகுந்த கபடமும், ஆசாரநேமமும், இரண்டுவிதச்சொல்லும், நோன்பும், குளிர்ந்தவசனமும், சுத்தமாய்த் தன்னுடைய சொந்தகாரியத்தைமாத்திரம் பார்த்தலும், பித்தாதிகமும், கருமை அல்லது பச்சைநிறமும், ௩-வது பிராயத்தில் அநீதச்சாவும், ரு-வது பிராயத்தில் நெருப்புப்பயமும், அ-வது பிராயத்தில் ஆயுதத்தினால் தீங்கும், க௦-வது பிராயத்தில் பகையாளியால் சங்கடமும், கஅ-வது பிராயத்தில் அண்டவாதமும், உஅ-வது பிராயத்தில் நேத்திரவியாதியும் உளவாம்; இந்த லக்கினத்தைச் சுபக்கோள்நோக்கில், ௬ரு-பிராயம் வரையில் பூமியில் வாழ்ந்திருப்பான் எ-று.

சிங்க மதிமுற் பக்கச் சதுர்த்தசி
பொங்கு வெள்ளி புணரு மோணத்தில்
மங்குல்பன் ஞன்கின் மார்புநோ யாலே
தங்குநிரியா ணம்மெனச் சாற்றே.

(இ-ள்.) சிங்கமாதம், வளர்பிறை சதுர்த்தசியில், வெள்ளிக்கிழமையும், திருவோணநட்சத்திரமும் கூடிய இராத்திரி கச-நாழிகையளவில் மார்படைப்பினால், நிரியாணமாம் எ-று.

### கடகம்.

உரைசெறிகடக லக்கினபலன்களுடன்மிகச் சிவப்புளன்சமர்த்தன் - உரமொடுநடப்பன் வேசையர்கமன னுயர்நவதானியன் றனவான்,—குருவிசுவாசன் பிதாவினுக்கிசையான் குறிமறு கண்டிடா விடத்தில் - கூறுவர்சிலநா டரித்திரன்வயது குலவியவைந்திலீ ரெட்டில்,—இருபதிலிருபத் தைந்திலிந் நாளி லெய்திடு மவமிருத் துவுமே - இனியகோள்சன்ம லக்கினம்பார்க்கி லிருந்துதொண் ணூறுமட் டுலகில்,—பரவியமாசி சுக்கிலபக்ஷப் பஞ்சமி புந்திவாரத்தில் - பண்பொடுமிருக சிரவுடுவதனிற் பரன்பத மடைந்திடுவானே.

(இ-ள்.) சொல்லுதற்குச் சமீபமாகிய கடகலக்கினத்தில் பிறந்தவனுக்கு, சரீரம் மிகுந்தசிவப்பும், கெட்டித்தனமும், உதட்டியாய் நடப்பதும், வேசிகளுடைய விகிதமும், தனதானியபுஷ்டியும், குருபத்தியும், பிதாவுக்கடங்காமையும், கீர்த்தியும், ஆண்குறி பெண்குறியில், அல்லது காணுவிடத்தில், மறுவும், சிலகாலந் தாரித்திரமும், ௫-௧௬-௨௦-௨௫-ஆகிய இந்தவயதில், அகாலமரணமும் உளவாம்; இந்தலக்கினத்தை நன்மையானகிரகம் பார்க்கில், ௬௦-வயதுவரையிலிருந்து, மாசிமீ வளர்பிறையில் பஞ்சமியும் புதவாரமுங்கூடிய மிருகசீரிஷநட்சத்திரத்தில், சிவபதமடைவான் எ-று.

**சிங்கம்.**

அடைவொடுசிங்க லக்கினபலன்க ளமுதுசா லவும்புசித்திடுவன் - அருச்சனைபுரிவன் றருமசிந் தையின னனுதினம் பெரும்பசியாவன்,—திடமுறும்புத்தி மான்பிணிவந்து தீர்ந்திடு முடன்றொழிற் பிரியன் - செப்புமோரைந்து பத்திருபத்தேழ் செறிவயதிற்சுரம் வந்து,—புடமருந்தருந்தி முப்பதுநாளும் போனபின் றீரும்லக்கினத்தைப் - புருகுகோன்காணிலெண்பதுவயதும் பூமியி லிருந்துபங் குனியில்,—வடிவறுமபர பக்கபாட்டிமையின் மன்னுமத் தத்திற்சுன்பகலில் - மதிநதிமுடித்த சடையர்பொற் பதத்தில் வாழ்வனென் றுரைப்பர்மாதவரே.

(இ-ள்.) கிரமமாகிய சிங்கலக்கினத்தில் பிறந்தவனுக்கு வெகுவுணவு புசித்தலும், சிவார்ச்சனைசெய்தலும், தருமகுணமும், பிரதிதினம் பெருகியபசியும், திரண்டபுத்தியும், வியாதிவந்தா லுடனேதீருதலும், வேலைசெய்ய விருப்பமும், ௫-௧௦-௨௭-இந்தவயதுகளில் சுரம் நேரிட்டு முப்பது நாள்வரையில் அவுஷதமருந்தி, அதன்பேரில் வியாதி நிவர்த்தியும் உளவாம்; இந்தலக்கினத்தைச் சுபக்கிரகங்கள் பார்வைசெய்யுமாகில், ௮௦-வயது வரையில் உலகத்தின் கண்ணிருந்து, பங்குனிமீ அழகற்றதேய்பிறையில் பாட்டிமைத்திதிபொருந்திய அஸ்தநட்சத்திரம் கூடிய சனிவாரம் பகலில், சந்திரனையும் கங்கையையும் தரித்திருக்கின்ற சடாமகுடத்தையுடைய பரமசிவனது பொற்பாதகமலத்தில் வாழ்வடைந்திருப்பான் எ-று.

**கன்னி.**

மாதெனுங்கன்னி லக்கின பலன்கண் மகிழ்தரு மன்றரித்திரவான் - மாசிலாசார முளன்பலகரும வகையறிந் திடுவன் பின்வயதில்,—மீதெனுந்தனங்க டேடுவனந்தின் மேவிய

வக்கினி பயமாம் - விளங்கியபத்திற் சுரம்பதினெட்டின் மே
விடுமெம்மைநோ யென்ப,—மேதகுநல்லோர் காணினல்வய
தோ வியைந்திடு மேழுபத் தேழாம் - மேன்மைவைகாசி கு
றைபக்கம்பன்ளுன் கெனுந்திதி யிசைந்தசித்திரையில்,—கோ
துறுகுன்ம வியாதிவாதையினுற் குறிகிரியாணமேயாகும் - கு
லவுசர்க்கரைகற் கண்டுதேன்பால்போல் கூறுசொற் கொவ்
வைவாய் கொடியே.

(இ-ள்.) ஸ்திரி என்று சொல்லப்பட்ட கன்னியாலக்கினத்திற் பிறந்தவனுக்கு தருமஞ் செய்தலும், தரித்திரமும், குற்றமற்ற ஆசாரமும், அநேக காரியங்களைத் தெரிதலும், பின்னிட்டவயதில் அதிக தனத்தைச் சம்பாதித்தலும், வயது ரு-ல் தீபயமும், கo-ல் சுரபீடிதமும், கஅ-ல் வைசூரியும், மேன்மைபொருந்திய சுபக்கிரகம் பார்வையுண்டாகில், ஆயு எஎ-க்குக் குறைவில்லாமையும், மேலான வைகாசிமாதம் அபரபக்ஷம் சதுர்த்தசி சித்திரை நட்சத்திரத்தில் குற்றமுள்ள குன்மநோயினுல் மரணமாம். நல்ல சருக்கரையும், கற்கண்டும், தேனும், பாலும் கலந்ததுபோல் சொல்லும் கோவைப்பழவன்ன வாயினையுடைய ஸ்திரியே எ-று.

## துலாம்.

கொடியனுங்காரிக் குச்சமாந்துலாத்தோன் குறித்திடு ம
னைவியரிருவர் - குமரர்கடிரண்ட குலனபிமானி கூறுசம்பத்
துளன் றனவான்,—படியில்வாழ்மன்னர்க் கினியனற்சுகவா
ன் பரிமளகந்தபூப்பிரியன் - பற்றுளதமரோன் றருமசிந்தையி
னன் பரவுமேழாண்டினேய் தீயால்,—கடியவீராறுண் டதனி
ல்வைசூரி காணும்பத்தொன்பதிற் பகையாங் - கண்டதோரிரு
பத் தெட்டில்வேல்புனலாற் கண்டநாற் பத்திரண் டினியர்,—
நெடிய பார்வையிறு லெண்பதோடைந்து நின்றுதேள் குறை
த்திதியாறில் - நிறைகதிர்வாரம் விருத்தியோகத்தி னிளுதயத்
தி னீங்குவனே.

(இ-ள்.) குரூரகிரகமாகிய சனிக்கு உச்சத்தானமாகிய துலாலக்கினத்தில் பிறந்தவனுக்கு சொல்லத்தகுந்த பெண்சாதிகள் இரண்டும், குழந்தைக் கூட்டமுள்ள குலமும், அபிமானமும், சொல்லத்தகுதியான அயிஸ்வரியமும், திரவியமும், பூமியில்வாழும் அரசர்களிடத்தில் சிநேகமும், நல்ல சுகமும், பரிமளமிகுந்த மலர்களையணிதலும், நத்திய உறவினர்களும், தருமகுணமும், எ-ம் வருஷத்தில் அக்கினிபயமும், உடனே கஉ-ம் வருஷத்தில் ஸ்போடகமும், ககூ-ம் வருஷத்தில் சத்துரு

பகையும், உஅ-ம் வருஷத்தில் ஆயுதபயமும், சஉ-ம் வருஷத்தில் ஜலகண்டமும், இந்த லக்கினத்தை சௌமியகிரகம் பார்க்கில் அரு-ஷம் வரையி லிருந்து கார்த்திகைமீ கிருஷ்ணபக்ஷ சஷ்டியில் ஆதிவாரம் விருத்திநாமயோகத்தில் சூரியோதயகாலத்தில் இறப்பான்.

## விருச்சிகம்.

நீங்கருந்தேளாம் லக்கினபலன்க ணேசனுந்தந்தைதாயிடத்தில் - பித்தமாய்மனைவி யிடத்தினிற்பிரிய னிரந்தரமினியசொற் பகர்வன்,—பாங்குடன்றொடுத்த காரியமுடிப்பன் பரவுநாலாண்டினிற் கழுத்தில் - பயிலுநோயைந்திற் சுரங்களீரைந்திற் பன்னிரண்டிற் பதினெட்டில்,—ஓங்குமக்கினியாற் பயமதாநாற்பா னுறுசன்னி வாதமுஞ் சுரமும் - உத்தமர்சென்மலக்கினங்காணி னொருபதுகுறைய நூறுண்டாம்,—தீங்கறுமானி சுக்கிலபக்ஷ துவாதசியுஞ் சனிக்கிழமை - திகழ்விசாகத்திலந்திவேளையினிற் றிண்ணமாய்வருகிரியாணம்.

(இ-ள்.) நீக்கமில்லாத விருச்சிக லக்கினத்தில் பிறந்தவனுக்கு பிதா மாதாவினிடத்திலிஷ்டமும், சார்வதாய் தாரத்தினிடத்திற் பிரியமும், எப்பொழுதும் நல்ல வார்த்தையைச் சொல்லுதலும், கிரமமாக எண்ணிய கருமத்தை முடிவுசெய்தலும், ச-ம் வயதில் கண்டதோஷமும், ரு-ம் வயதில் பலசுரமும், கo-கஉ-கஅ-ம் வயதில் நெருப்பினலபாயமும், சo-ம்வயதில் சன்னிபாதசுரமும், இந்த லக்கினத்தை உத்தமகிரகம் நோக்கில் பத்து குறைய நூறுவயதும், குற்றமில்லாத ஆனிமாசம் வளர்பிறைத் துவாதசி சனிவாரம் பிரகாசம் பொருந்திய விசாக நக்ஷத்திரம் கூடிய சாயுங்காலத்தில் உண்மையாய் சாதலுமாம்.

## வேறு.

### தனுசு.

ஆணியெனுந் தனுசுலக்கினபலன்மூத்தானுக்
  கண்ணுமிளையோர்க்கஞ்சுவான்வண்மைபுகழோன்
பேணியநற்போகவான்சத்துருவையறிவன்
  பெரியவித்தையிளவயதிற்பெற்றிடுவனிதியம்
நாணியலேச்சற்படுவனடுவயதிலேதான்
  நான்மூன்றிற்பதினைந்திலெட்டினைற்பான்
காணுநேத்திரரோகஞ்சுபரெழுபத்தேழாம்
  கருதுகிரியாணந்தேட்கானபடிகண்டாய்.

(இ-ள்.) பொன்னுரையாணிபோன்ற தனுசு லக்கினத்தில் பிறந்தவனுக்கு பெரியவர்களாக இருக்கின்றவர்களுக்கு மரியாதையில் அச்

சப்படுகிறதுபோல சிறியவர்களுக்கும் அச்சப்படுதலும், நன்மைபொருந்திய கீர்த்தியும், பொருத்தமான நல்லபோகமும், சத்துருக்களைக் கண்டுபிடித்தலும், மேலான கல்வியை இளமையிற்றானே கற்றுகொள்ளலும், திரிச்சலும், நடுப்பிராயத்தில் திரவியப்போக்கினால் அலைச்சல்படலும், கஉ-ல் கரு-ல் ௩உ-ல் சO-ல் கண்ணோயும், இந்தலக்கினத்தைச் சுபக்கோள் தரிசித்தால் எ௦-ம் ஆண்டில் நிரியாணம். விருச்சிகலக்கினத்திற்குச் சொல்லியபடி பார்த்துக்கொள்ளவும் எ-று.

## ம க ர ம்.

கண்டசுறாலக்கினங்காணுவிடத்தின்மறுவாம்
  கண்கணீண்டுருண்டிருக்குங்கமழ்புஷ்பப்பிரியன்
மண்டுதிரடபுத்திரபிமானிசுகதேகி
  வருஞ்சிவந்தமெய்யுடையன்மனையாளுக்கினியன்
மிண்டுபக்ஷிகொன்றிடுவன்மேவுமொருபத்தில்
  விளம்புசுரநாலெட்டுவிதேசமுப்பத்தேழில்
உண்டுசர்ப்பபயஞ்சுபக்கோணோக்கவறுபத்தேழ்
  உயர்பாரில்வதிந்திடுவனெனவுரைசெய்வாரே.

(இ-ள்.) மகரலக்கினத்தில் பிறந்தவனுக்கு தெரியாவிடத்தில்மச்சமும், நேத்திரம்—நீட்சியாகவும், உருட்சியாகவு மிருக்கும், வாசனை புஷ்பத்தி னிடத்தில் விருப்பமும், மிகுந்த புத்திதிரமும், மானமும், சொகுசானதேகமும், சிவப்பானநிறமும், பெண்சாதியி னிடத்தில் பிரியமும், பறவைகளைக் கொல்லுகையும், க௦-ல் காச்சலும், ௩உ-ல் யாத்திரையும், ௩எ-ல் பாம்புபயமும், இந்த லக்கினத்தை சுபக்கிரகம் பார்த்தால் சு௭-வயது வரையில் உலகத்திலே உயிரோடிருப்பனெனச் சொல்லுவார்களாம் எ-று.

## வெண்செந்துறை.

பூசமா தங்குறை புகலும் பஞ்சமி
ஆசி லுத்திரட் டாதி யருக்கனாள்
வீசு காலையின் மென்கொன்றை சூடிய
தேசிக னன்னடி சேர்வது திண்ணமே.

(இ-ள்.) மகரமதியில் அபரபக்ஷ பஞ்சமி, குறைவற்ற உத்திரட்டாதி, ஆதிவாரம் உதயத்தில் கொன்றைமாலையை அணிந்த பரமசிவனுடைய திருவடிசேர்வது உண்மையாம் எ-று.

## கு ம் ப ம்.

பரிந்தகும்பலக்கினத்தான்றன்னையேபுகழ்வன்
  பழிப்பன்மற்றோர்தம்மைக்குள்ளன்னற்பவித்தை

தெரிந்தபித்தசாரீரன்செய்நன்றிமறப்பன்
செங்கண்ணன்சுகமுள்ளன்ஸ்திரீகளுக்குநண்பன்
பொருந்துபதினேராண்டிற்சுரமாம்பத்தொன்பான்
புரிந்தசன்னிவாதசுரம்புண்ணியர்பார்த்திடினே
திருந்துவயதெண்பதுசித்திரையைந்தாந்திதியில்
திகழ்செங்கைபொன்வாரத்தந்தியிலந்தியமே.

(இ-ள்.) முயலும்படிக்கான கும்பலக்கினத்தில் பிறந்தவனுக்கு தன்பெருமையைத் தானே புகழ்தலும், மற்றப்பேர்களை இகழ்தலும், குள்ளமும், அற்பமான கல்வியும், பைத்தியசரீரமும், ஒருவர்செய்த உபகாரத்தை உடனே மறந்தலும், சிவந்தகண்ணும், சௌக்கியமும், ஸ்ரீகணேசமும், ௧௧-ல் சுரம் ௧௯-ல் மிகுந்த சன்னிபாதசுரமும், இந்த லக்கினத்தை நல்லவர்கள் பார்த்தால் திருத்தமாய் ௮0-வயதிருந்து சித்திரைமாதம் பஞ்சமி திதியில் திருவாதிரை நக்ஷத்திரத்தில் வியாழக்கிழமை அந்திகாலத்தில் நிரியாணமாம்.

**மீனம்.**

அந்தமுறுமீனலக்கினந்தனவான்சூரன்
அழகியமெய்யன்ஞானியகோரவிருதாரன்
கந்தமலர்ப்பிரியன்றண்கண்கிருபையாளன்
காதுநோய்பிறருடைமைக்காசிப்பன்கண்டே
முந்துகமயத்தன்பல்லூணருந்துமூர்க்கன்
முந்நான்கிலிருபதினின்மூளுமிகச்சுரந்தான்
நொந்திருமலெழுநான்கிற்சுபக்கோணேக்கிடினே
நாருண்டுநிரியாணநுவல்கும்பத்தடைவே.

(இ-ள்.) கடைசியாகிய மீனலக்கினத்தில்பிறந்தவனுக்கு திரவியமும், சௌரியமும், சௌந்திரியரூபமும், ஞானமும், அகோரமுள்ள இரண்டுகளத்திரமும், பரிமள மிகுந்த புஷ்பத்தினிடத்திலிஷ்டமும் குளிர்ச்சிபொருந்திய கண்களும், தயையும், கர்னரோகமும், அன்னியாள் பொருளை யபகரித்தலும், எதற்கும் முன்ஜாக்கிருதைப்படுதலும், கண்டதெல்லாம் தின்னும்படிக்கான மௌட்டியமும், ௧௨-ல் ௨0-ல் சுரமும், ௨௮-ல் இருமல் வியாதியும், இந்தலக்கினத்தை மேலான கிரகம் பார்க்குமேயானல், ௱-ம் வயதில் நிரியாணம் கும்பத்திற்கு ஒத்தபடி சொல்லுக எ-று.

வேறு.

புதுமொழி-கலித்துறை.

**இராசிசமையம்.**

சிராங்கமனசிக் தைவிசனஞ்சுகஞ் ஸ்நானஞ்செயல்
நேரோங்கு தானந் தவ்முடிசூட்டலு நீளுணவு

போரோங் கியகுரோ தம்பினிராஜ்ஜியம் பொங்குசுத்தி
பாரீங் கிவைபன் னிருசமயந்தகர் பான்முதலே.

• (இ-ள்.) க-வது சிறப்புபொருந்திய யாத்திரை, உ-வது துக்கம், ங-வது சவுக்கியம், ச-வது ஸ்நானம், ரு-வது தானம், சு-வது தபம், எ-வது கிரீடாதாரணம், அ-வது போஜனம், கூ-வது குரோதம், க0-வது ராஜ்ஜியபாரம், கக-வது சந்தோஷம், கஉ-வது தேகசுத்தி, ஆக பன்னிரண்டும் மேஷாதிமீனாந்தம் பார்த்துகொள்ளவும் எ-று.

வேறு.

புதுமொழி-ஆசிரியசந்தவிருத்தம்.

**இராசிபாதசமையம்.**

சிரடைகாய்தர்ப் பணமாலஸ்யஞ் சிவதுதிபெண்கூட்டம்
சிலவுற்சாகம் பலபலதுக்கந் தேகங்காயமுறல்
தெரவுபாசனஞ் சந்தோஷம்மாத் யானிகம்புத்திரர்சீர்
தெளிவின்னித்திரை போஜனுபாசஞ் சயினம்பற்சுத்தி
நீரில்ஸ்நானம் அனுஷ்டானஞ்சத் துருபயமேருணவு
நிகழ்துக்கஞ்ஜெய மிகுபோகம்மரு ணீண்டவிலாசம்பின்
கோரியஜெபமுத் தம்வைபோகங் குலாசமாமோகம் [வே
கொள்துயரம்மிலே மூர்ச்சைமுத்தணி கோசபைதெரிதிரு
திருமுடிவாங்கன் முடிசூட்டல்வஸ் திரந்தானேதரித்தல்
தெய்வச்சபைகாண வந்திடவிந்திரன் றெரிசனவாக்வாதந்
திரிவிக்கிரமம் வீண்பிரசங்கந் தேவிப்பிரசாதம்
செஞ்சந்தோஷம் வேதியரீட்டந் தெருளுமுற்சாகம்
கரிமுகில்கூந்தல் தெரிவையேயிங்கு கணிக்கவாறெட்டாம்
காணத்தகர்முன் மீனம்பகர்பின் காலொருநாலோரை
உரியதுவென்றே தெரிவையேஜனன வோரைக்குளசைமயம்
ஓதிடுவாதிடல் தீதெனபோதிநீ யுண்மைக்கண்மணியே.

(இ-ள்.) க-வது தாம்பூலம், உ-வது தர்ப்பணம், ங-வது ஆலஸ்யம், ச-வது சிவபூஜை, ரு-வது ஸ்ரீகள் கூட்டம், சு-வது மனோற்சாகம், எ-வது பலதுயரம், அ-வது காயம்படல், கூ-வது அவுபாசனம், க0-வது சந்தோஷம், கக-வது மாத்தியானிகம், கஉ-வது புத்ரலாலனை, கங-வது அதிகநித்திரை, கச-வது போஜனுபாசம், கரு-வது சயினம், கசு-வது தந்தசுத்தி, கஎ-வது ஸ்நானம், கஅ-வது அனுஷ்டானம், ககூ-வது சத்துருவேதை, உ0-வது போஜனம், உக-வது துக்கம், உஉ-வது விஜயம், உங-வது வைபோகம், உச-வது மயக்கம், உரு-வது முகவிலாசம், உசு-வது ஜெபம், உஎ-வது சண்டை, உஅ-

வது போகம், உகூ-வது சிலாக்கியம், ௩௦-வது மோகம், ௩க-வது துக்கநாசம், ௩உ-வது மூர்ச்சை, ௩௩-வது முத்தாபரணம், ௩ச-வது ராஜசபை, ௩ரு-வது கிரீடம்வாங்கல், ௩சூ-வது கிரீடாதாரணம்,௩எ-வது வஸ்திரமணிதல், ௩அ-வது தேவசபை காணல், ௩கூ-வது சபைக்குள் வரல், ச௦-வது இந்திரதரிசனம், சக-வது வாக்குவாதம், சஉ-வது பராக்கிரமம், ச௩-வது வீண்பிரசங்கம், சச-வது காளியைக்கண்டு வெகுமதி பெறல், சரு-வது வெகு சந்தோஷம், சசூ-வது பிராமணருட னிருத்தல், சஎ-வது பெருவிலாசம், சஅ-வது உற்சாகமாம். கறுத்த அளகபாரத்தையுடைய ஸ்திரியே இவ்விடம் எண்ணிப்பார்க்க, சஅ-என்னுந்தொகை காணும், ஆகையால், மேஷமுதல் மீனம் வரையில் ஒவ்வொருராசிக்கு பங்கு கால் நான்காகும். அதற்குரியதொகை யொட்டுகின்ற ஜெனன லக்கினத்தினுடைய பங்கின் காலுக்கு சமையம்பார்த்துச் சொல்லுவாயாக எ-று.

புதுமொழி-ஆசிரியவிருத்தம்.

இராசிநக்ஷத்திரபாதகிரகசமையம்.

ஓரிராசிக்குரிய வடுபாதமொன்பது வுற்றராசியிலெந்தகோ, ளுறையுமந்தப்பதம் பெற்றசமையப்பல ஞேதிலது வொன்பதாகும்,—பேரறிய வொன்றிற்கி ராஜ்ஜியமிரண்டிற்கு பீடுதனமூன்றிற்கெனில், பிசகாததுக்கநான் கிற்குகோபுரமைந்து பேர்பெற்ற சிங்காதனம்,—ஊரறியவாறிற்கு கோகிலம்மேழிற்கு வுள்ளதேபோகமெட்டு, உறங்கலாமொன்பதிற்காகாததாமச மூகித்தெடுக்கவறிவாய்,—நாரியர்கணத்திலே காரியகுணத்திலே நயவார்த்தைசுயமாகசொல், நங்கையேமங்கையே பங்கஜமணங்கையே நவபாதகிரகசமையமே.

(இ-ள்.) இராசி க-இு நக்ஷத்திரபாதம் கூ-ஆகையால், எந்தராசியிலெந்த கிரக மிருக்கின்றதோ, அந்த ராசியி னந்த பாதத்திற்குள்ள சமையம் க-இு இராஜ்ஜியபாரம், உ-இு தனநாசம், ௩-இு துக்கம், ச-இு கோபுரம், ரு-இு சிங்காதனம், சூ-இு கோகிலம், எ-இு ஸ்திரிபோகம், அ-இு சயினம், கூ-இு தாமசம் எ-று.

வேறு.

முதுமொழி-ஓரைபலன்.

சாற்றுவோரையிலாண்முதற்பாதியிற்
　றக்கவாண்கோள்வலியுறிலாணதாம்
தோற்றுமோரையிற்றேகைமுற்பாதியிற்
　றுய்யபெண்கோள்வலியுறிற்பெண்ணதாம்

போற்றிலங்குவலிபெற்றகோணிறம்
• பொருந்துமாருயிர்புத்தியும்பூணுமே
ஆற்றல்பொன்புகர்மான்மதிவந்தசே
யழகாம்விமீசரருடனேக்காணுமே.

(இ-ள்.) ஆண்ராசி யுதிக்க முற்பாதியி லாண்கிரகம் வலிபெற்று நோக்க பிறந்தகுழந்தை புருஷப்பிரஜை எனவும், பெண்ராசியுதிக்க முற்பாதியில் பெண்கிரகம் வலிபெற்றுநோக்க பிறந்தகுழந்தை ஸ்ரீபிரஜை எனவும், அப்போது தோஷரகிதமாய் தேறிநின்ற கிரகத்தினுல் நிறமும், ஆயுவும், குணமும் சொல்லுக. குரு, சுக்கிரன், புதன், சந்திரன், இவர்கள் ஷை ஓரையில் இருக்க, பார்க்க, பிறந்த குழந்தை அழகுள்ளதாம் விமீசுரர் கிருபையுமுண்டாம் எ-று.

**திரைகாணபலன்.**

நனிதிரயமுதற்காணங்கண்டமட்டேயாகும்
நவிலிரண்டுநாபிவரைமூன்றப்பாறுடும்
வினவியதோரிவ்விடத்திற்பாபிகளேநின்றால்
விரணமுண்டாஞ்சுபக்கிரகமேவின்மறுவாகும்
புனிதமொடுசுபர்பார்வையுறினுமறுவாகும்
பொருந்துநிறந்தெரிந்ததனைப்புகன்றிடவேண்டிடிலே
இனிமையுடனிருந்தகிரகத்தின்வன்னந்தானே
யிருந்தபடிக்கேயிருக்குமெனவிளம்புவீரே.

(இ-ள்.) திரேகாணமென்பது மூன்றுபங்காகும், அதாவது— ஜெனித்தலக்கினத்தை மூன்றுபங்கு செய்க, அதில் முதலாம்பங்கு சிகைமுதல் கழுத்தளவு, இரண்டாம்பங்கு அதுமுதல் தொப்புளளவு, மூன்றாம்பங்கு அதுமுதல் பாதமளவு, முக்கூறும். இத்தானங்களில் குரூரகிரகமிருந்தால் விரணம், சௌமியகிரகமிருந்தால் மறு, இதல்லாமலும் சுபகிரக பார்வையுண்டாகில் விரணமில்லை மறுவுண்டு, நிறமுதலானதைச் சொல்வதற்கு, அந்த அந்த கிரகவர்னம்போ லிருக்குமென்று சொல்லுக எ-று.

வீரமுறுங்கதிரிருந்தால்விலங்கினத்தினுலும்
விளங்குசசியிருந்தக்கான்மெய்விரணங்கொம்பால்
பார்மகனுற்றிடிலங்கியாற்படையினுலும்
பாகனுறிற்பூமிநிமித்தம்விரணம்பற்றும்
ஆரியனுங்குருசுங்கருறின்விரணமில்லை
ஆங்காரியுறிற்கல்லால்ராகுவிஷமத்தால்

கூரியகேதிரணமுள்ளானல்லோர்கள்கண்டால்
கூறுமிரணந்தீர்ந்துகுலவும்வடுவாமே.

(இ-ள்.) மேற்சொல்லிய பங்கில் வைரம்பொருந்திய சூரியனிருந்தால் மிருக்கத்தினால் விரணம், சந்திரனிருந்தால் கொம்பாலாகிய விரணம், செவ்வாயிருந்தால் நெருப்பினாலும் ஆயுதத்தினாலும் விரணம், புதனிருந்தால் பூமி நிமித்தியத்தால் விரணம், குருசுக்கிரனிருந்தால் விரணமில்லை, சனியிருந்தால் கல்லினாலும்; இராகிருந்தால் சேஷ்டை விஷமத்தாலும், கேதிருந்தால் முட்களினாலும் விரணமாம். சுபக்கிரகபார்வை யுண்டாகில் விரணந்தீரும். ஆனால் அடையாளமாத்திர மிருக்கலாமென்க எ-று.

வடுவுரைக்கில்சிரத்திரவிமுகத்தின்மதியாகும்
மார்பிற்சேயுதின்மறுவுமன்னுமிரணமுந்தான்
முடியரசனுதரத்திற்புந்தியிடைதனிலே
மூரிநெடுங்காரியிருதுடைதனிலேயாகும்
கடுவுறையுங்கருநாகங்கரந்தனிலேயாகும்
காலிரண்டிற்செம்பாம்புதான்கலந்துநிற்கும்
நடுமுதுகிற்சுக்கிரனுமாம்விரணமடையாவர்
நண்ணுமிடந்தனிலென்றேகாட்டுவர்நல்லோரே.

(இ-ள்.) அடையாளமாவது மேற்சொல்லிய பங்கில் சூரியனிருந்தால் சிரசில், சந்திரனிருந்தால் முகத்தில், செவ்வாயிருந்தால் மார்பில், குருவிருந்தால் வயிற்றில், புதனிருந்தால் இடுப்பில், வலிமைச்சனி இருந்தால் இருதுடையில், இராகிருந்தால் இருகையில், கேதுவிருந்தால் இருகாலில், சுக்கிரனிருந்தால் முதுகில், விரணமுண்டாமெனச் சொல்லுமிடத்தில் பாபக்கிரகங்க ளிருந்தால் மாத்திரம் மேலோர் நிலைகாட்டுவர் எ-று.

---

முதுமொழி.

## நவாம்சபலன்.

### சூரியனமிசம்.

கூறியதோரிரவியங்கிசந்தனக்குகோபி
கோலவிழிமெய்சிவப்பன்குலவுசுசியாளன்
வீறுடனேசுருண்டுநீண்டிருக்குமயிருடலன்
மிகவயிறுபருத்திருப்பன்சத்யமொழியுடையன்
ஆறிலியாத்திரைப்பிரியன்மோவாய்நீண்டிருப்பன்
அழகன்மிகுசிநேகிதவானவிர்புத்தியுள்ளோனும்

தேறுதலையுணர்ஞானிதியாகியாஞ்சாந்தன்
சீமானகும்பித்ததேகமுளன்றனே.

(இ-ள்.) சூரிய னமிசத்தில் பிறந்தவனுக்கு கோபமும், அழகிய கண்களும், சிவந்த தேஜசும், பிரகாசம் பொருந்திய ஒழுக்கமும், தாட்டியாய் சுருண்டு நீண்டிருக்கும் ரோமதேகமும், வயிறுபெருத்திருத்தலும், சத்தியவாக்கும், நதியிலும்-யாத்திரையிலும்-இஷ்டமும், முகக்கட்டை நீட்சியும், சுந்தரமும், மிகுந்த சிநேகமும், நல்லவிவேகமும், தேர்ந்த அறிவும், தியாகமும், சாந்தமும், ஸ்ரீமானகவும், பித்ததேகமுமாம் எ-று.

சந்திரனமிசம்.

உள்ளமதிவித்தைசெல்வனுமுகத்தின்மறுவாம்
உறுந்தீர்க்காயுளன்சிறியவிழியனெனவுரைப்ப
தெள்ளியநற்குணவழகனுஞ்சூரன்றியாகி
சிநேகிதனந்தன்னறிவுகுன்றுதான்றீரன்
கள்ளமிலான்வாதசேத்துமரோகதேகன்
கருத்துளன்பின்னிரக்கமுளனீராடப்பிரியன்
எள்ளலிலான்மோவாய்நீண்டேயிருப்பனளக
மினியசிரரோமநீண்டிருந்திடுவன்கண்டாய்.

(இ-ள்.) சந்திரனமிசத்தில்பிறந்தவனுக்கு கல்வியும், செல்வமும், முகத்தில் மறுவும், ஆயுர் தீர்க்கமும், சிறியகண்களும், தெளிந்த வசனமும், நல்ல குணவழகும், சூரத்வமும், ஈதலும், சிநேகமும், அந்தமும், அறிவு குறையாமலும், தைரியமும், கபடமில்லாமையும், வாதசேத்தும சம்பந்த ரோகதேகமும், கனிவும், பின்னே இரக்கப்படலும், நீர்விளையாட்டில் பிரியமும், இழிவில்லாமையும், முகக்கட்டை நீட்சியும், அளகமாகிய சிகை மயிர் நீண்டிருத்தலுமாம் எ-று.

குஜனமிசம்.

கண்டசெவ்வாய்கடுஞ்சொல்லன்பேடியெனும்ரூபன்
கழறுவாய்திக்குடையன்மெய்சிவப்பன்கோபி
சண்டைவிருப்புடையன்றபநிதிபித்தரோகி
தரணிதிரிந்திடுவன்சிற்றுண்டிவிருப்பினனும்
மிண்டியவஞ்சகன்லோபிமுதுகின்மறுவினனும்
விருதுதத்வன்கிலேசிதீரன்பிரகாசி
கண்டுமொழிமானேகேடுக்கமுளானிழிசொல்
கழறிற்பொருன்பொய்யன்கனவான்கீர்த்தியினன்.

(இ-ள்.) குஜ னமிசத்தில் பிறந்தவனுக்கு கடுகடுத்த சொல்லும், அலியுருவமும், பேசும்வாய்தெத்தலும், சிவந்ததேகமும், முன்கோப

மும், வீண்சண்டையில் விருப்பமும், சுவல்பதிரவியமும், பித்தவியாதியும், ஊரைச்சுற்றுதலும், நொறுவைதின்னுதலும், கொடியவஞ்சனையும், உலுத்ததன்மையும், முதுகில் மறுவும், வீரம்பேசுதலும், கிலேசமும், மிகுந்த தைரியமும், பேர்பிரகாசமும், கற்கண்டைப்போல் வசனமுள்ள பெண்ணே கேள் துக்கம்பொருந்தலும், இழிவான வார்த்தையைக் கேழ்க்காதலும், அபத்தமும் கன்னியமும் பெருமையும் ஆம் எ-று.

## புதனமிசம்.

ஆனபுந்தியங்கிசத்தனுந்தருமசீலன்
• ஐச்சுவரியன்வித்தையுளனரிவையருக்கன்பன்
ஞானியிசைத்தமிழோன்பொய்யாதமொழியாளன்
M நன்றிமறவான்கயம்போனடையுடையனழகன்
கானவித்தையுளன்சூரன்பசியநரம்புடையன் •
காரியஞ்சற்றும்வழுவான்கதித்தகுணமுள்ளான்
மானமுளன்றேவர்களைச்சந்ததமும்பணிவன்
வன்மனத்தனச்சமிலான்மகிழ்ச்சியுளனாகும்.

(இ-ள்.) புதனமிசத்தில் பிறந்தவனுக்கு தர்மமும், சுசியும், ஐஸ்வரியமும், கல்வியும், ஸ்திரீகளிடத்தில் சிநேகமும், ஞானமும், பிரகாசம்பொருந்திய இசைத்தமிழும், அழகும் பொய் பேசாமையும், உபகாரத்தை மறவாமலும், மதயானையைப்போல் நடையும், ரூபலாவண்ணியமும், சங்கீத வித்தையும், சூரமும், பசுமையான நரம்புகள் தேகத்தில் காணலும், கிஞ்சத்மாத்திரமும் காரியத்தில் பிசகாமலும், பெருமையான குணமும், மானமும், தெய்வங்களைச் சந்ததம் தொழுதலும், கடின மனதும், பயமற்ற தன்மையும் மகிழ்வும் உண்டாம் எ-று.

## வியாழனமிசம்.

ஆகியநல்வித்தையுளன்பொன்போலுமெய்யன்
ஆண்பெறுவன்செவ்விழியனமச்சனுருவனும்
வாகுசெறிரோமமுளன்மேனோக்கன்செல்வன்
மகிழ்வுடையன்சுசியுடையனவன்றாலதேகி
மோகமுடனீராடுவன்மோவாய்நீண்டோன்
மொழிமதுரன்விசிட்டமுளனுயர்ஞானியழகன்
போகமிகுசுகவானல்லறிவுடையன்விசயன்
புகழுடையன்புத்தியுளன்பொன்னனங்கிசத்தோன்.

(இ-ள்.) வியாழனமிசத்தில்பிறந்தவனுக்கு நல்லகல்வியும், தங்கச்சாயல்போன்ற சரீரமும், ஆண் குழந்தைகளைப் பெறுதலும், சிறப்பா

கிய கண்ணும், மந்திரித்தன்மையும், நெருங்கிய ரோகமும் மேலாகிய பார்வையும், செல்வமும், மகிஷியும், பரிசுத்தமும், தபமும், பருத்த சரீரமும், சந்தோஷமாய் ஸ்நானபானஞ்செய்தலும், முகக்கட்டைநீட்சியும், சொற்சுவையும், கபடில்லாக்குணமும், நல்லவிவேகமும், அழகும், போகமிகுந்த சௌக்கியமும், நல்லகியானமும், பராக்கிரமமும், கீர்த்தியும், அறிவும் உண்டாம் எ-று.

சுத்கிரனமிசம்.

பிரபலனுகியசுங்கனங்கிசத்திற்பிறந்தோன்
பெருந்தூலசரீரனெழிற்பெருஞ்செல்வமுடையோன்
திரமாகச்செய்நன்றியுணர்ந்திடுவன்றருமன்
செப்பியவுத்தமன்சூரன்கல்வியுளன்சுகவான்
கருமயிர்தான்சுருட்டையுளன்காந்தியுளன்சிநேகன்
கதிர்வடிவன்கால்வளமையுடையன்கிளைக்குறவன்
அரன்பெருமையோதவிருப்புளனுமன்புடையன்
ஆகுமென்றேயுரைத்திடுவரறிந்திடுநல்லோரே.

(இ-ள்.) பிரபலம்பொருந்திய சுக்கிரனுடைய அமிசத்தில் பிறந்தவனுக்கு காத்திர தேகமும், அழகிய மிகுந்த செல்வமும், ஒருவர்செய்த உபகாரத்தை நினைத்தலும், தர்மமும், உத்தமகுணமும், சௌரியமும், கல்வித்திறமும், சுகமும், கறுத்த சுருண்ட ரோமமும், தேககாந்தியும், நேசமும், செவ்விய அழகும், நாற்கால்ஜீவன்விர்த்தியும், பந்துக்களிஷ்டமும், ஈஸ்வரனுடைய புகழைப் பேசுதலில் விருப்பமும், அன்புடைமையும் உண்டாமென்று தெரிந்த புண்ணியவான்கள் சொல்லுவார்களாம் எ-று.

சனியினமிசம்.

நல்லசனிவங்கிசத்தோன்கீர்த்தியிலானுகும்
நவில்வன்பொய்தள்ளாடிநடப்பன்கைவீசிச்
சொல்லுவன்மெய்க்குறளன்ராக்ஷதரூபனுவன்
தொடைபுறந்தாள்பருத்திருக்குந்தூயகருநிறத்தோன்
அல்லலுறுந்தரித்திரவானிரக்கமிலானுகும்
அன்னமெத்தவும்புசிப்பனரும்பொருளன்லோபி
வல்லதொந்தியனீலதேகனஞ்சாமனத்தன்
மன்னுதயவினைச்சற்றுமனத்திலவையான்முனே.

(இ-ள்.) நன்மை பொருந்திய சனியினுடைய அமிசத்தில் பிறந்தவனுக்கு புகழில்லாமையும், பொய்பேசுதலும், சோர்ந்துநடக்கலும், கைநீட்டிப்பேசலும், குள்ளமும், ராக்ஷசவடிவும், தொடை-குதிக்கா

ல் மிகவுங் கனத்திருத்தலும், கரிகறுத்த ரூபமும், அலைச்சலுள்ளவறு மையும், தயவில்லாமையும், சோறு மிச்சமாய் தின்பதும், அருமை யாய் கொஞ்சம் பொருள் சேர்த்தலும், உலுத்ததன்மையும், பருத்த தொந்தியும், நீலதேகமும், பயமற்ற மனதும், தயவென்பதைச் சற் றேனும் மனதில் வைக்காதலுமாம் எ-று.

## இ ரா கு வி ன மி ச ம்.

தானவனுமிராகங்கசந்தனக்குபலன்தான
　　தருமகுணஞ்சவுரியமுநிறைந்தவசனத்தால்
ஞானவரம்பைக்கடக்குநடையுளதகுமதியான்
　　நன்றியறியுந்தன்மைநகராளும்பூபன்
ஆனவர்கள்சன்மானமாசாரமில்லான்
　　அந்தமிலாமந்திரமுமாகாத்யஞ்செய்வன்
போனவரைக்குறித்துநிதம்புகழ்ந்துமிகப்பேசும்
　　புத்திமதியுள்ளவனும்பொற்கொடிபெண்ணமுதே.

(இ-ள்.) இராக்ஷதராகு என்னும் கிரகாம்சத்தில் பிறந்தவனுக்கு தானம், தருமகுணம், பராக்கிரமம், இவைகளையும் வாய்நிறைந்தவார் த்தையால் மோக்ஷ நெறியையும் புரட்டுகின்ற செய்கையும், அவ்வி ததகுந்த புத்தியும், நன்றி விசுவாசமும், பட்டினத்தை ஆளும் ராஜா ங்கமும் தாக்ஷண்யமில்லாமலும், அனுச்சாரமும், முடிவில்லாத மாந் திரீகமும், வஞ்சகமும், சென்றவர்களைக்குறித்து நித்தியம் புகழ்ந்து பேசுதலும், இவ்வித விதரணபுத்தியும் உளவாம். பொற்கொடிபோ ன்ற பெண்களில் அமிர்தமானவளே எ-று.

## கே து வி ன மி ச ம்.

அமுதமுளகேதம்சமதனையுற்றுகேளு
　　அறுபத்துநான்குகலைக்கியானமெலாமறிவன்
சமதாயன்வயித்தியத்தில்தான்சமர்த்தனுவன்
　　சத்துருவைமித்துருவாய்சமையத்திற்கொள்வன்
திமிதமிலாமனதுடையன்றிப்பிரமைபூண்ட
　　தீனரையெலாங்காக்குந்தியாகமுளசெம்மல்
குமுதமலர்விழிபோன்றகோகனகப்பெண்ணே
　　கோள்களதுநல்லமிசங்கொண்டுபலன்கூறே.

(இ-ள்.) தேவாமிர்தம்புசித்த கேது என்னும் கிரகத்தினுடை ய அமிசத்தில் பிறந்தவனுக்கு அறுபத்துநான்கு கலைக்கியானங்களைப் படித்துச்சொல்லலும், பொதுமையாய் வைத்தியஞ்செய்வகையில் சம ர்த்தும், நல்லசமையத்தில் சத்துருவை மித்துருவாக்கிக்கொள்ளலும்,

சபலமும், திகில் பிடித்திருக்கின்ற ஏழைகளை ரக்ஷிக்கும்திராணியும், கேட்டதைக்கொடுத்தலும், ஆள் அரசுரிமையும் உளவாம். நீலோற்பலத்தைப் போன்ற விழியும், பொன்மயமான தேகமும் உடைய மாதே நவக்கிரகங்களுடைய நல்ல அம்சங்களைக் கொண்டு பலன்சொல்லுக எ-று.

---

## துவாதசாம்சபலன்.

புதுமொழி-விருத்தம்.

அசுபதிமுதற்காற்சோரமதில்ரெண்டுசுகமாமூன்றிற்
கிசைபுத்திநாலிற்பொன்சேர்ந்திடுமடுப்பின்முதற்கால்
வசையிலேயோகம்ரெண்டுவன்மூன்றிலாண்மையாகும்
இசையுநாற்கால்தரித்ரமென்றனர்கலைவல்லோரே.

(இ-ள்.) அசுபதி க-ல் சோரம், உ-ல் சுகம், ௩-ல் அறிவு, ச-ல் தனம், பரணி, க-ல் கீர்த்தி, உ-ல் யோகம், ௩-ல் வலிவு, ச-ல் தரித்திரம் என்று சாத்திர மறிந்தவர் சொல்லுவ ரென்பதாம் எ-று.

கார்த்திகைமுதற்கானல்ல நெறியுடைக்காலைரெண்டில்
வார்த்தைகாமபீரமாகும் வகைபெறுமூன்றுங்காலில்
கீர்த்தியுண்மகிபனுவன் கிளர்ந்தநான்கிற்குவித்தை
பார்த்துமும் மூன்றுநாளைப் பகுத்துட னுணர்ந்துகொள்ளே.

(இ-ள்.) கிருத்திகை க-ல் நற்குணம், உ-ல் காம்பீரம், ௩-ல் கீர்த்தி, ச-ல் வித்தை யுளவாம். இவ்வடைவே மற்ற நட்சத்திரங்களையும் மூன்றாகப்பிரித்து பலனை யறிந்துகொள்க எ-று.

---

## திரிம்சாம்சபலன்.

புதுமொழி-விருத்தம்.

சொன்னலக்கினத்தைமுப்பதுபங்கு
துணித்துறுங்காலைப்பாகத்திற்
கென்னகோட்பங்காமன்னகோளுதயத்
திற்கெந்தவீட்டினிலிருந்த
தன்னவீட்டின்பக்கம்முதலெட்டுத்
திக்கினுண்மற்றைகோளறிந்து
மன்னவேபூர்வதனமுதலாபம்
வருமெனச்சொல்லுஞ்சோதிடமே.

(இ-ள்.) மேற்சொல்லிய ஜென்மலக்கினத்தை ௩௦-பங்குசெய்து ஜெனனகாலத்தின் பங்கு எந்தக்கிரகத்தின் பங்காகுமோ அந்தக்கிர

கம் ஷை லக்கினத்திற்கு எந்தவீட்டி லிருந்ததோ அந்தவீட்டின் திசைமுதல் எட்டுத்திசையிலு முள்ள மற்றைக் கோள்க ளிருக்கின்ற திசையும் இவ்வடைவே அறிந்து, அந்த அந்த திசைப்பக்கம் பூர்வ தனமும், லாபமும் உண்டென்பதைத்தெரிந்து கொள்க எ-று.

வேறு.

ஆட்சியுச்சமேயாகுமருகினில்
தாட்சிமூடநீசஞ்சத்துருதூரம்
மாட்சிநன்மைகோண்மாதேவதாபூமி
சூட்சிதீமைகோள்துர்க்கையின்பூமியே.

(இ-ள்.) மேற்சொல்லிய கிரகங்கள் ஆட்சி உச்சத்திலிருந்தால் பூர்வதனமும், லாபமும், சமீபமான இடத்தில் கிடைக்கும்; மூடம் நீசம் சத்துரு இவ்விதத் தானத்தி லிருந்தால் தூரமான இடத்தில் கிடைக்கும்; அந்தகிரகம் சுபக்கிரகமானால் அந்தப்பூமி நல்லதாகவும், அசுபக் கிரகமானால் மசான பூமியாகவும் தெரிந்துகொள்க எ-று.

வேறு-உயிர், உடல்.

ஆதிநவக்கோளிரவி முதன்மைவீடா மாளரிமுன் மான்வரையிலாறிராசி, ஓதிலதுவேயுயிரா மற்றைராசி யொளிர்சாஎமுன் கடகம்வரை யாறிராசி, மாதிரமாஞ்சசிக்குரிய மனையாக்கேக மன்னுமிந்த ராசிகளில் வரில்சுபக்கோள், கோதின்மிகச் சுகமுண்டாங் கொடுங்கோள்வந்தால் குழவிக்குசுகமில்லை கூறுவாயே.

(இ-ள்.) நவக்கிரகங்களில் தலைமையான சூரியனுடைய ராசி சிங்கமுதல் மகரம்வரையில் ஆறும் உயிரென்றும், நிலைமையான சந்திரனுடைய ராசி கும்பமுதல் கடகம்வரையில் ஆறும் உடலென்றும் இவ்விருவகை ராசிகளில் சுபக்கிரக மிருக்கப் பிறந்தகுழந்தைகள் சுகமாகவும் அசுபக்கிரகமிருக்கப் பிறந்தகுழந்தைகள் அசுகமாகவும் இருக்கும், இதல்லாமல் இவ்விதராசிகளில் முன்னர்சொன்னதை வெற்றியென்றும், பின்னர்சொன்னதை தோர்வையென்றும் வழங்குகின்றன எ-று.

வேறு.

ஜெனித்தநாழியிற் சேர்ந்தவிராசியை
இனித்திருக்கு முயிரெனவேலுமே
ஜெனித்தநட்சத் திரத்தினிராசியை
அனித்தமாமுட லாமென்றறைமினே.

(இ-ள்.) குழந்தை பிறந்தநாழியி னிராசியை உயிரென்றும் ஷை குழந்தைபிறந்த நட்சத்திரத்தி னிராசியை உடலென்றும் சொல்லப் படும் எ-று.

முதுமொழி-விருத்தம்.

**குழந்தைபிறந்தவுடன் முன்னிட்டறியும்பலன்.**

மாமன்சிறுவன் ருய்தந்தை மரணமைந்தி லீரைந்தில்,
பூமன்காரி மதிவெய்யோன் புகழ்க்கோளுக்கிற் சாவில்லை,
சோமற்கேழ்சேய் சனிதாய்சாஞ் சுடருக்கேழில் பிதாமரண
ம், தீமைக்கோள்க ளுடலுயிரைப் பற்றிநிற்கில் சிறுவன்சாம்.

(இ-ள்.) அம்மான்-குழந்தை-தாய்-தந்தை-இவர்களுக்கு (தோ ஷம் உண்டு இல்லையென்கிற வினவுக்கு விடை) இலக்கினத்திற்கு ரு-ல் க0-ல் செவ்வாயிருக்கில் மாதுலனுக்கும், சனியிருக்கில் சிசு வுக்கும், சந்திரனிருக்கில் தாயிற்கும், சூரியனிருக்கில் பிதாவிற்கும் அரிஷ்டம்; சுபக்கிரகயிருக்க பார்க்க அரிஷ்டமில்லை, மேலும் சந்திர னுக்கு எ-ல் செவ்வாயாவது சனியாவது இருக்க பார்க்க தாய்மரண ம், சூரியனுக்கு எ-ல் செய்வாய் சனி இருக்க பார்க்க பிதாமரணம், பின்னும் அசுபக்கிரகங்கள் சந்திரலக்கினத்திலும் ஜெனன லக்கினத் திலும் இருக்கில் குழந்தை இறந்துபோகும் எ-று.

வேறு.

நிலைசொலிற் பத்தோனெட்டோ னிலக்கினத் துடை
யோன்மிக்கேல், மலைவிலை தீர்க்காயுற்று மத்திமமிரண்டுமிக்
கேல், பிலமொன்றே லெண்ணுன்காகும் பிலவீனமூன்றுமா
கில், இலனென்றூர் வயதுமெத்த விராறிற்குள் ளென்பாரே.

(இ-ள்.) சிசு நிலையைச்சொல்லுமிடத்து க0-அ-க-இவ்விடத்து ள்ள கிரகமூவரும் பிலன்பெற்றிருந்தால் (நவக்கிரகதிசாவருஷ-கஉ0) ஆகிய உத்தமவயதும், இருவர் பிலன்பெற்றிருந்தால் அதிற்பாதி சுo- ஆகிய மதிமவயதும், ஒருவர் பிலன்பெற்றிருந்தால் அதிற்பாதி ௩உ- ஆகிய அதமவயதும், மூவரும் பிலனீனராகில் கஉ-குள்ளே அதமாவ தமவயதென்பார்கள் எ-று.

**உச்சகிரகதொகைப்பலன்.**

விருத்தம்.

ஒருகோளுச்சமிட்டம்போமோங்குமிரண்டேலரசாகும்
கருமூன்றுகிற்சதுரங்கத்தானைச்சமூகமன்னவனும்
வருநால்மங்களப்புரிவிக்குமருவுயைந்தாறெனிற்றேவர்
பரவுந்திபார்முழுதும்பாரமாகியளித்திடுமே.

(இ-ள்.) ஒருகிரகம் உச்சம்பெறில் துன்பநிவாரணம், உ-கிரகம் உச்சம்பெறில் இராஜ்ஜியாதிகாரம், ந-கிரகம் உச்சம்பெறில் இரத கெஜதுரகபதாதிகளுக்குத்தலைமை, ச-கிரகம் உச்சம்பெறில் லட்சுமி தாண்டவம், ரு-அல்லது சு-கிரகம் உச்சம்பெறில் தேவப்பிறப்பும் நீதியுடன் உலகமுழுமையும் காக்கலுமென்பதாம் எ-று.

**உச்சகிரகவகைப்பலன்.**

**சூரியன், சந்திரன்.**

வழுத்தியசெங்கதிருச்சம்பெறவுதித்தோன்றனும்
மன்னவனும்பிரதாபசாலிமகாபெலவான்
பழித்திடுபுன்னோயில்லான்றனதான்யமுள்ளான்
பலவிதவாகனனுடலிற்பழுதொன்றுமில்லான்
செழித்திடுசந்திரனுச்சஞ்சகலசனபிரீயன்
செல்வகுணம்புத்திரவதானியமுஞ்சேரும்
விழித்துமயலளித்துமனமுருக்குமடமாதர்
வெகுபேரைப்புணருகின்றமிகுபோகியாவான்.

(இ-ள்.) சொல்லுதற்குரிய சூரியன் உச்சமாகப் பிறந்தவன் அரசுரிமையும் பராக்கிரமமும் மிகுந்த பலாட்டியமும் அவமதிக்கத்தகுந்த கொஞ்ச நோயு மில்லாமையும் தனம் தானியமும் நானாவித வாகனங்களும் தேகத்தில் உறுப்புகுற்றமில்லாமையும்; செழுமைபொருந்திய சந்திரன் உச்சமாகப் பிறந்தவன் சகலமான பேர்களிடத்தில் வாஞ்சையும் நல்ல மனதும் புத்திரவிருத்தியும் நவதானிய லாபமும் அனேகம் ஸ்திரிகளைச்சேருதலும் அதிகமானபோகமும் உடைத்தாயிருப்பன் எ-று.

**குஜன், புதன்.**

ஆகுஞ்செவ்வாயுச்சங் கீர்த்திபிறர்க்கினியான்
அவனிதனினெடுங்கால மாயுளுடையவனும்
வாகுடையன்பித்தன்பிதிர்த் திரவியங்களுள்ளான்
மருவுமிகுபுத்திமான் மன்னவனாயிருப்பன்
மோகமுறும்புதனுச்சஞ் சகலகலைவல்லன்
முறைமையுடன்சங்கீதப் பிரீயன்வெகுகுணவான்
சேகரமாபுத்திமான் கணிதவகைதெரிவோன்
திண்புவிக்கோரரசனாமுண்டிருக்குஞ்சீமான்,

(இ-ள்.) அங்காரகன் உச்சமாகப்பிறந்தவன் சிறப்பும், அன்னியரிடத்தில் தயவும், உலகத்தின்கண் வெகுகாலம் உயிருடனிருத்தலும், பராக்கிரமமும், பித்ததேகமும், பிதாபாக்கியமும், பொருந்திய மிகுந்த

விவேகமும், அரசனைப்போலிருத்தலும்; ஆசையைத்தருகின்ற புதன் உச்சமாகப்பிறந்தவன், கலைக்கியானமெல்லா மறிதலும், பந்துக்களும், கீதவாத்தியங்களில் சந்தோஷமும், மிகுந்தநற்குணமும், சிறப்புபொருந்திய புத்தியும், கணக்கதிகார மறிதலும் பூமியின்பேரில் ஒப்பற்ற அரசனைப்போலவும், நூறுவயது வரையில் வாழ்வை உடைத்தாயிருப்பன் எ-று.

குரு, சுக்கிரன், சனி.

ஆமரசனுச்சத்தில்வெகுசம்பத்துள்ளான்
அரசன்மிகுபோகவானணிதனமுமுளனும்
காமரசவனிதைவாகனம்வித்தைபுதல்வர்
கனமாகமருவுமுபகாரனுகவிருப்பன்
பூமலிசுக்கிரனுச்சந்தனம்வித்தைபுதல்வர்
போகமிகவுளன்காரியுச்சமதிற்பெலவான்
ஏமமாரோக்யந்தீர்க்காயுணன்மையுடனே
இரணியங்க்ராமஞ்சேனையிவைகளுளனுமே.

(இ-ள்.) பிரகஸ்பதி உச்சமாகப் பிறந்தவன் அதிக ஐஸ்வரியமும், ராஜஉக்கும், மிகுந்தபோகமும், ஆடையாபரணங்களும், இன்பரசமுள்ள ஸ்ரீகள்நேசமும், நல்லவாகனங்களும், கல்வியும், புத்திரர்களும், காம்பீரியமாகப்பொருந்த உதவிகள் செய்தலும்; புஷ்பவாசமுள்ள சுக்கிரன் உச்சமாகப் பிறந்தவன் திரவியமும், படிப்பும், குழந்தைகளும், ஸ்ரீபோகமும்; சனியன் உச்சமாகப் பிறந்தவன் வன்மையும், இன்பமும், சவுக்கியமும் ஆயுர்தீர்க்கமும் நன்மையுடன்பொன், பதி, படை, இவைகளை உடைத்தாயிருப்பன் எ-று.

வேறு.

இராகு கேது.

கருங்கோளுச்சமதுவாகிற்கனத்ததுடுக்குந் தகைமையும்பார், வருங்காரியஞ்சொன்மதியூகி மாறுவலிமைமனதுளனும், அருங்கேதுச்சமதுவாகி லாயுள்வேதாந்தம், ஒருங்கேயறிந்துவுலகத்தா ருவக்கநடக்குமுண்மையனே.

(இ-ள்.) இராகுகிரகம் உச்சமாகப்பிறந்தவன் மிலேச்சராஜவல்லமையும், இனிவருங்காரியத்தைச் சொல்லும்படிக்கான மந்திரித்தன்மையும், இளைக்காத நெஞ்சமும்; கேதுகிரகம் உச்சமாகில் ஆயுள் வேதமுதலிய வேத வேதாந்தங்களும் நன்றாயறிந்து சான்றோர்களால் சந்தோஷிக்க நடந்துக்கொள்ளும் மெய்மையும் உடைத்தாயிருப்பன் எ-று.

## கெஜகேசரியோகம், நீசபங்கராஜயோகம்.

வேறு.

இருட்கிறைசேவிடபம்பிற்சாவிற்கலேவர்த்தனேயா
யில்லிசையுற்றிருப்பதுபொற்கெனிற்கெஜகேசரியாம்
விருப்பமுளவாழ்வதிகன்வேந்தனுமாநீச
மெவியவிற்கிறைவனந்தவிட்டிலுச்சந்தவனி
லருட்பெறவுற்றிடவதனுக்காதிபன்கோணிருக்கி
லல்லவெனிலம்புலிக்குக்கேந்திரிக்கிலதுதான்
மருட்பெறுமக்நீசனுக்காகிலுமாகிக்குருபேர்
வர்க்கமுறினீசபங்கம்பெயரிவன்மன்னவனே.

(இ-ள்.) பூர்வபக்ஷத்துச் சந்திரனும் வியாழனும் ௬-ம் ௧௦-ம் ஆ௪, மீனம், இடபம், தனுசு; கும்பம், இந்த ராசிகளிலிருக்கில் கெஜகேசரி யோகமாம், இதன்பலன் சகலஜனபிரியன், வெகுபாக்கியவான் இராஜனென்ப, இதன்மேல் நீசனிருந்த வீட்டுக்குடையவன் அந்த வீட்டுக்குச் சாதிபதி வீட்டிலிருக்க, இதற்குடையவன் ௫-௯-ல் இருக்க, அல்லது மதிக்காகிலும், கேந்திரிக்க, அல்லது அந்த நீசனுக்காகிலும் கேந்திரிக்க இது குருவர்க்கமுமேறில் நீசபங்கராஜயோகம் இதன்பயன் அரசன் எ-று.

---

## கிரகமாலிகாயோகம்.

### எ-வீடு கிரகமாலே.

எண்ணிய லக்கினமுதலேழுவீட்டி லிடைவிடாமற்கிரகமாலேயாக, நண்ணிடில்வல்லகி யோகம்பலன்கள்கூறி னலமுளனுச்சாகிபரனீதியாளன், புண்ணியசம்பன்னனறி வுடையகோமான் புகழ்செறியும்பிரசங்கிவித்துவானும், திண்ணிய நற்குலமுடைய னிபுணன்சிலன் றிரள்யோகவானென்றே செப்புவாரே.

(இ-ள்.) என்ணத்தகுதியான இலக்கினமுதல் ஏழுராசிவரையில் தொடர்பாய் கிரகங்கள் வரிசையாக யிருக்கப்பிறந்தவனுக்கு (வல்லகியோகம்) பலனுவது மனதில் உற்சாகமும் செங்கோன்மையும் புண்ணியசம்பத்தும் அறிவுடைமையும் கீர்த்திபொருந்திய பிரசங்கமும் வித்துவத்தன்மையும் வண்மையும் நல்லகுலமும் கெட்டித்தனமும் பரிசுத்தமும் தைரியமும் அயிஸ்வரியமும் உண்டாகும் எ-று.

### அா-வீடு கிரகமாலே.

வாருலவுமுலேயாள்கேளிலக்கினங்கண்முதலாய்
மாறுமலேயாறுவீட்டில்கோணிற்கப்

பாருலவுசக்ரதரயோகங்களென்னப்
• பகர்பலன்றனைத்தெரிந்துபார்த்திடுமப்போது
சீருலவுமன்னவனுஞ் சுகதேகன்சீமான்
சினமில்லான்கிருபையுள்ளன்சேர்ந்தபிரதாபன்
ஏருளவாக்கியன்ஞானந்தானபுத்திமானும்
இனியதாதாவென்றேயியம்பிடுவர்கண்டீர்.

(இ-ள்.) கச்சையணிந்திருக்கின்ற கொங்கையுடைத்தானவளே, இலக்கினமுதல், ஆறிராசிவரையில் இடைவிடாமல் கிரகங்களிருக்கப்பிறந்தவனுக்கு (சக்கரதரயோகம்) பலனாவது, சிறப்புபொருந்திய இராஜத்வமும், சுகமானதேகமும், லட்சுமீகரமும், பொறுமையும், வாக்குதாட்டியும், கியானமும், அறிவும், உதாரத்வமும், உண்டாகும்.

ரு-வீடு கிரகமாலை.

கண்டலக்கினங்கண்முதலைந்துவீட்டிற்
கருணையுடனேகிரகஞ்சேர்ந்துநிற்கில்
ஒண்டொடிநற்பரசயோகங்களென்றதனை
யுரைப்பரவன்மேதாவியுச்சாகியாகும்
தண்டமிழன் பலகலையுந்தெரிந்துரைகள்பகர்வன்
சகலசனங்களும்புகழத்தான்மிகவேவாழ்வன்
எண்டிசைகள்புரந்திடுமன்னவராற்பூச்சியவான்
இனியதனவான்வீட்டின்கருமமெலாம்பார்ப்பன்.

(இ-ள்) இலக்கினமுதல் ஐந்துராசிவரையில் நெருக்கமாய் கிரகங்களிருக்கப்பிறந்தவனுக்கு (பரசயோகம்) பலனாவது மேன்மையும், சந்தோஷமும், அழகிய தமிழ்ச்சாத்திரந்தெரிந்துரைத்தலும், சர்வத்திராளும் புகழவாழ்தலும், திக்கெட்டையும் காக்கின்ற அரசரால் பூஜிதமும், மிகுந்ததனமும், சம்சாரகிருத்தியங்களில் ஜாக்கிருதையும் உண்டாகும் எ-று.

வேறு.

சு-வீடு கிரகமாலை.

பார்க்கிலக்கினந்தன்னோடுபயினான்குமனைக்குள்ளாக
ஏர்க்கவேகிரகநின்றுவிதுவேகேதாரயோகம்
தீர்க்கமாய்கிருஷிபண்ணிநிதிதேடுந்திடவான்சுற்றத்
தார்க்கன்பன்சுகவான்ராஜபூச்சியன்றகைமையுள்ளான்.

(இ-ள்.) இலக்கினமுதலாக நான்கிராசிவரையில் சரியாக கிரகங்களிருக்கப் பிறந்தவனுக்கு (கேதார யோகம்) பலனாவது தாராளமாய் விவசாயம்செய்து பொருளைச்சம்பாதிக்கும் கெட்டித்தனமும்,

உறவின்முறையார்களிடத்தில் பக்ஷமும், ராஜபூஜிதமும், பெருமையும் உண்டாகும் எ-று.

## ௩-வீடு கிரகமாலை.

உள்ளதோர்மூன்றுவீட்டி லுற்றிடிற்சூலயோகம்
மெள்ளவப்பலனநேக வித்தையுள்ளவனுச்சாகி
தெள்ளியபோகவானுந் திரவியந்தேடுஞ்செல்வன்
கொள்ளவும்விலைகள்கூறி விற்கவுங்குறிப்புளாளன்.

(இ-ள்.) இலக்கினமுதல் மூன்றிராசிவரையில் கிரகங்களிருக்கப்பிறந்தவனுக்கு (சூலயோகம்) பலனாவது பலபாஷை யறிதலும், உத்சாகமும், சம்பத்தும், பொருள்சம்பாதிக்கின்ற சீரும், கிறயவிற்கிறய வல்லமையும் உண்டாகும் எ-று.

## உ-வீடு கிரகமாலை.

ஆள்சன்மமிரண்டிலேழு கிரகமுமமர்ந்துநிற்கில்
நீள்கனயோகமென்ப ரிதன்பலனிதிமான்மிக்கோர்
தாள்தொழுதிறைஞ்சிநிற்குஞ் சரசவான்றீர்க்கஜீவி
மேள்சுபகன்மன்சென்மத் தேழுறிற்கௌளயோகம்.

(இ-ள்.) இலக்கினமுதல் இரண்டாம்ராசிவரையில் ஏழுகிரகங்கள் இருக்கப் பிறந்தவனுக்கு (மகாகனயோகம்) பலனாவது தனாட்டியமும், மகாபிரபுக்கள் அடிவணங்கி நிற்றலும், சரசகுணமும், நீண்டாயுளும், நற்கருமஞ் செய்தலும் உண்டாகும் எ-று.

## க-வீடு கிரகமாலை.

போகமாங்கௌளயோக முறுதனஞ்சற்றுமில்லான்
சோகமாயிளைத்திருப்பன் சிலவுளான்பகலிற்சோம்பன்
தோகைகேள்பொல்லான்சொற்பகாரியத்தொழிற்குவல்லான்
வாகுடன்புவிசஞ்சார வல்லமையுள்ளனாமே.

(இ-ள்.) இலக்கினத்தில் தானே ஏழுகிரகங்க ளிருக்கப் பிறந்தவனுக்கு (கௌளயோகம்) பலனாவது, துட்டில்லாமையும், தேகம்வாடியிருத்தலும், விரயமும், மூதேவித்தன்மையும், பொல்லாப்பும், சுவல்பகாரிய ஜீவனமும், தேசசஞ்சாரமும் உண்டாகும் எ-று.

வலத்திற்குச் சொன்னதானாலும், இடத்திற்குஞ்சொல்லலாகும்.

## இரவி சேகரப்பலன்.

பிள்ளைமதிமுதனேராயிரவியுடன்கூடிற்
பேரியல்காரியசமர்த்தன்பெண்டிர்வசப்படுவ

ளுள்ளமதியாங்கபடமுறைதிடமாம்வித்தை
யுருவகல்லபுத்தியுரமாமரசருறவு
கள்ளமிலான்வெகுமானிகனகமுளனாி
கள்வசியன்பந்துசனன்கருதலர்பெற்றவனு
மெள்ளலுளான்மந்தபுத்திரிபுசவனும்விதுநே
ரெமனளவுமாதவனோடெய்துதற்கிப்பலனே.

(இ-ள்.) இரவியுடன் பூருவமதிகூடில்பிரபலவான், இயல்புடையவன், காரியசமர்த்தன், களத்திரவசியன், அடக்கமுடையவன், இரவிசேய்கூடில்கபடன், திடவசனுதிகன்; இரவிபுதன்கூடில் வித்தை, அழகு, புத்தி, சரீரபெலம் இவையுடையவன் - இரவிகுருகூடில் அரசருறவுடையவன், பரிசுத்தன், வெகுமானி, தனவான்; இரவிசுக்கிரன்கூடில் களத்திரவசியன், பந்துசன சத்துரு உடையவன்; இரவிசனிகூடில் அபகீர்த்தியுடையவன், மந்தபுத்தியுடையவன், சத்துருவசன்-இவைமதிமுதனேர்சனிவரை, இரவிசகிதப்பலன் எ-று.

இதுவுமது.

பலனில்வசனம்புகழாமிராசசமானனுமாம்
பைம்பொனுக்குள்ளதுவாஞ்சத்துருவிடன்பொன்பவனு
நலமின்மதிதேசாந்திரியாம்புதல்வர்தனமா
நல்வசனன்மந்திரிசேனுபதியாநயனஞ்
சலவிரணநோய்போகந்தனகுலமாம்பந்து
சனப்பிரிவுரோகிதனமூர்க்கனுமாந்தனமு
நிலைமையுங்கீர்த்தியுமுடையனுங்காந்திவித்தை
நிலவனநேர்மால்புகராய்நிற்பதினற்பலனே.

(இ-ள்.) இரவிமதிசேய்கூடில் வீண்வார்த்தைசொல்பவன், கீர்த்திமான்; இரவிமதிபுதன்கூடில் ராசசமானன்; இரவிமதிகுருகூடில் ராசவெகுமானன், நல்லவன், பிரபுசேவையையுடையவன்; இரவிமதிசுக்கிரன்கூடில் சத்துருஉடையவன் விடமார்க்கன், பொன்னுடையவன், பாவஞ்செய்பவன்; இரவிமதிசனிகூடில் குணவீனன், தேசாந்திரி; இரவிசேய்புதன்கூடில்புத்திரவான், தனவான்; இரவிசேய் குருகூடில் நல்லவசனன், மந்திரி, சேனுபதி; இரவிசேய்சுக்கிரன்கூடில் நயனசல விரணரோகமுடையவன், போகமுடையவன், தனமுடையவன், குலவான்; இரவிசேய்சனிகூடில் பந்துசனப்பிரிவுடையவன், ரோகமுடையவன், தனமுடையவன், மூர்க்கன்; இரவிபுதன்குருகூடில் தனம் நிலைமை கீர்த்தியுடையவன்; இரவிபுதன்சுக்கிரன் கூடில் சரீரகாந்தியும் வித்தையுமுடையவன் எ-று.

**இதுவுமது.**

நிற்குணமனுசாரநிதனனுமாந்தனமு
நேத்திரரோகமுமறிவும்வசியமுமாநிருபர்
சொற்கினியதொழிற்றிடமாங்கெருவமபிமானந்
துற்கருமமால்சனிநேர்சுக்கிரன்சுன்னளவு
மெற்கிறையோடிருபெயர்கூடற்கிதுவாமுப்பேர்க்
கிதன்மேற்பொய்கபடசமர்த்தெழுதலுமாமிசைபொன்
சற்குணமித்திரபுத்ரகளத்திரனனீகன்
சசியனன்மாலொடும்பொனொடுங்தபனனேச்சாருதற்கே.

(இ-ள்.) இரவிபுதன்சனிகூடில் குணவீனன், அனுசாரன், தரித்திரன்; இரவிகுருசுக்கிரன்கூடில் தனம், நேத்திரரோகம், அறிவு, சனவசியம் இவையுடையவன்; இரவிகுருசனிகூடில் ராசப்பிரியன், ராசப்பிரவர்த்தகன், மனோதிடன் - இரவிசுக்கிரன்சனிகூடில் கெருவி, அபிமானி, துற்கருமி, இவைரவியோடு இருபேர்கூடும்பலனும்; இரவி மதிசேய்புதன்கூடில் பொய்யன், மனோகபடி, சமர்த்தன், எழுதவல்லவன்; இரவிமதிசேய்குருகூடில் கீர்த்திமான், தனவான், சற்குணன், புத்திரமித்திரகளத்திரவான், சேனுபதி எ-று.

**இதுவுமது.**

சாரமிலன்விடன்கண்பிணியாஞ்சனவிரோதி
தரித்திரனும்புத்திதனம்ராசசமானனுமாம்
பாரியிடத்ததிப்பிரியன்பாடகனுங்குடிலன்
பண்டிதனுந்தாரசுதபாக்கியனும்பணஞ்சேய்
நாரியிவையிலானுந்தாய்பிதிர்தாரவீன
னுஞ்சமர்த்தன்சுந்தரனுநாடகவித்தையுமாஞ்
சோரமிரணம்விரணந்துர்த்தெழிலாமதிசேய்
சுக்கிரனோரனன்மால்சுன்சுடரொடுந்தோன்றுதற்கே.

(இ-ள்.) இரவிமதிசேய் சுக்கிரன்கூடில் உதவியற்றவன், விடன், நயனரோகி; இரவிமதிசேய்சனிகூடில் இனசனவிரோதி, தரித்திரன்; இரவிமதிபுதன்குருகூடில் புத்திமான், தனவான், ராசசமானன்; இரவிமதிபுதன் சுக்கிரன்கூடில் களத்திரமோகி, பாடவல்லவன்; இரவிமதி புதன் சனி கூடில் குடிலன், பண்டிதன்; ரவிமதிகுரு சுக்கிரன் கூடில் களத்திர புத்திரபாக்கியவான்; இரவிமதி குருசனிகூடில் தரித்திரன்; புத்திரவீனன்; இரவிமதிசுக்கிரன்சனி கூடில் மாதுர்பிதிர் தாரஹீனன் - இரவிசேய்புதன் குருகூடில் சமர்த்தன், சுந்தரன்; இரவிசேய்புதன் சுக்கிரன்கூடில் நாட்டிய வித்தையாதிகன்; இரவிசேய்புதன்

சனிகூடில் சோரம், ருணம், விரணம், துர்த்தொழில் இவையுடைய வன் எ-று.

### இதுவுமது.

தோன்றல்களத்தனமதிகங்கிரகமுமப்படியாஞ்
சுததாரகீனனுமாமிவையொடுபிச்சகனு
மீன்றுவசன்சுகிபோகியரசனுமாங்கெருவி
வித்தைதரித்திரனும்விடனினவிரோதி
யீன்றவர்த்துவேஷியுமாமின்மையவமான
மெய்துகளத்திரனுஞ்சேய்பொன்கவிநேரீழ
மான்றலவன்சனிவரையூழணைதலுக்காநாற்பே
ராய்க்கூடலிதன்மேற்கேளகத்தியமாமுனியே.

(இ-ள்.) இரவிசேய்குரு சுக்கிரன்கூடில் வெகுபுத்திர களத்திர வான், தனவான், கிரகவான்; இரவிசேய் குருசனிகூடில் தாரசுதர னன்; இரவிசேய்சுக்கிரன் சனிகூடில் தாரசுதகீனன், பிச்சகன்; இர விபுதன்குருசுக்கிரன் கூடில் மன்மதசுகி, போகவான், தராபதி; இர விபுதன் குருசனிகூடில் கெருவி, வித்தையுள்ளான், தரித்திரன்; இரவிபுதன்சுக்கிரன் சனிகூடில் விடன், இனசன விரோதி, மாதுர் பிதுர்த்துவேஷி; இரவிகுருசுக்கிரன் சனிகூடில்தரித்திரன், அவமான களத்திரவான்-இவை இரவியுடன் மூன்றுபேர் கூடும் பலனும். இத ன்மேல் நாலுபேர்கூடும் பலனையுங்கேட்பாயாக அகத்தியமாமுனியே.

### இதுவுமது.

அமர்வலவன்கோட்சமர்த்தனுந்தயையுதார
மபாக்கியனுஞ்சுதகீனமாசையற்பாயுவுமாந்
தமர்சனவிரோதியெத்தனுந்தாரகீனன்
சலரோகநேத்திரனுந்துராசைபிச்சாடனுமாஞ்
சுமதிதனம்படைத்தலவனும்பாவிசுராபானி
துற்கருமனுநிதனிசோரனுமாஞ்சுகளம்
விமலமதிவித்தையுமாமதிசேய்மால்பொன்னேர்
விதுநிதிசுக்கிரன்விசிதன்வெயிலிடைமேவுதற்கே.

(இ-ள்.) இரவிமதிசேய்புதன் குருகூடில் போர்வல்லவன், கோ ட்சமர்த்தன்; இரவிமதிசேய்புதன்சுக்கிரன் கூடில்தயவுடையவன், உதாரமுடையவன், அபாக்கியவான்; இரவிமதிசேய்புதன் சனிகூடில் புத்திரகீனன், துராசையுடையவன், அற்பாயு வுடையவன்; இரவிமதி சேய் குருசுக்கிரன்கூடில் இனசனவிரோதி, எத்தன்; இரவிமதிசேய் குருசனிகூடில் தாரகீனன், நேத்திரசலரோகநேத்திரன்; இரவிமதி

சேய்சுக்கிரன் சனிகூடில் துராசையுடையவன், பிச்சகன்; இரவிமதி புதன்குருசுக்கிரன்கூடில் நல்லபுத்தியுடையவன், தனவான், சேனுபதி; இரவிமதிபுதன் குருசனிகூடில் பாவி, சுராபானி, துற்கர்மி;. இரவிபுதன்சுக்கிரன்சனிகூடில் தரித்திரன், சோரன்; இரவிமதிகுருசுக்கிரன் சனிகூடில் நல்லகளத்திரமுடையவன், பரிசுத்தன், வித்தையாதிகன் எ-று.

இதுவுமது.

மேவலர்ச்செற்றவன்விடனும்பிச்சகன்வத்திரமு
மெய்புமழுக்குள்ளவனுமேன்மைவிதனமுமாய்ப்
பாவம்வதைசெய்வதற்குப்பயமிலனுந்தேவ
பத்தியபிமானனுமாம்பார்மகனேர்நால்வர்
நாவலன்பொன்கவிசனியுநனும்திற்காமிதன்மே
னவில்வதைவர்க்காந்தீர்த்தயாத்திரையெந்நாட்கும்
போவதிற்சோரமுமாமோனமெய்ஞ்ஞானமுமாய்ப்
புசிப்புமிலதாமறுபேர்பொருந்துதற்கிப்பலனே.

(இ-ள்.) இரவிசேய்புதன் குருசுக்கிரன்கூடில் சேனுபதி, விடன்; இரவிசேய்புதன் குருசனிகூடில்பிச்சகன், சரீரமும் ஆடையும் அழுக்குடையவன்; இரவிசேய்புதன் சுக்கிரன்சனிகூடில் பெரியவன், மனோதுக்கி, பாவி, கொலைபாதகன்; இரவிபுதன் குருசுக்கிரன்சனிகூடில் தேவபத்தி யுடையவன், அபிமானி, இவைரவியோடு நாலுபேர்கூடும்பலனும் - இரவியுடன் ஐவர்கூடில் எந்நாளுந் தீர்த்தயாத்திரை சஞ்சாரமும், சோரமும் உடையவன். ஆறுபேர் கூடில் மௌனமெய்ஞ்ஞானமும் உடையவனுகிப் புசிப்பும் இல்லாமல் இருப்பன்.

மதி சேகரப்பலன்.

இப்பவுமன்முதலவருமிந்துவுஞ்சேர்தலுங்கே
ளியல்புதனநல்லகுலமிதையதிடவானுந்
தப்பறைசொல்பவன்றூதன்கவிஞனுமாஞ்சாது
சனப்பிரியன்புத்திரனுஞ்சகலசனத்துவேஷி
துப்புரவில்லானும்பொல்லாக்களந்தாய்தந்தை
துவேஷிதரித்திரனுந்துர்த்தொழில்பவமாதுலனுஞ்
செப்புதல்குரூரம்விடன்ரோகியுமாந்தீநேர்
சேய்பொன்னளவும்மதியைச்சேருதற்கித்திறனே.

(இ-ள்.) மதிசேய்கூடில்பாக்கியம், தனம், நல்லகுலம், மனோதிடம், இவையுடையவன் - மதிபுதன் கூடில்பொய்யன், தூதன், புலவன்; மதிகுருகூடில் சாதுமார்க்கன், வெகுசனப்பிரியன், புத்திரவான்; மதிசுக்கிரன்கூடில் சகலசனத்துவேஷி, அனுசாரவான்; மதிசனி

கூடில் பொல்லாத களத்திரமுடையவன், மாதுர்பிதுர்த்துவேஷி, தரித்திரன்; மதிசேய் புதன்கூடில் துற்கர்மி, பாவி, தரித்திரன்; மதிசேய்குருகூடில் குரூரவாக்குடையவன், விடமார்க்கன், ரோகி எ-று.

இதுவுமது.

தற்குணமனுசாரஞ்சஞ்சாரந்தாரந்
தனையரிழப்பவனுமாதரவவமானியுமாஞ்
சொற்கணழகறிவுதனவானுந்துற்கருமி
துற்சனனும்வெகுமானிசுகிகொடைநல்லவனு
நற்குலநற்புத்தியபிமானியுமாம்விருத்தை
நாயகன்வாசாலகனும்புரோகிதனல்லவனு
மற்கிறையைக்கனலிகவிநேர்க்கவிசுன்வரைக்கு
மணைதலிதாமிதன்மேற்சொல்வதுவுமுப்பேரதற்கே.

(இ-ள்.) மதிசேய்சுக்கிரன் கூடில் சுதந்தரன், அனுசாரன், சஞ்சாரன், தாரசுதஹீனன்; மதிசேய்சனிகூடில் ஆதரவு அவமானமுடையவன்; மதிபுதன் குருகூடில் அபிராமவசனன், அழகு நேத்திரமுடையவன், அறிவுடையவன், தனவான்; மதிபுதன்சுக்கிரன் கூடில் துற்கர்மி, துற்சனன்; மதி புதன்சனிகூடில் வெகுமானி, சுகி, விதரணன், நல்லவன்; மதிகுரு சுக்கிரன் கூடில் நல்லகுலம், நல்லபுத்தி, அபிமானம் இவையுடையவன்; மதிகுரு சனிகூடில் விருத்தைநாயகன் வாசாலகன்; மதிசுக்கிரன் சனிகூடில் புரோகிதன், நல்லவன் இதன்மேல் மூன்றுபேர்கூடும் பலன் சொல்லுவோம் எ-று.

இதுவுமது.

பேரதிகநல்லபுத்திராஜவசியனுமாம்
பிரக்யாதியழகுகளமிவனதுபெற்றிலனுஞ்
சீரலதிலாசைசதாநித்திரையாஞ்சுகியுந்
திடமனதுமுளனும்பொல்லாதகளத்திரனும்
வாரமறிவிசைதனலாபஞ்செவிமந்தமுமாம்
வங்கிசபூச்சியன்றனவானும்விடமார்க்கமுமாம்
போரதிகன்சனப்பகையாம்புவிமகன்மால்பொன்னேர்
புதன்கவியேமன்மதியைப்பொருந்துதற்கித்திறனே.

(இ-ள்.) மதிசேய்புதன்குருகூடில் பிரபலன், நல்லபுத்தியுடையவன், ராஜவசியன்; மதிசேய்புதன் சுக்கிரன்கூடில் கீர்த்திமான், ரூபகளத்திரன், அழகில்லாதவன்; மதிசேய்புதன்சனிகூடில் துராசை சதாநித்திரை உடையவன்; மதிசேய்குருசுக்கிரன்கூடில் சுகி, மனோதிடன்; மதி சேய் குரு சனி கூடில் பொல்லாத களத்திரமுடையவ

ன்; மதிசேய்சுக்கிரன் சனிகூடில் அன்பு, அறிவு, கீர்த்தி, தனலாபம், செவிமந்தம், இவைஉடையவன்; மதிபுதன்குரு சுக்கிரன்கூடில் பந்துசனபூச்சியன், தனவான்; மதிபுதன்குரு சனிகூடில் விடமார்க்கன்; மதிபுதன்சுக்கிரன் சனிகூடில் வெகுகலகன், சனப்பகையுடையவன்.

இதுவுமது.

திறற்கேடன்றுக்கிபொல்லாதவனுகுமதியைச்
  சீவின்முதல்மூவர்களுஞ்சேரிலிவைதீரப்
பிறைச்சேர்வனுல்வரெனிற்றனங்குலநல்லவனும்
  பெரியவனுதுலனும்பிச்சகனுமீதுளனுங்
குறைத்தேகனுகுமைவர்கூடிலண்டத்தளவுங்
  குணிக்குமறிவுடையனழுக்குடையவனுமிதன்மேற்
பொறைப்போதற்கொருதனயமான்முதனேர்கனற்பாற்
  பெருந்துதல்கேளென்றனன்சந்தனப்பொருப்புற்றவனே.

(இ-ள்.) மதிகுருசுக்கிரன் சனிகூடில்திறற்கேடன், பொல்லாதவன், துக்கி இதன்மேல், ௬, பேர்கூடிற்பலன் அறியும்படி - மதிசேய்புதன் குருசுக்கிரன் கூடில்தனவான், குலமுடையவன், நல்லவன்-மதிசேய் புதன் குருசனிகூடில்பெரியவன், தரித்திரன்-மதிசேய் புதன் சுக்கிரன் சனிகூடில் பிச்சகன் - மதிசேய்குருசுக்கிரன்சனிகூடில் பிச்சகன் - மதிபுதன்குருசுக்கிரன் சனிகூடில் அங்கவீனன் - மதிசேய்புதன்குருசுக்கிரன் சனிகூடில் அண்டத்தளவுங் குணிக்கும் அறிவுடையவன், அழுக்குடையவன். இதன்மேல் பிரமாவுக்குப் புத்திரனைவா. செவ்வாய் சேகரப்பலனுங் கேட்பாயாகவென்று திருவாய்மலர்ந்தருளினவன் சந்தனசைலத்தையுடைய சுப்பிரமணியக்கடவுள் எ-று.

சேய் சேகரப்பலன்.

தனமறிவுவயித்தியமாஞ்சற்குணஞ்சோதிடத்திற்
  றயவுளனுந்தாதுருவாதத்தசடுற்றவனு
மனதிதமில்பாடகனும்வாத்யநடங்கீத
  மனதுளனுமங்கமதில்வடுக்குறைமற்றுளனு
மினசனமில்விலைக்குளனுமிறைவரிடத்துளனு
  மியல்புடையன்றனிவிடனுமின்பமில்புத்திரனுஞ்
சினமில்சனத்வேஷனுமாந்தரித்திரனுங்கொடிய
  சேவகனுங்களனுமானேரனற்சேருதற்கே.

(இ-ள்.) சேய்புதன்கூடில்தனவான், அறிவுடையவன், வைத்தியன் - சேய்குருகூடில்சற்குணன், சோதிடப்பிரியன்-சேய்சுக்கிரன்கூ

டில் தாதுருவாதி, அசடன் - சேய்சனிகூடில் மனோசஞ்சலி, பாடகன் - சேய்புதன் குருகூடில் வாத்தியசங்கீதநடனப்பிரியன் - சேய்புதன்சுக்கிரன்கூடில் அங்கவீனன் - சேய்புதன் சனிகூடில் பந்துசனவீனன், விலைப்படுவென் - சேய்குருசுக்கிரன்கூடில் அரசரிடத்து உறவுடையவன் - சேய்குருசனிகூடில் இயல்புடையவன், தனவான், விடன், சேய்சுக்கிர சனிகூடில் துற்புத்திரனை யுடையவன் - சேய்புதன் குருசுக்கிரன் கூடில் சாந்தன், சனத்துவேஷி - சேய்புதன்குரு சனிகூடில் தரித்திரன் - சேய்குருசுக்கிரன் சனிகூடில் கொடியசேவகன் - சேய் புதன் குரு சுக்கிரன் சனிகூடில் சோரன் எ-று.

### புதகுருசுக்கிர சேகரப்பலன்.

சேரல்புதப்பலனிதுபாக்கியமறிவும்முளனாஞ்
செப்புதல்வினோதவிதம்பாடகனாஞ்செஞ்சொற்
சாரசன்சோதிடந்தனவான்சத்துருவற்றவனாஞ்
சௌபாக்கியவானாஞ்சத்தியன்விடனாந்தனியாஞ்
சூரனுமாங்குருநேராய்த்தூதனையுற்றிடற்காஞ்
சுக்கிரனோர்பொன்னையுறிற்சொம்மழகாஞ்சுதனி
லாரெனலாஞ்சவுக்கியமாமசிதசிதற்சேரி
லவமானகளந்தாசரழிவதுமாவதுமே.

(இ-ள்.) புதன்குருகூடில் பாக்கியம், அறிவு, அழகுஇவை உடையவன் - புதன்சுக்கிரன் கூடில்வினோதவசனன், பாடகன் - புதன் சனிகூடில் கல்விமான், கெணிதன், தனவான், சத்துருஇல்லாதவன் - புதன்குருசுக்கிரன் கூடில்சௌபாக்கியன் - புதன்குருசனிகூடில் சத்தியவாக்குடையவன், விடமார்க்கன் - புதன்சுக்கிரன் சனிகூடில் தனவான் - புதன்குரு சுக்கிரன்சனிகூடில் சூரன் இவை புதசேகரம். குருசுக்கிரன்கூடில்தனவான், அழகன் - குருசனிகூடில் புத்திரவீனன் - குருசுக்கிரன்சனி கூடில் சௌக்கிய முடையவன் - இவை குருசேகரம், சுக்கிரன் சனிகூடில் அவமான களத்திரமுடையவன் ஆவதும் அழிவதுமான தாசிதாசருடையவன், எ-று.

### அஷ்டகவர்க்க சமதாய்பலன்.

விருத்தம்-வேறு.

ஐயாச்சுவாமியத்தி லார்ந்தசிற்றம் பலச்சக்கரம்
மெய்யாகவிங்குகொளின் மேலாம் நலனைத்தரும்
கையால்பரல்தப்புங் காணென்றிரண்டதமம்
பொய்யாதமூன்றுமுதல் போற்றுவாயுத்தமமே.

(இ-ள்.) அஷ்டகவர்க்கு-ஐயாச்சுவாமீயத்தில் காணும் சிற்றம்பலச்சக்கிரத்தை, மெய்யாயிங்கு கொண்டுபார்த்தால், நன்மையாம்.'அதுதள்ளி - கையால் கணக்கிடும் பரல் தப்பிப்போனாலும் போம்,' அது நிற்க அஷ்டகவர்க்கில் - ஒன்றிரண்டு பரலின்பலன் அதமம், மூன்றின்மேலேறும் பரலின்பலன் உத்தமம் எ-று.

## எழுவர்பலன்.

இரவிக்கொன்பான்மதிக்கும் புகுந்திக்குமீரிரண்டாம்
குருவிற்கைந்தாஞ்சேய்க்கு மூன்றுசுக்கிரனுக்கோரேழ்
வருசனிக்கிருநான்காகும் வாய்ந்திடுஞ்சமதாயத்தை
விரிவுசோத்தியத்தால்தாக்கி மேன்மூவொன்பானுக்கீநாளே.

(இ-ள்.) சூரியன் சமதாயத்தில் கூ-வது இராசிப்பரலைக்கொண்டு பிதாவுக்கும்,சந்திரன் சமதாயத்தில்-ச-வது இராசிப்பரலைக்கொண்டு-மாதாவுக்கும்-நாதிக்கும்,குருசமதாயத்தில் ரு-வதுஇராசிப்பரலைக்கொண்டு-புத்திரர்க்கும்,குஜன்சமதாயத்தில் ந-வது இராசிப் பரலைக்கொண்டு சகோதாருக்கும், சுக்கிரன் சமதாயத்தில் எ-வது இராசிப்பரலைக்கொண்டு களத்திரத்திற்கும், சநிசமதாயத்தில் அ-வது இராசிப்பரலைக்கொண்டு ஜாதகனுக்கும், யாதொருபலனைச் சொல்லுமிடத்தில்,அந்தந்த இராசியின்பரலை சோத்தியபரலினால் பெருக்கி உஎ-க்குக்கொடுக்கநின்றது-நட்சத்திரமாகும் எ-று.

திருவளரொளிபிறைக்குச் சென்னிநாண்முன்னாகக்கொள்
தெரிவையேதேய்பிறைக்குச் செப்பவிட்டம்முன்னாக
விரைவுடனெண்ணிக்கண்ட நாள்குருமேவுங்காலம்
பரவுநற்பலன்சுன்மேவில் பன்னுகாரகர்க்குவூனம்.

(இ-ள்.) அதனால் வருந்தொகைக்கு பூர்வபக்ஷத்தில் அச்சுவனி முதலாகவும், அமரபக்ஷத்தில் அவிட்டமுதலாகவும், எண்ணிக்கண்ட நக்ஷத்திரத்தில் குருவரில் நன்மையும், சனிவரில் தீமையும், அந்தந்த காரகருக்கு உண்டாம் எ-று.

ஊனமிற்பரன்முப்பான்மே லோங்கிடிலுத்தமந்தான்
ஆனவையைந்தின்மேலே யாகிடின்மத்திபந்தான்
போனதிற்குறையுமாகில் புகல்பலனதமமாகத்
தானுரையோரைத்தொட்டு சதுர்சதுர்சதுராக்கொள்ளே.

(இ-ள்.) ஜாதகனுடைய வாழ்நாளை முக்கூறுக்கியதற்கு சர்வாஷ்டகவர்க்கில்-இலக்கினமுதல்-நான்குவீட்டிலுள்ள தொகை ந0-க்கு மேல்பட்டா லுத்தமபலன் என்றும், அதற்குமேல் நான்கு வீட்டிலு

ள்ள தொகை ௨௫-க்கு மேற்படில் மத்திபபலனென்றும், அதற்குமே ல் நான்குவீட்டிலுள்ளதொகை ௨௫-க்குக் குறையில் அதமபலன் எ ன்றும் சொல்வாயாக. இதுதான் திரிவிதகண்டமெனப்படும் எ-று.

எக்காளமுற்றபல னேறுந்தினந்தினமும்
தொக்காதுமத்தளமே துஞ்சிமிஞ்சிதுஞ்சிடுமாம்
முக்காலும்டமருகமோ வோங்கிதுஞ்சிவோங்கிடுந்தான்
இக்காலத்தவருக்கு மிதுவேதிரிவிதயோகம்.

(இ-ள்.) மேற்சொல்லிய திரிவிதகண்டத்தில் எக்காளயோகபல னுவது - விர்த்தியாகிக் கொண்டிருக்கும், மத்தள யோகபலன்-குறை ந்து-நிறைந்து - குறையுமாம், டமருக யோகபலன் - ஏறி - இறங்கி - ஏற்றமாகுமாம் எ-று.

பதினொன்றிற்கீராறுங்கில் பகர்ந்திடுசெலவுமேலாம்
துதிபெறுபத்திலேறி வியந்துஞ்சிற்சகடமில்லை
வதியுமாறெட்டீராறின் மன்பரற்றொகைக்குமேலாய்
பதிபுகழிரண்டொன்பான்பன் னொன்றிற்குப்பகர்வாயோகம்.

(இ-ள்.) இலாபத்தானத்திற்கு விரயத்தானத்தொகையுயரில் செலவதிகம், ராஜ்ஜியத்தானத்திற்கு விரயத்தானத்தொகையுயரில் செலவதிகம், ௬-௮-௧௨-ன் தொகைக்கு ௨-௯-௧௧-ன் பரல் உயர்ந்தி ருக்குமாகில் யோகபலன் சொல்லுவாய் எ-று.

---

## இராசிகளிற் சந்திர னின்றபலன்.

### மேடத்தினின்றபலன்.

விருத்தம்-வேறு.

பன்னிருராசிகடோறுஞ்சந்திரனுனின்ற
  பலன்பகர்வர்மேடத்தின்மதிநிற்கப்பிறந்தோன்
மின்னுவிழிபுருண்டுசெற்றேசிவந்திருக்குங்காமி
  மிகுதூரநடந்திடுவன்சீக்கிரசந்தோஷி
பொன்னைமிகத்தேடியுடனேசிலவுபுரிவான்
  புயபலன்வீரியன்மடவார்கலவிக்குவலியன்
சென்னிதனின்மறுவடுவொன்றுளன்சபலனுகும்
  செலங்கண்டஞ்சுவன்முழந்தாட்செறிபிணிவுள்ளவனும்.

(இ-ள்.) இராசி ௧௨-ல் சந்திரனின்றபலன் சொல்லுமிடத்தில் மேஷராசியில் மதியிருக்கப் பிறந்தவனுக்கு பிரகாசம்பொருந்திய நே த்திரமானது உருட்சியாகவும், கிஞ்சம் சிவந்தும், காமாந்தகமும், அ திகநடையும், சீக்கிரமாய் சந்தோஷித்தலும், திரவியத்தைச் சம்பா

த்துச் செலவுசெய்தலும், புஜபலபராக்கிரமமும், ஸ்ரீகளுடன்வி ளையாடுவதில் கெட்டித்தன்மையும், தலையில் மறு அல்லது வடிவுபுத் திசபலமும், ஜலத்தைக்கண்டால் பயமும், முழங்காலில் நோயும் உ ண்டாம் எ-று.

## இடபத்தினின்றபலன்.

உள்ளமகிழ்தருளுமதியிடபத்திலிருக்க
உற்பவித்தோன்குணங்கிருபையுடையனல்லரூபன்
தெள்ளியநாசியின்முகத்திற்பக்கத்தின்மறுவான்
தியாகவான்றொடைவதனம்பருத்திருமலுளனும்
பிள்ளைகண்முந்தியுமுள்ளான்பெண்பெறுவன்பொறுமை
பெறும்பசியனிருசொல்லன்பின்புசந்தோஷிப்பன்
கள்ளவிழியார்க்கினியனண்பருக்குநண்பன்
கண்டிடுமத்திமவயதோன்சவுக்கியபாக்கியவான்.

(இ-ள்.) இருஷபராசியில் பிறந்தவனுக்கு இரக்கமுள்ள மனமும், அழகும், பிரகாசம்பொருந்திய மூக்கில் முகத்தில் பக்கத்தில் மறுவும், துடை முகம் பெருத்திருத்தலும், இரும்புதலும், முதலில் பிறப்பது ஆண்பிள்ளை, பின்னிட்டுப் பிறப்பது பெண்பிள்ளைகள், சாந்தம், அதி கபசி, வாக்கு மாறிப்பேசி பின்பு சந்தோஷமடைதல், பரத்தையரு க்கு சிநேகம், சிநேகிதருக்குச் சிநேகன், ஆயுமத்திபம், சவுக்கியம், சம்பத்து உண்டாமென்பதாம் எ-று.

## மிதுனத்தினின்றபலன்.

வான்மிதுனசசிபலன்மின்னார்மகிழுஞ்சுரதன்
மகிழ்தூதன்சிவந்தகண்ணன்மயிர்சுருண்டேயிருப்பன்
தான்மிகச்சூதுகள்பெறுவனழகன்சத்தியவான்
சாப்பாட்டினிற்பிரியன்றகும்புத்தியானும்
பான்மைசெறிபட்டுடுக்கப்பிரியமுளன்முகத்தில்
பருத்தமறுவுளன்பிரியவாக்குமிகுரசவான்
தேனனையமொழிமடவார்கொண்டாடிப்புகழ்வர்
திடமாயுன்னதமாகச்செறிந்திருக்குநாசி.

(இ-ள்.) மிதுனராசியில் மதியிருக்கப் பிறந்தவனுக்கு ஸ்திரீகள் சந்தோஷிக்கத்தகுந்த லீலாவிநோதம், தூதுபோவதில் இச்சை, சிவ ப்புக்கண், சுருட்டைமயிர், மிகுந்த சூதுகள் தெரிதல், அந்தம், உண் மை, போஜனப்பிரியம், தகுதியானபுத்தி, நல்லபட்டுவஸ்திரமணிவ தில் சந்தோஷம், முகத்தில் மறு, பிரியமுள்ள ரசவசனமும், அழகிய ஸ்திரீகள் புகழ்தலும், ஆயுதீர்க்கமும், அழகியமூக்கும் உண்டாம் எ-று,

### கடகத்தினின்றபலன்.

நாசமிலாக்கடகத்தின்மதியுலவச்சனித்தோன்
நன்னுபலன்மடவாரைநகைபுரிந்துசயிப்பன்
வீசிவளைந்தோடுவனன்புடையநண்பருடையோன்
வீடதிகமாய்க்கட்டிமேவுவன்மெய்குறளன்
நேசமுறுமனக்கள்ளனுத்தேசமுள்ளான்
நிலையில்லாத்தனம்படைத்துநிலத்திலிருப்பன்
பாசமுளனெவருக்கும்பருத்தகழுத்துளனும்
பரவுசமவுபாயனெனவேபகரவேண்டும்.

(இ-ள்.) கடகராசியின் பலனாவது—ஸ்திரீகளை கைவசம் செய்துக்கொள்ளல், வளைந்து வளைந்து ஓடல், அன்புள்ள சிநேகிதருடைத்தாயிருத்தல், அனேகமாய் வீடுகளைக்கட்டிவாழ்தல், குறுகியதேகம், கபடசிநேகம், யோசனை, நிலையில்லாத்திரவியம் சம்பாதித்திருத்தல், யாவரிடத்திலும் பிரியம், பெருத்த கழுத்து, சமையத்திற்குத் தக்கவுபாயமெடுத்தல் உண்டாமென்பதாம் எ-று.

### சிங்கத்தினின்றபலன்.

வேண்டிடுஞ்சிங்கத்தினிற்சந்திரனிருக்கும்பலன்கள்
மிகுகொடியனெடுங்கதுப்பன்மின்னார்க்குப்பகைவன்
நீண்டமலையிற்காட்டிற்சஞ்சரிக்கப்பிரியன்
நேயமிலான்பசிதாகமுடையவனூண்பிரியன்
தீண்டிடுந்தாம்பூலநேயன்மனோதுக்கன்
தியாகியெழில்பராக்கிரமன்றிரபுத்தியுளனும்
ஆண்டகர்விவனடையான்விசாலமுளவதனன்
அற்பகாரியக்கோபியாவனெனச்சொல்லே.

(இ-ள்.) சிங்கராசியின் பலனாவது—மிகுந்தகொடுமை, நீண்டசிகை, ஸ்திரீவிரோதம், மலை-வனம்-இதுகளில் வாசம்செய்ய இஷ்டம், நேசமில்லாமை, பசிதாகம், போஜனப்பிரியம், தாம்பூலப்பிரியம், சஞ்சலம், கொடை, உடைமை, வீரத்தன்மை, கெட்டிமனசு, கெர்வம், உரத்தநடை, பரந்தமுகம், அற்பத்திற்குக் கோபம் உண்டாம்.

### கன்னியினின்றபலன்.

சொல்லுங்கன்னியிற்சோமன்சூழ்பலன்கள்பகரில்
சுகவான்சத்தியவாக்கிசூரதத்திற்பிரியன்
கல்வியிற்சாத்திரவகையில்வல்லவன்மெய்யிளைத்தோன்
காயமுமுன்னதன்லச்சையுடன்படுநற்கருமன்

வெல்லுமேம்பாடுடையன்றர்மசிந்தையாளன்
விதேசசத்திற்சஞ்சாரிமிருதுவாக்குமுளனும்
நல்லவர்கள்பலராலேபூசிதம்பெற்றிடுவன்
நாரிகேள்பிள்ளைகொஞ்சமாநவிலுங்காலே.

(இ-ள்.) கன்னியிராசியின் பலனாவது—சுகம், சத்தியவசனம், லீலாவிநோதம், கல்வியில் சாஸ்திரங்களில் வல்லமை, மெலிந்ததேகம், நெடியவுருவம், வெட்கம், சத்காரியதுரந்தரம், வெற்றிப்பிரதாபம், தர்மகுணம், பரதேசசஞ்சாரம், மிதவசனம், சன்மார்க்கர்களால் பூஜிதை, பெண்குழந்தை அதிகம், ஆண்குழந்தை கொஞ்சம் உண்டாம் எ-று.

### துலாத்தினின்றபலன்.

காலேகோலிடத்தினிற்சந்திரனிருக்கும்பலன்கள்
கன்னியரைச்சயித்திடுவன்கல்வியிற்பண்டிதனும்
மேலேகிஞ்சிதரோகிசுகனிதியமுடையோன்
விப்பிரர்தேவர்களிடத்திற்பிரியன்வெகுசாந்தன்
கோலேபோலிளைத்தசையாப்பிரகிருதியிலையான்
கொள்ளவும்விற்கவும்வல்லன்குலமாதருடையன்
மாலேகேடமர்பகைவனுமங்கவீனன்
மனதிற்சந்தோஷமிலான்வன்மனுங்கண்டீர்.

(இ-ள்.) துலாவிராசியின் பலனாவது—ஸ்திரீகளைச் செயித்தல், கல்வியில் பாண்டித்தியம், கிஞ்சத் வியாதி, சுகம், திரவியம், பிராமண விசுவாசம், தெய்வபத்தி, சாத்விகம், கோல்போல் வளர்ந்திருத்தல், மெலிவு, திரபுத்தியில்லாமை, கொள்ள-விற்க-வல்லமை, நல்ல குடியில் பிறந்த பெண்களை யடைதல், இனசத்துரு, உறுப்புகுறைவு, மனசில் துக்கமுடைமை, பகை உண்டாம் எ-று.

### விரிச்சிகத்தினின்றபலன்.

கண்டீர்சந்திரபகவான்விரிச்சிகத்தின்பலன்கள்
கருதுங்காற்றிரண்டமுழங்காலுடையனவன்
கொண்டாடும்வாலிபத்தில்தாதையிழந்திடுவன்
கொடியசேஷ்டையன்னனச்சங்கொள்வானேயாளன்
செண்டாடுஞ்செங்கைமன்னர்பூசிதனாயிடுவன்
செனங்களறியாதொளித்துச்செய்குவன்பாவத்தை
மிண்டாரும்பக்ஷிமிருகம்பிடிக்குங்கையன்
விழிமார்பும்பருத்திருக்குமெனப்பலன்கள்கூறே.

(இ-ள்.) விருச்சிகவிராசியின் பலனாவது—திரட்சியானமுழந்தாள், தன்னைக்கொண்டாடல், பாவியதிசையில் பிதாவிழப்பு, மிகுந்தகுறும்பு, பயப்படல், பிணி, ராஜபிரிதி, பிறரறியாமல் பாவத்தைச்செய்தல், மிருகங்களையும் பக்ஷிகளையும் பிடிப்பதில் கைதேர்ந்தவன், கண்-மார்பு-விசாலம் உண்டாம் எ-று.

**தனுசினின்றபலன்.**

கூறுதனுராசியிற்சந்திரனின்றபலன்கள்
  கூன்முதுகுள்ளவன்பலவான்குலவியகம்பீரன்
வீறுநிதிக்கினியனுற்சாகிசிற்பமறிவன்
  மிகுவாசையுளன்வெல்லுஞ்சொல்லன்வீரியவான்
தேறுபிதாநிதியதனைச்செலவுசெய்யுந்தியாகி
  செறியும்புயந்திரண்டிருக்குந்திண்கவிதையறிவான்
மாறுசெய்தேதன்றமரைத்தூஷிப்பன்வசியன்
  மணிகளணிந்திடுகழுத்தும்வதனமுநீண்டிருப்பன்.

(இ-ள்.) தனுசுவிராசிப்பலனாவது—முதுகு கூன், பெலம், காம்பீரம், பொருளாசை, சந்தோஷம், சிற்பசாஸ்திரம், பேராசை, வெல்லுஞ்சொல், பராக்கிரமம், தகப்பன் தேடிவைத்த திரவியச்செலவு தாராளம், திரண்ட உருண்டதோள், நன்றாய் கவிலக்ஷணந்தெரிதல், செலவுசெய்தல், மோசமாகச்சுற்றத்தை இகழ்தல், வசீகரம், இரத்தினாபரணம் பூண்டிருக்குங் கழுத்து, நீண்டமுகம் உண்டாம் எ-று.

**மகரத்தினின்றபலன்.**

நீண்டமகரச்சசிக்குப்பலன்றனமுமில்லான்
  நிறைந்தகாவியந்தெளிவானிதியுதவாலுத்தன்
பூண்டசவுபாக்கியவான்கேடானசொல்லே
  புகலுங்காமியகமனன்புயபலவானவன்
வேண்டியவிச்சைகளுடையன்சோம்பனிங்கிதனும்
  மின்னனையார்புகழழகன்மெய்க்கிருபையில்லான்
ஆண்டகையன்மனைவியைத்தன்மைந்தரைக்கொண்டாடி
  அவனிமிசையிருப்பனெனவறிந்துரைகள்செய்வாய்.

(இ-ள்.) மகரவிராசிப் பலனாவது—திரவியம், இல்லாமை, பூரணமாகக் காவியாலங்காரந்தெரிதல், பொருளுதவி செய்யாதலோபி சம்பத்து, கெட்டவார்த்தை பேசல், காமவிகாரம், புஜபலம், மிகவும் இச்சைகொள்ளல், சோம்பல், இனிமை, ஸ்திரீகள் மோகிக்கத்தக்க வடிவம், உள்ளன்பில்லாமை, புருஷரைவெல்லல், பெண்டு பிள்ளைகளை மெச்சுதல் உண்டாம் எ-று.

## கும்பத்தினின்றபலன்.

செய்யகும்பச்சசிபலன்களிடுப்பின்மறுவுளனும்
சிலகருமமழிக்கவுமாக்கவும்வலியன்சில்லோர்
தையலுக்குமகட்குமிச்சையுறும்பாவிகொடியன்
சரீரமதுநீண்டிருப்பன்காறுடையும்பெரியன்
துப்பகழுத்தும்நெடியன்பெருமுதுகன்வழிகள்
துலைவாகநடக்கவலன்கந்தமலர்ப்பிரியன்
மெய்யினரம்புயர்ந்துதலைசிக்குமயிருள்ளான்
விரவுபெருங்குறியனெனவேவிளம்பவேண்டும்.

(இ-ள்.) கும்பவிராசியின்பலனாவது—இடையில் மறு, சிலகாரியங்களை அழித்தலில் ஆக்கலில் வல்லமை, சில சிறுபெண்களிடத்திலும் குமாரியிடத்திலும் புணர்ச்சிப்பாபமும், கொடுமையும், நெட்டைத்தேகம், பெருத்தமுதுவு, நெடுந்தூரநடை வல்லமை, வாசனை, புஷ்பத்தினிடம் பிரியம், சரீரத்தில் நரம்புகள் எழும்பியிருத்தல், சிக்குள்ள சிகை, ஆண்குறி நீட்சியும் உண்டாம் எ-று.

## மீனத்தினின்றபலன்.

விளம்பியமீனச்சசிக்குப்பலனீரிற்பிறக்கும்
மீன்முதற்செந்துக்களின்மேன்மிகப்பிரியனவன்
வளம்பெரியபோகபோக்கியவஸ்துக்களினும்
மருவுகிரகங்களினுமனமுடையனவன்
னுளமதனிற்பரதாரவிருப்புடையனழகன்
உற்றகுலமகளிடத்துமுறவுடையன்சமவான்
இளம்பிறைநேர்நுதலதனிற்சிந்தூரதிலதம்
எழுதியிளையோர்மனதையிழுக்குமடமானே.

(இ-ள்.) மீனவிராசிப் பலனாவது—ஜலத்தினிடத்திலுண்டாகிய ஜீவசெந்துக்களை மிகத்தின்னல், வளப்பம்பொருந்திய போகபாக்கியமான பொருளிடத்தும், வீடு வாசல்களிடத்தும் பிரியம், பரதாரகமனம், அழகு, நல்லபெண்சாதியிடத்தில் நேசமும், சமத்வம் நெற்றியில் சிந்தூரப்பொட்டிட்டுக்கொண்டு வாலிபர்மனதை வலிக்கும்படியான அழகுள்ள பெண்ணே எ-று.

---

## சந்திரனைக் கிரகங்கள் பார்த்தபலன்.

வேறு.

### மேடம்.

ஆட்டில்வேள்குடையைப்புந்தியார்காணிலதிகவித்தை
பூட்டியபொன்சேய்காணிற்புரவலனாகிவாழ்வன்
கூட்டியபிருகுகாணிற்குணவானுங்காரிகள்ளன்
நீட்டியபதங்கன்காணிலிரணியமில்லையென்னே.

(இ-ள்.) மேஷத்தி லிருக்கின்ற மன்மதனுடைய குடையாகிய சந்திரனை புதன்பார்க்கில் கல்வி, குருவுங் குஜனும்பார்க்கில் இராஜனாக வாழ்வன், சுக்கிரன்பார்க்கில் குணசாலி, சனிபார்க்கில் திருடன், சூரியன்பார்க்கில் திரவியமில்லாமை, (இராகு கேது பார்க்கில் மிருக பயம், நிலவழக்கு) எ-று.

### இடபம்.

என்னரன்விடையிலேறுமிராமனைச்செவ்வாய்காணில்
பொன்னிலான்புந்திகள்ளன்பொன்காணிற்புகழுளோனும்
பன்னியபளிங்குவேந்தன்பங்குபாதன்பொன்னுள்ளான்
துன்னியகதிரோன்காணிலேவியதொழில்செய்வானும்.

(இ-ள்.) ஈஸ்வரனுடைய வாகனமாகிய ரிஷபத்திலிருக்கின்ற இரவிற்கதிகாரியாகிய சந்திரனை குஜன்காணில் இல்லாமை, புதன்காணில் திருட்டு, குருகாணில் கீர்த்தி, சுக்கிரன்காணில் அரசு, சனிகாணில் திரவியம், சூரியன்காணில் இட்டவேலை செய்தல், (இராகு கேது காணில் வாகனம், பொருள்) எ-று.

### மிதுனம்.

வான்றண்டல்லோனையாரல்காணவல்லிரும்புவிற்பன்
கான்முடம்புந்திகாணின்மன்னனுங்கனகன்காணின்
மேன்மைபண்டிதனுஞ்சுங்கன்காணினல்லச்சமில்லான்
மான்சனிதனினால்விற்பன்மார்த்தாண்டன்மிடியேதங்கும்.

(இ-ள்.) மிதுனத்தில் இரவிற்கதிபனாகிய சந்திரனை சேய்காணில் இரும்பு வியாபாரம், மொண்டிக்கால், புதன்காணில் இராஜத்வம், குருகாணில் மேம்பாடு பாண்டித்தியம், சுக்கிரன் காணில் தைரியம், மகராதிபனாகிய சனிகாணில் பஞ்சுவிற்பன், சூரியன்காணில் தரித்திரம், (இராகு காணில் பெருமை, கேதுகாணில் ஞானம்) எ-று.

### கடகம்.

தங்கியநண்டிலிந்துதன்னைவக்கிரன்முன்காணில்
பொங்கியகுசலைசெய்துபொருளடைபுதனில்வித்தை

துங்கமன்பார்க்கில்ஞானிசுங்கன்பார்வைக்குமன்னன்
செங்கதிர்நோக்கக்கண்ணோய்திறல்சனியிருமலெய்ப்பான்.

(இ-ள்.) கடகத்தி லிருக்கின்ற சந்திரனை செவ்வாய் காணில் வாய்விற்று ஜீவனம், புதன்காணில் கல்வி, குருகாணில் ஞானம், சுக்கிரன்காணில் அரசு, சூரியன்காணில் கண்ணோய், சனி காணில் இருமல், இளைப்பு, (இராகுகாணில் வியாதி, கேதுகாணில் வாதம்) எ-று.

## சிங்கம்.

உய்யரியிந்தைப்புந்திபார்க்கச்சோதிட நூலோதும்
செய்யபொன்றனவான்வெள்ளிதிருஷ்டிமன்னவனுங்காரி
மெய்யுறநோக்கினாவிதத்தொழில்விளைப்பன்வெய்யோன்
பையவேகாணின்மன்னும்பயில்குசன்பாராள்விப்பன்.

(இ-ள்.) சிங்கத்தி லிருக்கின்ற சந்திரனை புதன்காணில் கணிதசாஸ்திரம், குருகாணில் தனம், சுக்கிரன்காணில் அரசு, சனிகாணில் நாவிதத்தொழில், சூரியன்கானில் இராஜத்வம், செவ்வாய் காணில் உலகாளும், (இராகுகாணில் விரோதம், கேதுகாணில் கலகம்.

## கன்னி.

விற்பனமடந்தையிந்தைவேண்டியேகணக்கன்காணின்
நற்புவிபுரப்பன்பொன்னேக்கத்திற்சேனுபதியாம்
முற்பகர்சுங்கன்சாலநிபுணன்சேய்முடவன்வெய்யோன்
பொற்புறக்காணிற்கன்னியாற்பிழைப்புண்டாவானே.

• (இ-ள்.) கன்னியி லிருக்கின்ற சந்திரனை புதன்காணில் லோகசம்ரக்ஷகம், குருகாணில் சேனுதிபத்தியம், சுக்கிரன் காணில் மிகுந்த வித்துவத்தனம், செவ்வாய் சனி சூரியன் காணில் ஸ்திரீமூலத்தில் ஜீவனம், (இராகுகாணில் இடம், கேதுகாணில் பொருள்) எ-று.

## துலாம்.

ஆவன்கோலிடத்தல்லோனைமால்காணினரசனுவன்
மேவியபொன்னின்பார்வைமிகுசொர்னவேலைசெய்வன்
தாவியபிருகுகாணில்யாபாரிசனிசேய்வெய்யோன்
மூவர்கண்டிடில்வஞ்சிப்பன்பலரையும்முறைமைபோல.

(இ-ள்.) துலாத்திலிருக்கின்ற சந்திரனை புதன்காணில் பிரபுத்வம், குருகாணில் பொன்னுலாகுந்தொழில், சுக்கிரன் காணில் வியாபாரம், சனி செவ்வாய் சூரியன்காணில் வஞ்சனை, (இராகு காணில் பிரீதி, கேதுகாணில் மேன்மை எ-று.

## விருச்சிகம்.

போலுந்தேளிந்தைக்கண்டபுதனுக்குத்தாதைரெண்டாம்
மேலுமேகுருதிர்ஷ்டிக்குப்பிராமணசிலன்வெள்ளி
சாலவேகாணவண்ணார்பணிசனிவெய்யோன்செவ்வாய்
கோலமாமங்கவீனன்றரித்திரன்குணம்வேறுமே.

(இ-ள்.) விருச்சிகத்தி லிருக்கின்ற சந்திரனை புதன் காணில் தந்தையிருவர், குருகாணில் பரிசுத்தம், சுக்கிரன்காணில் வண்ணான் தொழில், சனி செவ்வாய் சூரியன் காணில் அங்கவீனம், தரித்திரம், குணமாறல் (இராகுகாணில் விக்ஷப்ரிக்ஷை, கேதுகாணில் மயக்கம்.)

## த னு சு.

ஆந்தனுவிராமன்றன்னைப்புதன்காணவறிஞன்ஞானி
போந்தபொன்காணமன்னும்பொருந்துசுக்கிரன்றிர்ஷ்டிக்குச்
சேர்ந்துநின்றுசரிப்பர்பலர்கூடிச்செவ்வாய்வெய்யோன
ஏந்தியசனியுங்காணவிருமலாயிருப்பன்கண்டீர்.

(இ-ள்.) தனுசி லிருக்கின்ற சந்திரனை புதன் காணில் அறிவு, குணம், குருகாணில் அரசு, சுக்கிரன்காணில் பலபேர்கள் யனுசரித்தல், செவ்வாய் சூரியன் சனிகாணில் தேகக்ஷீணம், (இராகுகாணில் அரசு, கேதுகாணில் வித்வத்தன்மை) எ-று.

## ம க ர ம்.

கண்டிடுமகரத்திந்தைக்கணக்கனுமரசன்காணப்
பண்டிதன்சுக்கிரற்குப்பயில்குருநரேந்த்ரனுவான்
மொண்டிக்குத்தனவானுவன்முனிரவிதரித்திரந்தான்
மண்டியகுசனும்பார்க்கிற்பூபதியாகிவாழ்வான்.

(இ-ள்.) மகரத்தி லிருக்கின்ற சந்திரனை புதன் குரு காணில் வித்தியாவிலாசம், சுக்கிரன்காணில் குருபீடம், பிரபுத்வம், சனிகாணில் திரவியம், சூரியன்காணில் தாரித்திரம், செவ்வாய் காணில் லோகாராட்டியம், (இராகு காணில் மேம்பாடு, கேதுகாணில் யாத்திரை.)

## கு ம் ப ம்.

வாழ்கும்பச்சசியைப்புந்திகாணப்பூபதியுமாவன்
நீள்குருநோக்கிற்பூமிநிருபர்போனீளவாழ்வன்
சூழ்குசனிரவிகாரிசுக்கிரனுல்வர்காணில்
தாழ்விலாப்பரதாரத்திற்றுற்பரியங்களுள்ளான்.

(இ-ள்.) கும்பத்திலிருக்கின்ற சந்திரனை புதன்காணில் இராஜ்ஜியாதிபதித்துவம், குருகாணில் ராஜ்ஜியாதிகாரம், செவ்வாய் சூரி

யன் சனி சுக்கிரன் காணில் பரஸ்திரீ கமனம், (இராகு காணில் தீயா ந்திரம், கேதுகாணில் ஜலபதார்த்தம்) எ-று.

### மீ ன ம்.

உள்ளமீனத்திலிந்தையுறும்புந்திகண்டகாலை
மெள்ளவேபிரியவாக்கிவேந்தற்குவேந்தேயாகும்
தெள்ளியவெள்ளிகாணப்பண்டிதன்செவ்வாய்வெய்யோன்
கள்ளமாங்காரிமூவர்காணவேபாவியாவன்.

(இ-ள்.) மீனத்தி லிருக்கின்ற சந்திரனை புதன்காணில் பிரியவசனம், குருகாணில் இராஜாதித்வம், சுக்கிரன்காணில் சகலகலைவல்லபம், செவ்வாய் சூரியன் சனிகாணில் பாபத்வம், (இராகுகாணில் விரோதம், கேதுகாணில் கோபம்) எ-று.

---

## இராசிகளிற் சனி நின்றபலன்.

### மேட-விரிச்சிகத்தினின்றபலன்.

வே று.

மேடத்திற்காரிநிற்கின்மிகுமாயரூபிமூர்க்கன்
தேடிடானுறவுசற்றும்பிர்மிக்கச்சிறிதுசொல்வன்
ஓடுதேள்காரிக்கேகட்டுண்டுமெய்க்கீறதாவன்
நீடிய்தனமுமில்லான்கொலைசெய்தேநிற்பன்றானே.

(இ-ள்.) மேடத்தில்சனியிருக்கப்பிறந்த ஜாதகன்—மாயாவாதி, மூர்க்கன், பந்துக்களை விரும்பாதவன், பிர்மிக்கும்படியானவார்த்தை சொல்பவனும். விருச்சிகத்தில் சனியிருக்க—ஒருவருக்கு கட்டுபடல், உடலம் வருத்தப்படல், துட்டில்லாமை, கொலைசெய்தலாம் எ-று.

### இடப-துலாத்தினின்றபலன்.

நிற்குமோரிடபந்தன்னினிற்கிற்பெண்கட்குலோலன்
நற்குணன்மறதியில்லானரியர்பலரைச்சேர்வன்
முற்கோலிற்சவுரிநிற்கின்முற்றியதனவானுவன்
சற்குணன்கியாதியுள்ளான்றகுவனூர்மணியமாவன்.

(இ-ள்.) இடபபலன்—ஸ்திரீகளுக்கு வுல்லாசன், நல்ல குணக்கியன், மறதியில்லாதவன், அனேகமாய் ஸ்திரீகளைப் புணர்வனும். துலாப்பலன்—முழுதிலுந்தனவான், சற்குணன், கீர்த்திபரன், கிராமாதிகாரனும் எ-று.

### மிதுன-கடக கன்னியினின்றபலன்.

ஆனதோர்மிதுனங்கன்னிதனிற்சனியமர்ந்தகாலை
தானமாம்புதல்வரற்பந்தகைமையில்லார்க்குமாண்பன்

வானுறுநண்டிற்காரிமருவிற்றூய்மகன்பொன்னில்லான்
ஈனவான்ஞானவீனன்மங்கினபல்லன்மூர்க்கன்.

(இ-ள்.) மிதுனங் கன்னியின் பலன்—தவப்பேறுகிய புத்திரர்கள் குறைவு, யாவரிடத்திலும் கணிசமாம். கடகபலன்—புத்திரன், பொருளில்லாமை, பாபச்செய்கை, அறிவில்லாமை, ஊற்றைப்பற்கள், மூர்க்கம் உண்டாம் எ-று.

**சிங்கத்தினின்றபலன்.**

மூலமாஞ்சிங்கவீட்டின்முனிவுறுஞ்சனிதானிற்கில்
சாலவாசாரமில்லான்சுகமிலான்றூட்சியுள்ளான்
சீலமாங்குலம்விளங்கப்பெற்றிடுஞ்சேயுமில்லான்
வேலைவாரிதியைவண்டைமுனிந்திடும்விழியினுளே.

(இ-ள்.) மூலாதாரமாகிய சிங்கத்தின்பலன்—சாந்தமற்ற சனிநிற்கில், அனுசாரன், பீடையன், தாட்சியானவன், தன்குலம்விளங்கும் பேர்சொல்லப் பிள்ளையற்றவனும். வேலாயுதத்தை-சமுத்திரத்தை-வண்டை திரஸ்கரித்த கண்ணினையுடைய பெண்ணே எ-று.

**தனுசு-மீனத்தினின்றபலன்.**

விழிமீனந்தனுவிற்காரிமேவின்மன்னவருக்கன்பன்
மொழிசுகமுடையன்மைந்தர்திரவியமுள்ளனுவன்
வழிவசமானபெண்டீருள்ளவன்மலர்க்கண்ணேயன்
செழியபெண்டீர்மேற்பக்ஷங்காட்டிடுஞ்சிந்தையானே.

(இ-ள்.) கண்ணிற் கினமாகிய மீனம், தனுசு, சனி நிற்கில் அரசர்களுக்கு அன்பான இனியவார்த்தையன், புத்திரபாக்கிய முள்ளவன், நல்லவழியில் பெண்டுடையவன், கண்ணேயன், பெண்சாதியினிடத்தில் பிரியமுள்ளவனும் எ-று.

**மகர-கும்பத்தினின்றபலன்.**

சிந்துவாழ்மகரகும்பஞ்செறிந்துவன்காரிநிற்கில்
உந்தியநகரம்பட்டணமுடையவனுறுகண்ணேயன்
சந்ததந்தனங்கள்சேர்ப்பன்செலவுளன்சரீரசுட்கன்
சுந்தரப்பரத்தைநண்பன்பலனுளன்சோரனுவான்.

(இ-ள்.) மகரகும்பத்தில் சனிநிற்கில், நாடு, நகரம், கண்ணேய், சார்வதாய் திரவியஞ்சேர்தல், செலவழிப்பு, இளைத்ததேகம், தாசிகாந்தம், பிரயோசனமுடைமை, திருட்டுத்தன்மையாம் எ-று.

# கோட்சாரபலன்.

## சூரியன்.

சூரியன்ஜென்மம்ரெண்டில்துலங்கியநாலேந்தெழில்
பாரியவெட்டோடொன்பான்பகர்ந்தபன்னிரண்டினின்றால்
காரியக்கேடலேச்சல்கண்வலிதலேநோய்வீணாய்
வீரியச்சண்டைவெட்டைவிடுவிட்டோட்டுந்தானே.

(இ-ள்) சூரியன் க-ல், உ-ல், ச-ல், ரு-ல், எ-ல், அ-ல், கூ-ல், கஉ-ல், வந்தால் நினைத்தகாரியமுடியாது. திரிச்சல், நேத்திரவியாதி, சிரநோக்காடு வீண்சம்பம், சச்சுறவு, சூடு, இடம்விட்டுப்பேர்தலாம் ஆகையால், இதுமுதலான பலனைநிரனிறையாகக் கொள்கவும் எ-று.

## சந்திரன்.

பனிமதிரெண்டிஞலில்பரிவிலாவாறிலெட்டில்
கனிவிலாபன்னிரண்டில்கதிக்கவேவீற்றிருந்தால்
இனியநற்பொருளுமாடையீனமாங்கேடுதுன்பம்
தனிமையிற்செலவுதுக்கந்தான்கொடுத்திடுமென்றெண்ணே.

(இ-ள்.) சந்திரன் உ-ல், ச-ல், சு-ல், அ-ல், கஉ-ல், வந்தால் துட்டு - துணி-குறைவு, கெடுதி, பொல்லாப்பு, விரயம், துயரமாம் எ-று.

## செவ்வாய்.

நிலமகன்சென்மந்தன்னினிறுவியரெண்டிஞலில்
சிலுகுவாறெட்டிற்பத்தில்செறிந்தபன்னிரண்டினின்றால்
புலவிதக்கேடுபெண்டீர்பாழ்பொருணசம்வெட்டை
சொலுவாயுதத்தால்பீடைதுக்கநீர்ப்பெருக்குண்டாமே.

(இ-ள்.) குஜன் க-ல், உ-ல், ச-ல், சு-ல், அ-ல், க0-ல், கஉ-ல், வந்தால் நாலாவிதத்திலும் கெடுதி, மனைவி நாசம், பொருள் விரயம், உஷ்ணம், ஆயுதபீடை, துயரம், பிரமியம் ஆம் எ-று.

## புதன்.

புந்திகோள்ஜென்மந்தன்னில்பொருந்திடாமூன்றிஞலில்
விந்தையாறெட்டிலாறில்விளங்குபன்னிரண்டினின்றால்
சிந்தைபேதகமாம்வெட்டைதிரவியக்களவுபீடை
கொந்தலர்குழலாய்தோழன்கோவினுல்குற்றமாமே.

(இ-ள்.) புதன் க-ல், ங-ல், ச-ல், சு-ல், அ-ல், க0-ல், கஉ-ல், வந்தால் சிந்தை வேற்றுமை, சூடு, பொருணசம், வியாதி, சிநேகிதனுலும், இராஜாவினுலும், தீமையாம் எ-று.

குரு.

பொன்னவன்சென்மந்தன்னில்பொதுமையாமூன்றிளுவில்
மின்னுமாறெட்டிற்பத்தில்விரயம்பன்னிரண்டினின்ருல்
தன்னுடன்பிறந்தார்சேதந்தானியமாடுமக்கள்
பின்னமாம்பதியிழந்தேபிழைப்பற்றுத்திரிவர்தாமே.

(இ-ள்.) வியாழன் ௧-ல், ௩-ல், ௬-ல், ௮-ல், ௯-ல், ௧0-ல், ௧௨-ல், வந்தால் சகோதர பீடை, தானியமும் மாடும் மக்களும், நாசம், ஸ்தானபிரஷ்டம், ஜீவனமில்லாமை திரிச்சலாம் எ-று.

சுக்கிரன்.

சுக்கிரன்மூன்றிலாறில்துலங்குமேழோன்பான்றன்னில்
உக்கிரமாகுமென்றேயுரைப்பர்கள்பலனேவென்ருல்
நிக்கிரகமாகுமக்கணிலையினின்மாடுசாகும்
வக்கிரமாவார்பந்துவாய்ந்தபொன்னுசமாமே.

(இ-ள்.) சுக்கிரன் ௩-ல், ௬-ல், ௭-ல், ௯-ல், வந்தால் புத்திரர்விட்டுப் பிரிவார்கள், இருந்த இருப்பில் காலிமாடு சாகும், பந்துக்கள்பகையாவார்கள், கையிலிருந்த பொருளும் போகுமாம் எ-று.

சனி.

முடவன்ருன்சென்மந்தன்னின்முன்னுளவிரண்டினுவில்
திடமுடனெட்டிற்பத்திற்செறிந்தபன்னிரண்டினின்ருல்
உடமையும்பொருளுமாடுமொண்டொடியாளுங்கூட
அடிமையும்பதியுநாசமாதலுமானக்கேடே.

(இ-ள்.) சனியன் ௧-ல், ௨-ல், ௩-ல், ௮-ல், ௧0-ல், ௧௨-ல் வந்தால் உடைமைபோம், பொருள் நஷ்டி, நாற்கால்ஜீவன் ஆனி, மனைவி மோசம், அடிமை இல்லாமை, இடம்விட்டுப் பேர்தலான மானக்கேடாம் எ-று.

இராகு-கேது.

ராகுவுங்கேதுவுந்தான்ரம்யமில்ஜென்மமெட்டில்
வேகமொன்பானீராரும்வீட்டினில்வந்திருந்தால்
பாகுசேர்மொழியாள்கேளுபதிவிட்டுபேருங்கெட்டு
சகத்திலழகுமாறிதிடமற்றுப்போகுந்தானே.

(இ-ள்.) இராகு அல்லது கேது ௧-ல், ௮-ல், ௯-ல், ௧௨-ல், வந்தால் கருப்பஞ்சாற்றின் சுவைபோன்ற சொல்லினை யுடையவளே கேள். இருப்பிடம் பேர்தலும், பேரழிவும், நாசமும், உருமாறிய பெலவீனமுமாம் எ-று.

## விபரீத கோட்சார பலன்.

வேறு-புதுமொழி.

இரவியைந்தாமிடந்தனிலேதிங்களெட்டில்
ஏழதனிற்செவ்வாயுமிரண்டிற்புந்தி
விரவுகுருமூன்றிடத்திற்சுங்கனுறில்
மிக்கசனிசென்மத்திலிருபாம்பொன்பான்
திரமுடனேயித்தலங்கள்சேருமாகில்
சிறைகாவல்வெகுநோயுஞ்சிலுகுசண்டை
உரைதடுமாற்றமுங்கேடுமரணசேதம்
உண்டுபலன்பொல்லாதென்றுரைக்கலாமே.

(இ-ள்.) சென்மராசிக்கு ரு-ல் சூரியன், அ-ல் சந்திரன், எ-ல் செவ்வாய், உ-ல் புதன், ங-ல் குரு, சூ-ல் சுக்கிரன், க-ல் சனி, கூ-ல் ராகு-கேது வருங்காலம், காராகிரகம், காவல், வியாதி, வில்லங்கம், வியாச்சியம், வாய்குளர்தல், சாவு-நஷ்டம், ஆகிய தீயபலனு மென்ப தாம் எ-று.

வே று.

### அங்கச்சூரியன்.

காரார்குழலாய்தலைமூன்றுமரசாங்கல்வியாய்மூன்றுஞ்
சீரார்வயிறைந்திடமுண்ணுஞ்செம்பொன்றேடுங்கையெட்டும்
பாரேநீநடத்துங்காலெட்டும்பகலோனுண்முன்பிறந்திடுநாள்
நேரேதொட்டுக்கோணின்றதினமீதெண்ணிநிகழ்த்திடே.

(இ-ள்.) நக்ஷத்திரம் உஎ-ல், தலையில்நிற்கும் ங-ம், இராச்சியம் வாயில்நிற்கும் ங-ம், வித்தை; வயிற்றில்நிற்கும் ரு-ம், விருந்துவலக் கை நிற்கும் அ-ம், தனம்; காலில்நிற்கும் அ-ம், வழிநடை; இரவியிரு ந்தநக்ஷத்திர முதல் ஜாதகன்பிறந்தநாளளவு மெண்ணிப் பலன்சொ ல்லுக (இவ்வடைவேபார்த்துப்பலன்சொல்லவும்) எ-று.

வே று.

### அங்கச்சந்திரன்.

ஆரன்முன்னேமூநாளுஞ்சிரசிலே-யமருமுன்மாசிமுன்னே ழ்முதுகிலே, பாரமேபனைமுன்னேழ்வயிற்றிலே-பாவைமுன் னேமூநாளிருகாலிலே; தீரசென்னிவயிற்றிருநாணலங்-தீயதா ங்கான்முதுகுறுகால்களே; சாரவெங்களவிமீசுரர்தாணினை-த க்கநன்மையுந்தீமையுஞ்சாற்றுமே.

(இ-ள்.) அங்கச்சந்திரன் கிருத்திகைமுதல்-எ, தலையில்; மகமு தல்-எ, முதுவில்; அனுஷமுதல்-எ, வயிற்றில்; சதயமுதல்-எ, பாதத்

தில் அமைத்து முன்சொன்ன சிரசிலும் வயிற்றிலும் உள்ளநாள். கச-நன்மை, காலிலும் முதுகிலும் உள்ளநாள் கசு, தீமை அபிசித்தைக் கூட்டிப்பார்க்கவும் எ-று.

வே று.

அங்கச்செவ்வாய்.

இடர்வாய்மூன்றும்வலக்கணிரடின்பமிடக்கணிரண்டழிவா
மிடரோர்மூன்றுங்கைமூன்றுமேம்பாடிடக்கைமூன்றுதுயர்
மடவாய்வலப்பாலொன்றுநலமிடமொன்றழிவுவயிறைந்தூண்
இடையார்வலக்காலிரண்டுநலமிடக்காலிரண்டுமியாத்திரையே.

(இ-ள்.) வாயில் மூன்றுந் துக்கம், வலக்கணிரண்டு மின்பம், இடக்கணிரண்டும் அழிவாம், கழுத்திலுங் கையிலு மூன்றும் மேம்பாடு, இடக்கையில் மூன்றுந் துக்கம், வலப்பாலொன்றும் நன்மை, இடப்பாலொன்றும் நாசம், வயிற்றில் ஐந்தும் உணவு, வலக்காலிரண்டும் நலம், இடக்காலிரண்டும் யாத்திரையுண்டாம் எ-று.

அங்கப்புதன் குரு-சுக்கிரன்.

சேதமாக்குந்தலைமூன்றுஞ்செல்வமாக்குங்கழுத்துமூன்
றேதினன்றுவலக்கைமூன்றுள்ளத்திடராமிடக்கைமூன்
றேதிவயிற்றிலேந்தாக்கமரையிலிரண்டுமழிவுண்டாம்
பாதமெட்டுநடையுண்டாம்பச்சைமால்பொன்புகரொன்றே.

(இ-ள்.) தலையில் நிற்கும் ௩-ம் அர்த்தநாசம், கழுத்தில் நிற்கும் ௩-ம் ஸ்ரீயுண்டாம், வலக்கையில் நிற்கும் ௩-ம் நன்மை யுண்டாம், இடக்கையில் நிற்கும் ௨-ம் துக்கமுண்டாம், வயிற்றில் நிற்கும் ௫-ம் ஆக்கமுண்டாம், அரையில் நிற்கும் ௩-ம் அழிவுண்டாம், காலில் நிற்கும் அ-ம் நடையுண்டாம், இப்படி புதன் வியாழன் வெள்ளி இம்மூவர்க்குள்ள பலனென்றறிவதாம் எ-று.

அங்கச்சனி.

என்றுந்தீதுவாயோர்நாளினிமைவலக்கைநாலாகும்
சென்றுநடத்துங்காலாறுந்தீமையிடக்கைநாலாகும்
நன்றியூணும்வயிறைந்தும்நயனமிரண்டுந்தனமுண்டாங்
கன்றும்புயங்களிரண்டுமுடிகவிழ்க்குந்தலைமூன்றுடன்காரி.

(இ-ள்.) வாயில் க-ம் கெடுதி, வலக்கையில், ச-ம் நன்மை, காலில் சு-ம் திரிச்சல், இடக்கையில் ச-ம் தீமை, வயிற்றில் ரு-ம் போஜனம், கண்ணில் உ-ம் திரவியம், புஜத்தில் உ-ம் காலிமாடு, தலையில் ௩-ம் கிரீடந்தடுத்தலாம் எ-று.

### இராகு, கேது.

வேறு.

மாதுகேண்மேடமுதற்கருநாகம்வாழ்மனையளவுமட்டெண்ணி, மீதிமீன்மட்டும்முறுதொகைதன்னில்விளங்கவேபெருக்கிமுந்நான்கில், போதவேகழித்துமீந்தலக்கினத்திற்புணர்திரிகோணராசியினில், ஏதமாங்காரிமருவுநாட்கண்டமெனவறிகோட்சரந்தனக்கே.

(இ-ள்.) பெண்ணேகேள், மேஷராசிமுதல் இராகு சஞ்சரிக்கின்ற இராசிவரையி லெண்ணிய தொகையை, இராகுநின்ற இராசிமுதல் மீனம்வரையி லெண்ணிய தொகையால் பெருக்கி, ௧௨-ல் கழித்து நின்றசேடத்தொகைக்கு எந்த இராசியாகின்றதோ அதில், அல்லது, அதற்குதிரிகோண இராசியில், சனிவருங்காலம் கெண்டமாம்.

---

## காலசக்கிரம்.

### வலவோட்டு நக்ஷத்திரம்.

முதுமொழி-விருத்தம்.

பரிபுணர்பூசமத்தம் பைமூலம்பூரட்டாதி
எரிபணிமரக்கலாடி யீறுநாள்பத்துமொன்றும்
தெரிவையேபரணிபூசஞ் சித்திரைபொய்கைகூட
வரியவுத்திரட்டாதீயோடைம்மூன்றும்வலவோட்டாமே.

(இ-ள்.) அஸ்வனி, புனர்பூசம், அஸ்தம், மூலம், பூரட்டாதி, கிர்த்திகை, ஆயில்யம், சோதி, உத்திராடம், ரேவதி, ஆக ௧0-ம், ஒருதொடர். பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி, ஆக ௫-ம், ஒருதொடர். ஆகதொடர் இரண்டிற்கும் நக்ஷத்திரம் ௧௫-ம், வலவோட்டென்பதாம் எ-று.

### இடவோட்டு நக்ஷத்திரம்.

உருண்மகம் விசாகமோண மொருநான்கு மொன்றேயாகும், பருமிர்கசிரமேபூரம் பனையவிட்டம் நான்கொன்றும், அருள்செங்கை யுத்திரங்கேட் டையுஞ்செக்கு நான்குமொன்றும், சருவநாளிதுமுன்றுன்குஞ் சாற்றிடவிடவோட்டாமே.

(இ-ள்.) உரோகணி, மகம், விசாகம், திருவோணம், இந்நான்கும் ஒருதொடர். மிருகசீரிஷம், பூரம், அனுஷம், அவிட்டம், இந்நான்கும் ஒருதொடர். திருவாதிரை, உத்திரம், கேட்டை, சதயம், இந்நான்கும் ஒருதொடர். ஆக தொடர் ௩-க்கும், மொத்தநக்ஷத்திரம் ௧௨-ம், இடவோட்டாம் எ-று.

## வலவோட்டுநக்ஷத்திரபாத சக்கிரகிரகவருஷம்.

### வேறு.

காலச்சக்ரந்தகர்சேயேழ்காளைக்கவிபதினாருண்டு
மேலைத்தண்டுபுதனென்பான்மீனளிசசிமூவேழரியின்
வாலைச்சூரியனைந்தாம்வின்மன்பத்தாகுஞ்சுன்ஞன்காண்
டேலுமிதுபோன்மற்றெந்த விராசிக்கதிபன்கணக்காமே.

(இ-ள்.) காலசக்கிரவருஷம் மேஷச்செவ்வாய்க்கு-எ, ரிஷப ச்சுக்கிரனுக்கு-கசு, மிதுனப்புதனுக்கு-கூ, கடகச் சந்திரனுக்கு உக, சிங்கச்சூரியனுக்கு-ரு, தனுர்க்குருவுக்கு-க0, மகரச்சனிக்கு-ச, இவ் வடைவே மற்றையராசிக் கிரக வருஷங்களைக் கண்டுகொள்க எ-று.

கணக்குவலத்திற்காடாதி கயலீருகு மிடத்திற்கோ, பி ணக்குவிர்ச்சிக முன்பின்வில் பேசில்புத்தி வழிபிசகும், அணை க்கசகக்கிவுடுபாத மறிவாய்நாழி கோளாண்டை, பிணைத்துப் பெருக்கீந்தாண்டிருப்பு பெண்ணேசெல்லைப் பிரித்துசொலே.

(இ-ள்.) வலவோட்டு நக்ஷத்திரபாத சக்கிரக்கணக்கு மேஷாதி மீனந்தமாகவும், இடவோட்டுநக்ஷத்திரபாதச் சக்கிரக்கணக்கு விருச் சிகாதி தனுராந்தமாகவும் கொள்க. புத்திசக்கிரம் சிலது ஒழுங்கிராது. எந்தச்சக்கிரத்தின் நக்ஷத்திரபாதவாதியந்த நாழிகையில் சென்ற நாழிகை, அல்லது நின்ற நாழிகைத்தொகைக்கும், அந்தச்சக்கிர கிர கவருஷத்தொகைக்கும் மாறிக்கொடுத்து செல்லுபோக இருப்பிவ்வ ளவென்று பிரித்துச்சொல்வாய்பெண்ணே எ-று.

## வலவோட்டுநக்ஷத்திரபாத புத்திசக்கிரம்.

மறியேறியாழ்நண் டரிபெண்கோல் வளர்தேடனுமாமு தற்காலுண், டுறின்மான்கான்மீன் றேள்கோல்பெண் டேய்நண் டரியா ழிருகாலுண், குறியேறுடுமீன்சான்மான் குனிவிற் கொறியே றியாழ்முக்கால், செறிசேர்நண்டுபுலிபெண்கோ றே ள்வின்மான்சான்மீனற்கால்.

(இ-ள்.) முற்கூறிய வலவோட்டு நக்ஷத்திரம் பதினைந்தினுள் நடுநாள்தவிர ஒருதொடர் நக்ஷத்திரம் பத்தின் முதற்பாத புத்திசக்கி ரம் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசுவரையில் ஆக-கூ. இரண்டாம் பாதபுத்திசக்கிரம் மகரம், கும்பம், மீனம், விருச்சிகம், துலாம், கன்னி, கடகம், சிங்கம், மிதுனம் வரையில் ஆக-கூ. மூன்றும் பாதபுத்திசக்கிரம். ரிஷபம், மேஷம், மீனம், கும்பம், மகரம், தனுசு, மேஷம், ரிஷபம், மிதுனம்

வரையில் ஆக-கூ. நான்காம்பாதபுத்திசக்கிரம். கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் வரையில் ஆக-கூ ஆம் எ-று.

கால்தேள்கோல்பெண் குளிரரியாழ்கனவேறஜமீன் பரணிமுற்கால், சால்மான்விற்கொறி யிடபம்யாழ் தண்ணூர் நண்டரி பெண்ணிருகால், கோல்தேள்சிலைமான் குடமீன்றேள் கோல்பெண்முக்கால் குளிரரியாழ், மேல்பார்களிரரி யாழ்விடைமேல் மேஷமீன்சான் மான்வில்லே.

(இ-ள்.) மற்றொருதொடர் நக்ஷத்திரம் நடுநாள் ஐந்தின் முதற்பாத புத்திசக்கிரம் விருச்சிகம், துலாம், கன்னி, கடகம், சிங்கம், மிதுனம், ரிஷபம், மேஷம், மீனம்-கூ. இரண்டாம் பாதபுத்திசக்கிரம். கும்பம், மகரம், தனுசு, மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி-கூ. மூன்றாம் பாதபுத்திசக்கிரம். துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம், விருச்சிகம், துலாம், கன்னி-கூ. நான்காம்பாத புத்திசக்கிரம். கடகம், சிங்கம், மிதுனம், ரிஷபம், மேஷம், மீனம், கும்பம், மகரம், தனுசு ஆக-கூ எ-று.

## இடவோட்டுநக்ஷத்திரபாத புத்திசக்கிரம்.

மூவிற்சுறாசான் மீன்கொறிசே வளர்தண்டரிநண் டுருண்முதற்கால், பூவிற்பெண்கோ றேண்மீன்சால் பொருமான்விற்றே டுலையிருகால், தாவிப்பெண்ணரி நண்டியாழ்சே தகர்வின் மானுங் குடமுக்கால், காவிக்கயலா டேறியாழ்சிங் கங்குளிர் பெண்கோ றேணுற்கு.

(இ-ள்.) முற்கூறிய இடவோட்டு நக்ஷத்திரம் பனிரண்டினுள் தலைநாள் நான்கின் முதலாம்பாத புத்திசக்கிரம்—தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், சிங்கம், கடகம், ஆக-கூ. இரண்டாம் பாதபுத்திசக்கிரம். கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம், ஆக-கூ. மூன்றாம் பாதபுத்திசக்கிரம். கன்னி, சிங்கம், கடகம், மிதுனம், ரிஷபம், மேஷம். தனுசு, மகரம், கும்பம், ஆக-கூ. நான்காம்பாதபுத்தி சக்கிரம். மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், சிங்கம், கடகம், கன்னி, துலாம், விருச்சிகம், ஆக-கூ எ-று.

குளமீன்சான்மான் விற்றேள்கோல் குமரிப்புலிநளிர் சிரமுதற்கால், களிகொளியாழும் விடைமறிவில் கலைசான்மீனா டேறிருகால், துளிரார்மிதுனம் புலிகுளிர்பெண் டுலைதேண்

மீன்சால் கலைமுக்கால், கொளூவாய்சிலைதே டுலைபெணரி குளி
ர்யாழ்குண்டை மறிநாற்கால்.

(இ-ள்.) இடைநாள் நான்கின் முதற்பாத புத்திசக்கிரம் மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம், ஆக-கூ. இரண்டாம் பாதபுத்தி சக்கிரம் மிதுனம், ரிஷபம், மேஷம், தனுசு, மகரம், கும்பம் மீனம், மேஷம், ரிஷபம், ஆக-கூ. மூன்றாம் பாதபுத்தி சக்கிரம் மிதுனம், சிங்கம், கடகம், கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், ஆக-கூ. நான்காம்பாத புத்திசக்கிரம் தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம், மிதுனம், ரிஷபம், மேஷம் ஆக-கூ எ-று.

மறுண்மீன் சான்மான் விற்றேள்கோன் மாதரிகளிராதி
ரை முதற்கால், குறியாமேறு கொறிவின்மான் குடமீனேறு வி
டையிருகால், நெறியாழ்புலிகளிர் பெண்கோறே ணிண்மீன்
சான்மா னிகழ்முக்கால், கறுவிற்றேடுலை பெண்ணரிகற் கடக
ம்யாழ்விடை தகர்நாற்கால்.

(இ-ள்.) கடைநாள் நான்கின் முதற்பாத புத்திசக்கிரம் மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம், ஆக-கூ. இரண்டாம்பாத புத்திசக்கிரம் மிதுனம், ரிஷபம், மேஷம், தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், ரிஷபம், ஆக-கூ. மூன்றாம் பாதபுத்தி சக்கிரம் மிதுனம், சிங்கம், கடகம், கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், ஆக-கூ. நான்காம்பாதபுத்திசக்கிரம். தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம், மிதுனம், ரிஷபம், மேஷம், ஆக-கூ எ-று.

**கால சக்கிர புத்திசக்கிரக்கிரகம் கொடுக்கும்பலன்.**

வேறு.

குஜன்காலசக்கிரத்தில்குளிர்ச்சுரம்விரணங்கண்ணோய்
வசப்படார்வுதிரகாசந்தனச்சேதமனதிற்றுக்கம்
அசமாயுதத்தாற்பீடைதுன்பங்கள்பலவுஞ்சொல்லு
நிஜமானபூமிநாசநின்றமாதாவுக்கானி.

(இ-ள்.) செவ்வாய்பலனாவது—குளிர்ச்சுரம், விரணம், நேத்திரவியாதி இரத்தகாசம், தனநாசம், மனோதுக்கம், பூமிநாசம், மாதுர்பீடை, சண்டை, ஆயுதத்தால் காயம், இவ்விதத்துன்பங்களைக் கொடுக்கும் எ-று.

சொல்லுஞ்சுக்கிரற்குநல்ல தலம்வித்தை சுகம்பொன்னுண்டாம், நல்லபுத்திரர் பசுக்கள் பிதுர்நன்மை பூமிலாபம்,

மெல்லவே பிணிபோம்புத்தி விலாசம்விற் பிரர்மேற்பத்தி,
வல்லமை பிரியாதேவ தாபத்தி மருவுமென்றே.

(இ-ள்.) சுக்கிரன்பலனாவது—ஸ்தலதரிசனம், கல்வி, சௌக்கியம், திரவியம், சுபுத்திராள், பசுக்கள், பிதுர்சவுக்கியம், பூமிலாபம், வியாதிசாந்தம், புத்திதீக்ஷண்ணியம், விவாகம், பிராமணவிசுவாசம், வல்லமை, தேவதாபத்தியுண்டு பண்ணும் எ-று.

என்றமால்சக்கிரத்தில்வித்தைபொன்லாபமீயும்
நின்றவாகனம்விவாகம்யாபாரநிறைந்தபைங்கூழ்
வென்றிகொள்பங்குலாபமேம்பாடுதீர்த்தசேவை
ஒன்றுநல்லுறவோர்வீட்டிலுரியசம்பந்தமுண்டே.

(இ-ள்.) புதன்பலனாவது—கல்வி, தனலாபம், வாகனசித்தி, விவாகசித்தி, வியாபாரவிர்த்தி, விசேஷ வேளாண்மை, லாபமுள்ள பங்குபாகம், மேம்பாடு, நதிதரிசனம், சேர்ந்த பாத்தியத்தில் நல்லசம்பந்தம் உண்டாக்கும் எ-று.

உண்டாம்வெண்மதியின்காலசக்கிரம்வரிற்பொன்னோடு
கொண்டாடுமனதிலன்புகுணங்களுஞ்சாந்தமாகும்
விண்டாவாரோக்கியந்தான்வெகுபூமிலாபமுண்டோர்
வண்டாருங்குழலாயோமசாந்தியுமணமுமுள்ளே.

(இ-ள்) சந்திரன் பலனாவது—திரவியலாபம், மனோற்சாகம், சாந்தகுணம், சௌக்கியம், விசேஷபூமிவரத்து, ஓமசாந்தி சுபசோபனாதி நடத்தும் எ-று.

உள்ளதோரிரவிகாலச்சக்கரம்வரிற்கண்ணோயும்
தெள்ளியபிணியுங்காவல்சிறையுமாதாவுநாசம்
ஒள்ளியபிள்ளைபெண்டீர்சிநேகிதருறவுமானி
மெள்ளவேசிரரோகத்தான்மேனியுமிகவருந்தும்.

(இ-ள்.) சூரியன்பலனாவது—நேத்திரவியாதி, பீடை, காராகிரகப்பிரவேசம், மாதுருக்கரிஷ்டம், புத்திரகளத்திர மித்திர விரோதம், தலைநோயினால் தேகக்ஷீணம் செய்யும் எ-று.

வருந்திடாவேந்தன்காலச்சக்கரம்வரிற்பொன்னோடு
திருந்தியபூமிலாபந்திடம்பெறும்புதல்வருண்டு
பொருந்தியசுபவிவாகம்பூபதியாற்சன்மானம்
தருந்திறன்மன்னர்பூசைசகலபாக்கியஞ்சொல்சேரே.

(இ-ள்.) பிரகஸ்பதி பலனாவது—திரவியலாபம், பூமிவரவு, நல்லபுத்திரப்பேறு, சுபசோபனம், ராஜசன்மானம், ராஜபூஜிதம், சகலசம்பத்தும் உண்டாக்கும் எ-று.

சேருமேகாரிகாலச்சக்கிரஞ்செறிந்தகாலே
பாரிபொன்புதல்வர்நாசம்பயமனத்துக்கமுண்டு
சீருள்ளவன்னைநாசஞ்செப்பியமகாவியாதி
வாரணிமுலையார்வேண்டார்வருந்துவர்பிணியினாலே.

(இ-ள்.) சனிபலனாவது—களத்திரம், பொருள், புத்திரநாசம், பீதி, மனோதுக்கம், மாதாவியோகம், வியாதிபீடிதம், ஸ்திரீவிரோதம், வியாதியால் தேக நலிவுகொடுக்கும் எ-று.

### தாண்டல் முதலியது.

பிணிதத்துமருவும்வாறுபின்மீனத்திருந்துதேளில்
தணியவேபாயுங்கன்னிதனினின்றுநண்டிறத்தும்
அணிசிங்கத்திருந்துதண்டிற்புரளுமன்புடன்வினின்று
பணியுமேடத்தைப்பற்றிவிழுமிந்தப்படிக்கறிவாய்.

(இ-ள்.) பீடையுண்டாவது—மீனராசியிலிருந்து விருச்சிகத்தில் கிரகம் பாயும்போதும், கன்னிராசியிலிருந்து கடகத்தில் தத்தும் போதும், சிங்கவிராசியிலிருந்து கடகத்தில் புரளும்போதும், தனுசு விராசியிலிருந்து மேஷத்தில் விழும்போதும் எ-று.

### அதற்குவிபரம்.

அறிந்துவிழுந்தால் சுரமுண்டு பாயிலவன் பெண்டிருக் குஞ், செறிந்தசுரமாம் புரண்டிடினோய் சேர்ந்துதத்தி லவனை ன்னைக், குறுஞ்சுத்தங்க ளினக்கொள்வ ரொருதண்டுற்றே சிங் கத்திற், பிறிந்துசென்று விரணமதாம் பேசுங்கா லச் சக்கிரமே.

(இ-ள்.) விழும்போது—சுரபீடிதம், பாயும்போது களத்திரசுரம், புரளும்போது வியாதிபீடிதம், தத்தும்போது மாதாவைச்சார்ந்த பந்துநாசம், மிதுனத்திலிருந்து சிங்கத்தில் குதிக்கும்போது விரணமுண்டாம் எ-று.

---

## இலக்கணமுதல்.

### துவாதச பாவக விபரம்.

சீர்பெறுஞ்சென்ம லக்கினத்ததிபர் சேர்ந்தினி திருந்திடு மந்தப், பேர்தருபலன்கண் மெய்நிறஞ்சுரூபம் பெருநிதியுதிர மத்தகமும், ஏர்பெறுமுபாங்கஞ் சிந்திதங்கிலேசமிலக்கணாங்கீர் த்தி மூர்த்திகளும், பார்தருஞ்சுபசந் தோஷமும்வயதும் பக ர்தனுத்தானமென் றுரைக்கும்.

(இ-ள்.) சிறப்புபொருந்திய, ஜெனனலக்கினாதிபதி பொருந்திய நலங் கொடுத்திடும்படியான நாமத்தை விளக்கும் பிரயோஜனகர

முள்ளசரீரம், காந்தி, வடிவம்,புக்கிசம்,இரத்தம், சிரம், அழகியபிரதிய மிசம், நினைப்பு, மனவாட்டம், லக்ஷணம், கீர்த்தி, மூர்த்திகரம், பூமி யிலடையவேண்டிய சுபகரம், சந்தோஷம், ஆயுர்முதலியவை தெரி யச்சொல்லுமிடத்து முதற்றான மாகுமாம் எ-று.

உரைத்திடுஞ்சவுபாக் கியந்தனங்குடும்ப மொளிசெறிநே த்திரம்வித்தை, தரைப்பெறுஞ்செல்வ முடன்புகல்வாக்கு சா த்திரக்கேள்விகண் முற்றும், விரைத்தெழுகமனமனமுமுத்தே ச மேம்படவிரும்புசெம்பொன்னும், நிரைத்திடுநவரத் தினமி ரண்டிடத்தி னிலைமைகண் டுரைசெய்வர்நின்றே.

(இ-ள்.) சொல்லும்படியான—பூர்ணபாக்கியம்,தனம், குடும்பம், பிரகாசம்பொருந்திய நேத்திரம், கல்வி, பெருத்தசெல்வம், வசனம், சாத்திரவிசாரணை முதலியதும், கமனம், மனசு, உத்தேசம், மேன்பா டடைதல், பொன்னாபரணம், இரத்தினாபரணம், முதலியதைத் தெரி யச்சொல்லுமிடத்து இரண்டாகுமிடமாம் எ-று.

நின்றிடுமூன்றாமிடத்தினிற்பலன்க ணிருபராலுரைசெயு ம்பிலன்கள், வென்றிகொள்போகமடிமையாள்கானம் வீரிய ஞ்சகத்துவந்துணைவர், பொன்றிடாதினிய காதுநோய்கன்ன பூ டணம்புசித்திடுங்கலன்கள், துன்றுவிக்கிரமஞ்சேவகாவிருத்தி சூழ்தயிரியங்களுஞ்சொல்வர்.

(இ-ள்.) மூன்றாகுமிடத்தைக் குறிக்குமிடத்தில், இராஜகாரிய ம், வெற்றிவைபோகம், ஆளடிமை, சங்கீதம், பராக்கிரமம், சாந்தம், சகோதரம், அணிகலம், காதுநோய், கர்ணபூஷணம், போஜனபாத்தி ரம், வீரம், உத்தியோகம், தயிரியம் எ-று.

சொல்லியவித்தை வாகனஞ்சுபங்கள் சூழும்யாபாரமும ளையும், வெல்லுமேம்பாடுஞ்சவுக்கியமன்னை விரும்புநல்லுற வினராகும், நல்லநிட்சேபம்பரவிஷயங்கணறைகமழ் பாற்பசு கன்று, வல்லதோர்தேவத்தானமிப்பலனை வழுத்துநான்காமி டங்கொண்டே.

(இ-ள்.) படிக்கின்றகல்வி, வாகனம், சுபகரம், வியாபாரம், பூமி வெல்லத்தகுந்த மேன்மை, சுகம், தாய், விருந்து, சுற்றம், புதை, பர ஸ்திரீ கவனம், வாசனைத்திரவியம், பாலுள்ளபசுவும், கன்றும், தேவா லய முதலியதை நான்காமிடப்பலனெனக்கொள்க எ-று.

கொண்டதோர்மாயன் பிதாபெறும்புதல்வர் குலவுபூரு வஞ்செய்புண்ணியமும், தண்டமிழ்வாணர் புகல்பிரபந்தத் த ரித்திடுங்கார்ப்பமந்திரங்கள், மிண்டியவித்தை விதரணம்புத்தி

விரும்புமிப்பலனெலாமறிந்தே, கண்டுரைத்திடுவரைந்தாமிட ங்கொண்டே கற்றுணர்ந்தருளுமாதவரே.

(இ-ள்.) அம்மான்வர்க்கம், தகப்பன்வர்க்கம், புத்திராள், முன் ஜெனனத்தில் செய்த நல்வினை, மகாவித்துவான்களால் பிரபந்தம்பெ றல், கர்ப்பாதானம், மந்திரோபதேசம், சத்காலக்ஷேபம், விதரணம், புத்தி முதலியதை ஐந்தாகுமிடத்தைக் கொண்டு சொல்லுக எ-று.

மாதுகேள்வியாதி சத்துருபீடை மற்றுமாயுதங்களாலிர ணம், ஓதியஞாதி யால்வருதுன்பம் யுத்தமெய் வாதைபொற் கஷ்டம், பேதமாங்கள்ளர் புனல்மடந்தையரால்பிறங்குபாம் பாலுநோயுளது, நீதிசேர்பிரதா னிக்கமுஞ்சிறைபி னிலைமை யாறுமிடங்குறித்தே.

(இ-ள்.) வியாதி, சத்துரு, துக்கம், ஆயுதகாயம், பங்காளிவழக் கு, துன்பம், சண்டை, தேகநோய், பொல்லாத ஆபத்து, திருடராலு ம், ஜலத்தாலும், ஸ்திரீகளாலும், சர்ப்பத்தாலும் அபாயம், அதிகாரம் செலுத்தல், காவல்படல் முதலியதை ஆறுகுமிடத்தைக் கொண்டு சொல்லல் எ-று.

குறித்திடுங்கமன மணமடந்தையர்க்குங் குமரர்கடமக் குநல்லின்பம், நிறுத்திடுவிபகா ரந்தமர்கூட்ட மேமியோருத வுசன்மானம், பிறித்தறிவியாபா ரம்மணம்புரிநாள் பின்மனை யாள்வியம்பெறுதல், மறிக்கயல்விழியா யேழிடங்கொண்டு வழுத்துவர்மறைமொழிப்புலவர்.

(இ-ள்.) யாத்திரை, கலியாணம், பெண்பிள்ளைகளுக் குஞ் ... குஞ்சுகம், விபகாரவிசாரணை, பந்துக்கள்வரவு, இராஜப்பிரபுசன்மா னம், கொள்ளல் விற்கலான வியாபாரம், மங்களநடக்குங்காலம், களா த்திரபோக முதலியதை ஏழாகுமிடத்தைக்கொண்டு சொல்லுதல்.

புலவுறும்படையால் வாதைசேருயுத்தம் பொருப்பின் மேலேறிவீழ்ந் திடுதல், நிலைபெறும்வியாதி விக்கினங்கிலேச நீள்பலதுன்பமோடிரணம், சிலவினைநட்ட மிவ்விழுக்காடு செ றிபகைமரணமித் தனையும், உலகினிலுயர்ந்தோ ரட்டமபல ன்கண் டுரைசெய்வருண்மை பெற்றிடவே.

(இ-ள்.) ஆயுதபீடை, உயுத்தியம், மலையேறி விழுதல், வியாதி பீடிதம், விக்கினம், கிலேசம், மிகுதியான பலதுக்கம், விரணம், விர யம், நஷ்டம், பகைநேரல், சாதல் முதலியதை எட்டாகுமிடத்தைக் கொண்டு சொல்லுதல் எ-று.

பெற்றிடுந்தந்தை மகம்பயில்தருமம் பெருமைசேர் பாக்கியமடங்கள், உற்றதோர்பரம புண்ணியங்குளமு முயர்திருப்பணியுபதேசம், வெற்றிசேர் நீர்க்கா வணம்புகழ்கூபம் விரும்பிய செல்வமீதெல்லாம், கற்றறிந்தோர்களொன்பதாமிடத்தாற் கருணையும்பெறமொழிந்திடுவார்.

(இ-ள்.) தகப்பன், யாகாதிகிருத்தியம், தானதர்மம், கீர்த்தி, பாக்கியம், சத்திரம் சாவடி, புண்ணியகருமம், தடாகமுண்டாக்கல், தேவாலய பிரதிஷ்டை, குருவினிடத்தி லுபதேசம்பெறல், பேர்விளங்கத் தண்ணீர்ப்பந்தர் வைத்தல், தருமத்திற்கு கிணறு வெட்டுவித்தல், நிலைத்த செல்வ மனுபவித்தல், ஜீவகாருண்யம்முதலியதை ஒன்பதாகு மிடத்தைக்கொண்டு சொல்லுதல் எ-று.

மொழிந்திடும்பலபுண் ணியம்புவியாளல் முயன்றுபட்டணங்க டாபித்தல், பொழிந்திடுங்கரும மிரக்கமெய்ஞ்ஞானம் பூசனைமனைபிதாப்பவங்கள், ஒழிந்திடுமினிய தேவதாபத்தி யுயர்சவுரியம்பிரதாபம், இழிந்திடுமிரவு கருப்பமூண்சுவையு மிவைபத்தாமிடப் பெயரென்னே.

(இ-ள்.) பற்பலதர்மம், இராஜாதிக்கம், தன்பேரால் நாடுநகரமுண்டாக்கல், அவ்வியகவ்வியம், தயை, ஞானம், தெய்வபூஜை, நிலவீட்டு, தகப்பன் செய்பாவமொழித்தல், தெய்வபத்தி, பராக்கிரமம், பேரும்பிரதாபமும், இரவிற்சையோகம், போஜனருசிமுதலியதை பத்தாகுமிடத்தைக்கொண்டு சொல்லுதல் எ-று.

என்னுமூத்தவர்சே வித்திடும்பேர்க ளிளங்கொடிமனைவிபொன்வித்தை, மின்னியலாபம் பயிர்பரிவேழம் விளங்குநல்லறிவுதண்டிகையும், உன்னியமனத்திற் றுக்கமுந்தீரு முத்தரீயஞ்செறிவகையும், பன்னியபதினோ ராமிடங்கொண்டு பரிந்தருள்புரிவர் பாவலரே.

(இ-ள்.) ஜேஷ்டபிராதாக்கள், சேவகஞ்செய்பவர், இளமைப்பெண்சாதி, பொன், கல்வி, வரும்படி, பயிர்பச்சை, அஸ்வம், கெஜம், நல்லறிவு, ஆந்தோளி, மனோவியாகுலம் போக்கல், ஆடையாபரணம், முதலியதை பதினொன்றாகு மிடத்தைக்கொண்டு சொல்லுதல் எ-று.

பாவமங்கியதே சத்திலுத்யோகம் பணச்செலவுடனுறும் போகம், மேவியசயன சவுக்கியம்விவாதம் விளைந்திடுந்தொழில்புரிகன்மம், ஆவதோர்தானம் புண்ணியந்தியாக மருண்மகஞ்சார்வதா விருத்தி, சேவலங்கொடியோ னருளினற்பெரியோர் செப்புவர்துவாதசப்பலனே.

(இ-ள்.) இப்பாவகத்தால்—பிரதேசவுத்தியோகம், தன விரயத்தோடு உண்டாகும்போகம், நித்திரை சவுக்கியம், விவாதமுண்டாகுதல், தொழிற்றுறைச் சேய்கை, தானதர்மம், பரவுபகாரம், கொடை, யாகாதிகிருத்திய விருத்திமுதலியதை சேவற்கொடிபடைத்த சிவசுப்பிரமணியக்கடவுள் கிர்பைபெற்ற சான்றோர்கள், பனிரண்டாகுமிடத்தைக்கொண்டு துவாதசபாவகபலன் சொல்லுதல் எ-று.

---

வேறு.

## நவக்கிரக காரகம்.

### சனிக்கும், இரவிக்கும்.

விருத்தன்மரவேலைகளவாயுவுயிர்வேதை
மேதிசிறையற்றுறைதைவெட்கமின்னோய்வீண்சொல்
வருத்தமிரும்படிமையன்வாயடித்தல்கடுகு
வயற்களநீலுழுந்தசுபஞ்சேவகமெண்ணெயுமாம்
பருத்தசிரஞ்சிலும்பன்மயிர்பயித்தியசரீரம்
பான்மிளகுரசவாதம்பண்டிதங்கோதும்பை
யொருத்தலைநோவானைசிவம்லோகம்வச்ரம்வலக்கோ
வுயிர்த்தவன்யாத்திரைபகலீதினற்குளகாரகமே.

(இ-ள்.) மரவேலை, களவு, தீர்க்காயு, ஆத்ம இம்சை, எருமைவர்க்கம், சிறைப்படல், நிசிகாலத்துப்பிதா, வெட்கமில்லாதவை, ரோகம், வீண்வார்த்தை, துன்பம், இரும்பு, ஆளடிமை, சாத்தாண், வாயடித்தல், கடுகு, வயற்களம், நீலரத்னமுதலானவை, உழுந்து, அசுபகர்மம், சேவகாவிர்த்தி, எள்ளு, எண்ணெய், இவை முதலானவைக்கெல்லாம் சனியேகாரகன். பருத்தசிரம், சிலும்பினமயிர், பைத்தியசரீரம், பால், மிளகு, ரசவாதம், வைத்தியம், கோதும்பை, ஒருத்தலைநோவு, ஆனை, சதாசிவம், பஞ்சலோகம், வச்சிரரத்னம், வலதுநேத்திரம், பிதா, யாத்திரை, பகற்பொழுது, இவைகட்கெல்லாம் சூரியனே காரகன் எ-று.

### மதிக்கும், சேய்க்கும்.

அகளங்கன்சிவையூண்மாவாய்துயில்வெண்கலமுப்
பளர்வண்ணார்வெண்ணெய்குடையரிசிபனிப்பயறுப்
பிகழ்வரலங்கம்மிடக்கண்கயரோகமுழவன்
யாபாரமச்சமுத்தம்வஸ்த்ரமிவைக்கெனலாங்
குகன்மூனவன்றுவரைதுவர்கோவிகுலாலன்றீக்
குளவினையர்துணைவரிகல்குருதிரணஞ்சிவப்புத்

தகர்சுயம்பாகங்காயஞ்சாகசந்தாம்பிரம்பூ
தனையர்விரணங்காளிதழலிவர்காரகமே.

(இ-ள்.) பராசத்தி, போசனம், குதிரை, மாதரு, நித்திரை, வெண்கலம், உப்பளவர், வண்ணூர், வெண்ணெய், குடை, அரிசி, பனிப்பயறு, உப்பு, சிறிதுநாள்பருத்து மிளைத்துமிருக்குஞ்சரீரம், இடக்கண், சயரோகம், உழவன், மச்சம், முத்து, புடவை, இவைகளின்யாபாரம், இவைகட்கெல்லாம் சந்திரனே காரகன். சுப்பிரமணியர், விக்கினேசுரர், துவரை, பவளம், கோபவான், குலாலன், அக்கினிமுகமாகச்செய்யுந் தொழிலினர், சகோதரர், யுத்தம், இரத்தம், கடன், சிவந்தரத்னமுதலானவை, ஆட்டுவர்க்கம், சுயம்பாகம், காயம், சாகசம், செம்பு, பூபாலர், விரணம், பத்திரகாளி, இவைகட்கெல்லாஞ் ~~செவ்வா~~யேகாரகன் எ-று.

### புதனுக்தம், வியாழனுக்தம்.

கார்வணன்றேர்ப்பாகனம்மான்கல்விமரகதஞ்சேங்
கன்றிலேவாணிபன்றூதன்கணக்கனபுஞ்சிகனுந்
தேர்கதைகாவியந்தாதன்சேணடனமெழுத்துச்
செவ்விஷையன்றாசிபரன்றிரவசனுதிக்கன்
பாரறிவன்பயறுதராவெந்தையமால்பாலர்
பசும்பொன்மதுவான்கடலைபார்த்திபராண்ராகம்
போதிகன்சிரகஞ்சீவன்மணிமேதகம்விப்
பிரன்பிரமனண்டிகுருப்பேரிவர்காரகமே.

(இ-ள்.) விஷ்ணுபகவான், தேர்ப்பாகன், அம்மான், கல்விமுதலானவை, பச்சைரத்னமுதலானவை, சேங்கன்றுவர்க்கம், இலேமுதலானவை, வைசியன், தானுபதி, தூதுவன், கணக்கன், அலி, தேர், கதைகாவியம், தாதன், அந்தரநாட்டிய முதலானவை, இலிகிதம், விஷையசோரன், தாசிபரன், திரவசனுதிகன், சகலபிரபஞ்சமு மறிந்தவன், பாசிப்பயறு, தரா, வெந்தையம், இவைமுதலானவைக்கெல்லாம் புதனேகாரகன். புத்திரர், சொர்னம், தேன், ரிஷபவர்க்கம், கடலை, அரசர், புருடராகரத்னம்,பட்டப்பேர், சீரகம், வைடூரியரத்னம், கோமேதகரத்னம், விப்பிரவர்க்கம், பிரமா, ஆண்டிவர்க்கம் இவை முதலானவைக்கெல்லாம் வியாழனேகாரகன் எ-று.

### சுக்கிரனுக்தம், இராகுவுக்தம், கேதுவுக்தம்.

பேரிலெற்காய்தாசர்பசுபெண்டிருறவூர்தி
பேரியைவாத்தியமுதற்சங்கீதநடப்பிரியந்

நார்கொடிடாளுவிமுதலாயபரிமள்வா
சனைசயனவணைமுதல்வெண்சாமரைசையோக
மேரிளமைமொச்சைபுளியீயமளேபயஞ்சோ
றெப்பொழுதும்பரியாசப்ரசங்கமிரக்ஷகன்மால்
சூர்மலர்ப்பெண்ணிரசித(மாசுணஞ்)சோரம்வெகுபேச்
சுவ்வேடத்தொழில்(சிகி)துர்த்தொழிலிவர்காரகமே.

(இ-ள்.) பட்டப்பெயர், கிரகம், பகற்காலமாதுரு, தாசி தாசன் முதலானவர், பசு, களத்திரம், மித்திரம், வாகனம், பேரியைமுதலா னவாத்தியம், சங்கீதம், நாட்டிய முதலானவைகளிற்பிரியம், மாலை முதலானவை, கொடி, டால்முதலானவை, நாவிப்பிள்ளைமுதலாகிய நாளுவித பரிமளவாசனைதிகள், கட்டில் மெத்தை, சப்பிரமஞ்சமுத லானவை, வெண்சாமரை, போகபோக்கியம், அழகு, இளமை, மொச்சை, புளி, ஈயம், தயிர், பால், அன்னம், எப்போதும் விகடவினோத ப்பரியாசப் பிரசங்கப்பிரியம், சனரக்ஷகம். ஆசை, தேவப்பெண்கள், இலக்குமிதேவி, வெள்ளி, இவைமுதலானவைக் கெல்லாஞ் சுக்கிர னேகாரகன். களவு, வெகுபேச்சு, நாளுவிதவேடத்தொழில், செப்பி டுவித்தை, இவை முதலானவைக்கெல்லாம் இராகுவேகாரகன். கப டத்தொழில் முதலானவைக்கெல்லாம் கேதுவேகாரகன்-இவை கார காதிபாவர்க்கம் எ-று.

## இலக்கினபலன்சுருக்கம்.

தற்பெயர்மற்றுள்ளவைக்குந்தற்பெயரிற்சொலன்மேற்
சாற்றுதலக்கினபலனுந்தவமுனியேதகர்ப்பேர்
முற்பவனமாகவரிலரசர்வெகுமான
மூர்க்கன்வெகுசனப்பிரியன்மோகிதயிரியவா
னற்பனஞசாரன்மனதமைதிபொறையறிவ
ளுகம்ரம்யன்மனப்பயமெய்யனற்றருவாயுதத்தாற்
கற்படன்மட்சுவர்விழுதலால்விரணுதிக்கன்
களத்ரத்வயன்றனையரற்பங்கனிட்டர்சிரேட்டர்களே.

(இ-ள்,) சொன்னவையல்லாமல் மற்றது எது உதையமோ அந் தப் பேர்ப்படி பலன்சொல்லுக-அகத்தியனே இலக்கினபலன் கேட்பா யாக. இலக்கினமேடமாகில் இராசவெகுமானம், மூர்க்கன், வெகுசன ப்பிரியன், மோகி, தைரியவான், அற்பன். அனுசாரன், அடக்கமுடை யவன், பொறுமை, அறிவு, அழகு, மனோபயம் இவையுடையவன், அ னல் மரம் ஆயுதம் கல்சுவர்விழுதல், இந்தவர்க்கங்களினுலே விரணு

திகமுள்ளசரீரம், உபயகளத்திரம், அற்பபுத்திரர், சகோதரசிரேஷ்டன் எ-று.

களத்திரதோஷந்தனையர்காலாந்த்ரமுளர்தற்
 கா்யபரன்குணதோஷங்கண்டறிவன்கபடத்
துளத்தவனும்விஷையசளனனையுபையமனைவி
 யுரைக்குடையன்மூத்ரகிரிச்சனனுதரரோகி
வளர்த்திசொற்பதனமறவழக்கறிவன்கணக்கன்
 மைதுனவபேட்சையவமனையுமகாகபடி
யளப்பிலவமானமுளனற்பசுதர்காமத்
 தமூந்துசதாதுக்கியிவையான்கதைநண்டதற்கே.

(இ-ள்.) இலக்கினம் இடபமாகில் களத்திரதோஷம், காலாந்த்ர புத்திரர், சுயகாரியபரன், குணதோஷமறிவன், மனோகபடியென்க - மிதுனமாகில் விஷையாதிகன், உபையமாதா, களத்திரத்தின்சொற்கேட்பவன், மூத்திரகிரிச்சனன், உதரரோகி, வளர்த்திவெசனுதிகன், வார்த்தைசோர்வில்லாதவன், வழக்கறிவன். கணக்கன், மைதுனஅபேட்சி, ரோககளத்திர னென்க - கற்கடகமாகில் களத்திரசுகவீனன், கபடுள்ள அவமான களத்திரம், அற்பபுத்திரர், வெகுகாமி, சதாதுக்கியென்க எ-று.

அதர்மகர்மிநேத்ரசிரசானனநோயீன்றோர்க்
 காருலன்கெம்பீரவசனத்தவனுயழகு
சுதரதிகம்பின்னிரக்கம்வஞ்சகந்துராசை
 சுயகார்யபரன்பிறராற்றெழிற்றனம்பெற்றுடையோ
னிதமகிதமிரண்டுமறிந்தினசனபெந்துவினு
 லெப்பொழுதும்பூச்யமுளனுமிரக்கம்பீதி
மதனசுகிபொறுமைபுகழ்மதிகுணம்வல்லமைநல்
 வடிவறிவாஞ்சியமுதற்றுலேவரைக்குமாமே.

(இ-ள்.) இலக்கினம் சிங்கமாகில் பாவகர்மி, நேத்திரசிரமுகரோகி, மாதுர்பிதுர்த்துவேஷி, கெம்பீரவசனியென்க-கன்னியாகில் அழகு, வெகு புத்திரர், பின்னிரக்கம், மனோவஞ்சகம், துராசை, சுயகாரியபரன், பிறராற்றெழிற்றனம் பெற்றுடையோன், இதமகிதம் இரண்டுஞ்செய்பவன், பந்துசன பூச்சியனென்க-துலாமாகில் இரக்கம், மனோபீதி, மன்மதசுகி, பொறுமை, புகழ் நல்லபுத்தி நல்லகுணம், வல்லமை, அழகு, அறிவு, இவையுடையவன், எ-று.

வரைவில்விஷையப்பிரியன்பெந்துசனத்வேஷி
 வஞ்சகனுதுலனுபையமானிமதிமானு

முறையில்வணங்கினவருறவுண்மையபிமான
முத்யோகபரனும்வாசாலகனுபாயி
திரமதிதுராசையினனுகுமகடண்ட
தெரித்திரன்மித்திரரையினல்செய்பவனுந்தெய்வம்
பெரியவர்பிராமணர்தம்மிடத்ததிகபத்தி
பெருஞ்செலவுந்தேண்முதற்சேலளவிவைபேசுவதே.

(இ-ள்.) இலக்கினம் விருச்சிகமாகில் வரையற்றவிஷையப்பிரியன், பெந்துசனத்துவேஷி, வஞ்சகன், தரித்திரன், வெகுமானி, அவமானி, புத்திமானென்க - தனுசாகில் நல்லவசனன், மித்திரன், சத்தியவான், அபிமானி, சதா உத்தியோகபரனென்க-மகரமாகில் வாய்சாலகன், உபாயி, திரபுத்திமான், துராசையுடையவனென்க - கும்பமாகில் அகண்டவயிறு, தரித்திரன், மித்திரரை யுபாதிப்பவனென்க - மீனமாகில் தேவபிராமணர் பெரியவரிடத்திற் பத்தியுடையவன், வெகுசெலவாளி. எ-று.

### இலக்கின நவக்கிரக உபக்கிரக பலாபலன்.

பேசுவதவ்வோரைமுதற்சட்டியாங்ஸம்வரைக்கும்
பேரசுபசுபமதற்காய்ப்பேசுவதப்பலனும்
வாசமலரிறையுதையம்வரிற்சிரநேத்திரநோய்
வழிப்பயணசஞ்சாரமரசனன்மாப்பீதி
கேசமசனந்தனையரற்பமதியாகிற்
கீர்த்திதயவழகுசுபகிரியைசளன்றழலேற்
பூசல்களத்திரவீனஞ்சஞ்சலம்பொருமை
பூமிசகோதரலாபம்புரவிரணங்கரவே.

(இ-ள்.) இலக்கினவோரை முதற்சட்டியாங்கிசம் வரைக்குமுள்ளபேர்ப்படி அசுபசுபமறிந்து அதற்கு அதுவாப்பலன்சொல்லுக - இலக்கினத்தில் இரவிநிற்கில் சிரநேத்திரரோகம், வழிப்பயண சஞ்சாரம், இராசாக்கினி, மிருகபயம், அற்பகேசம், அற்பபோசனம், அற்பபுதல்வரென்க-மதியாகில்கீர்த்தி, தயவு, அழகு, நல்லதொழில், காரியக்காரனென்க. சேயாகில் யுத்தம், களத்திரவீனம், சஞ்சலம், பொருமை, பூமியாற்சகோதரத்தால்லாபம், சரீரவிரணம், சோரம். எ-று.

புரப்புதனேல்வித்தைதனம்புகழ்வேசியர்சங்கம்
புலவன்வெகுசனபூச்யன்பொறுமைபுத்தியறிவு
குருப்பெயரிலனேகசனரட்சகன்விவேகி
குலேசனதிருபனுலகுடையவர்கொண்டாடும்

வரக்கவிதைதெய்வீகவசனம்வெகுமான
மதியறிவுநல்லகுணமனசுபுகராகில்
விரைக்குழலார்வசியசுமுகன்விஷையகுசலன்
வெகுமானியிவர்க்குடையகாரகமிக்குளதே.

(இ-ள்.) இலக்கினத்திற்புதனுகில், வித்தை, தனம், புகழ், வேசியர் சங்கம், புலவன், வெகுசனபூச்சியன், பொறுமை, புத்தி, அறிவெ ன்க - குருவாகில், அனேகசனரட்சகன், விவேகி, குலேசன், அதிரூபன், உலகுளோர் கொண்டாடும் வரகவிதை, தெய்வீகவசனம், வெகுமானம், நல்லபுத்தி, அறிவு, நல்லகுணம், நன்மனசு என்க-சுக்கிரனுகில் ஸ்திரீவசியன், சுமுகன், விஷையகுசலன், வெகுமானியெ ன்க-இவர்களுடையகாரகமுங்கூட்டிச்சொல்லுக எ-று.

மக்கப்பேச்சனியுதையமேவிலவமானம்
விதனம்வெகுபோசனம்விசாரநிருவித்தை
யக்கிரமம்பொய்கொலைசெய்யவக்யாதிசோர
மனுசாரம்வாயடித்தலடித்ததட்டிப்பறித்த
றுக்கமனமடிவுறக்கஞ்சோம்பலரவாகிற்
சோரம்வெகுசனபூச்யன்றுர்தொழில்விரோத
மக்கள்வெகுபாக்கியமனோவஞ்சகந்தியாகம்
வர்மமகாகோபம்வெகுவார்த்தையுடையவனே.

(இ-ள்.) இலக்கினத்திற் சனியிருக்கில் அவமானம், தரித்திரம், வெகுபோசனம், விசாரம், நிருவித்தை, கிரமத்தப்பு, பொய்சொலல், கொலைசெய்தல், அவக்கியாதி, சோரம், அனுசாரம், வாயடித்தல், அடித்ததட்டிப்பறித்தல், துக்கம், மனமடிவு, சதாநித்திரை, சோம்பலென்க-இராகுவாகில்சோரம், வெகுசனபூச்சியம், துர்த்தொழில், விரோதம், புத்திரர், வெகுபாக்கியம், மனவஞ்சகம், தியாகம், மனோவர்மம், மகாகோபம், வெகுவார்த்தையுடையவன் எ-று.

அவமதிதுற்சிகியுதிக்கில்யாசகமபாய
மவமானமரசர்பயமதிகசனத்வேஷம்
பவம்வதைசெய்குதன்முதலாம்பாதகம்விகாதம்
பயமிலதாமாந்தியெனிற்பயங்குடிலங்கெறுவங்
கவைவிகடமந்தபுத்தியிலன்பவனன்கதுவிற்
காரியவிக்கினநிதனங்காலன்மரணஞ்செய்
குவன்மதிநந்தனன்முதல்வர்தற்பெயர்தற்பலனைக்
குணமகுணத்திறளவுங்கூறுவதவ்வியல்பே.

(இ-ள்.) இலக்கினத்திற்கேது இருக்கில், பாவபுத்தி, பொல்லாத வன், யாசகஜீவனம், அபாயம், அவமானம், இராசபயம், வெகுசனத் துவேஷம், பாவம், வதைசெய்தல்முதலாகியபாதகம், விகாதம், மனோ திடமென்க. குளிகனாகில் மனோபயம், குடிலம், கெறுவம், சஞ்சலம், விகடம், மந்தபுத்தியென்க. குளிகபவனனாகில் காரியவிக்கினம்,' தரி த்திரமென்க. காலனாகில்மாரணமென்க - கலைக்கியான பாதன்முதலா னவராகில் அவரவர்பேர்போலும் பலன்சொல்லுக-இந்தப்படி, கஉ-ம், இடம் வரைக்கும் குணாகுணமறிந்து பலன்சொல்லுக எ-று.

## ஆண்பெண்ணறிக.

கொச்சகம்.

சந்திரனிலக்கினத்திற்றங்கில்குற்றமெல்லாம்போம்
எந்தவிதமுஞ்சசிபெண்ணோர்கலைமிகுமேலாணும்
நந்தலிலாக்கோணோக்கினுற்பானெட்டாண்டென்றே
கொந்தலர்பூவின்குழலாய்கூர்ந்தறிவோர்சொல்வாரே.

(இ-ள்.) இலக்கினத்தில் சந்திரனிருக்கில் யாதொரு தோஷமு மில்லை, பிறந்தகுழந்தை பெண், விர்த்திசந்திரனாகில், பிறந்த குழந்தை ஆண், நல்லோர்காணில் வயது-சஅ, என்று சொல்லுக எ-று.

## இதுவுமது.

விருத்தம்.

பாரின்மந்தன்பரிந்தொற்றைராசியில்
சேரநிற்கிலாண்பிள்ளைஜெனித்திடும்
சீருலாவியசெவ்வாயிரட்டையில்
பேரவாவொடுநிற்கிற்பெண்பிள்ளையே.

(இ-ள்.) சனி ஜெனனலக்கினத்திற்கு ஒற்றிற்ற இராசியில் இரு க்குமாகில், பிறந்த குழந்தை ஆணென்றும். இரட்டித்த இராசியி லிரு க்குமாகில் பெண்ணென்றும் சொல்லவும் எ-று.

## வியாதியும் பாலும் உண்டாமென்பது.

விருத்தம்.

பூவையேலக்கினதிபுதன்குஜன்மிதுனங்கன்னி
மேவிடப்பரிதிபார்க்கில்விளைக்குமாசனத்தில்ரோகம்
ஏவுறுசசிக்குமூன்றுமதிபனோடிராகுங்கூடில்
பாவைபோனேஞ்சையாகிபலர்முலைப்பாலுங்கொள்வன்.

(இ-ள்.) இலக்கினதிபதி புதனாகவாவது குஜனாகவாவதா யிரு ந்து மிதுனம் - கன்னியிலமர சூரியனும்பார்க்க - ஜாதகனுக்கு ஆச னரோக முண்டாம், சந்திரனுடன் மூன்றுமதிபதியும் இராகுவுங்கூடி

யிருக்க - ஜாதகன் மரப்பாவைபோன்று - இளைத்து தாயார்முலைப்பா லன்றி - அன்னியமாதர் பாலையு முண்பன் எ-று.

### போஜன பாத்திரம்.

சந்தவிருத்தம்.

எண்ணியரெண்டாமாதி லாபமூன்ருதி
யிதமில்லாப்பாவியர்கா ணிடந்தனிலேநின்ருல்
உண்ணலுநற்கலமில்லா னுகந்தரெண்டாம்வீட்டி
லுயருஞ்செங்கதிரோனு முலகிலுள்ளோர்காண
நண்ணியதோர்சனிமேவ ரெண்டாம்வீட்டாதி
நண்பொடுமூன்ரும்வீட்டி னயந்துநிற்கத்தானும்
பண்ணுடனேசுபர்பார்க்கிற் பால்வெள்ளிக்கலமே
பாவக்கோள்விழிநோக்கப் படைப்பதுவெண்கலமே.

(இ-ள்.) இலக்கினத்திற்கு உ-கக-ந-க் குடையவர்களை பாபக் கிரகம் பார்த்திருந்தால் உண்ணவும், உண்ணப்பாத்திரமும், இல்லாமையாம். உ-ல் சூரியன் சனி இருக்க உ-க்குடையவன் ந-ல் இருக்க, சுபக்கிரகபார்வையுண்டாகில் பாலுடனே வெள்ளிக்கலமு முண்டு. குரூரக்கிரகபார்வை யுண்டாகில், உண்ணும் பாத்திரம் வெண்கலமாம்.

வே று.

### கல்வித்திரம்.

பிரக்கினைசேர்திரிகோணங் கேந்திரத்தும்
பிரியமதிபுதனிருக்கிற் றமிழ்வித்தையாகும்
திருக்கில்லாரவிசெவ்வா யுற்றிருந்தால்
தெலுங்குவித்துவானுருங் கருங்கோணிற்கில்
நெருக்கவேதுருக்குமா ரியபாஷைக்கு
நிபுணவித்துவானுகும் வெள்ளிகுருமேவில்
சிரக்கனமாஞ்சாத்திரங்க டமக்குவல்ல
திடவித்வா னுமெனவுஞ் செப்பிடவுமாமே.

(இ-ள்.) சிறப்புப் பொருந்திய திரிகோணத்திலும் கேந்திரத்திலும் புதனிருந்தால் தமிழ்பாஷை, சூரியன் செவ்வாயிருந்தால் தெலுங்கு பாஷை, இராகுவிருந்தால் துருக்கு - இந்துஸ்தான்பாஷை, சுக்கிரன் குருவிருந்தால் - சிரசாய்விள்ங்கும் சாஸ்திரசம்பத்து, சனியிருந்தால் இங்கிலீஷ் முதலானது உண்டாம். எ-று.

வே று.

### சீ வ ன ம்.

அம்புவியோர்செய்தொழிலாற்சீவனமுண்டாகும்
அவையறிலக்கினஞ்சோமனுதவன்மும்மனைக்கும்

தம்பமொடுபத்தாம்வீட்டங்கிசையிலிருந்தோர்
  தம்மிலதிகப்பலமாத்தரித்தவரங்கிசைதான்
வெம்புரவித்தேரோனங்கிசத்தவனேபலமே
  மேவிற்புல்வைக்கோலும்விற்றுணர்வேகொள்வன்
செம்பொன்விற்பதுராசிப்பலனூலுங்கோரை
  திக்குபலமுண்டாகிற்செய்வன்வயித்தியங்கள்.

(இ-ள்.) உலகத்தின்கண்வந்த - மானிடர் செய்யுந் தொழிலாலடையும் பலனைத் தெரியச்சொல்லுமிடத்து, ஜெனன லக்கினம் சந்திரனிராசி, சூரியனிருக்கப்பட்டவீடு, இம் மூன்றிடத்திற்குத் தனித்தனி பத்தாம்வீட்டின்கிரகம், எந்த அமிசத்தி லிருந்ததோ அந்த அமிசத்தில் வலிமைபெற்ற கிரகத்தின் அமிசத்தைக்கொண்டு பலன் சொல்லுக, அதுவே சூரியனுடைய அமிசமாகில் புல்-வைக்கோல்விற்று ஜீவனம், இராசியாதிபதி யமிசமாகில், பொன்பொருளால் ஜீவனம், இலக்கனாதிபதி யமிசமாகில், நூல், கோரையினாலும், வயித்தியமுஞ் செய்து ஜீவனம் எ-று.

களங்கமிலாவெண்டிங்களங்கிசமேயாகி
  கமழுமிலக்கினத்திரையக்காணமுதலாகில்
விளங்கியநற்பயிர்த்தொழிலேபுரிந்துணவுகொள்வன்
  மேவியரெண்டாந்திரையைக்காணமதேயாயின்
வளங்கொள்சிந்துவிற்சம்மான்கப்பல்சோங்கோட்டி
  வாழ்வன்மூன்றாந்திரையைக்காணமுமேயாயின்
இளம்பிடியோதிமந்தனையும்பழித்தநடைமடவார்
  இணக்கத்தாற்சீவனமுண்டென்பரினியோரே.

(இ-ள்.) வளர்பிறைச் சந்திர னமிசத்தில், முதலாந்திரேக்காணமாகில், நல்ல பயிர்பச்சையிட்டு ஜீவிப்பன், ஷை இரண்டாந்திரேககாணமாகில் சமுத்திரத்தில் தோணி கப்பல் படகோட்டி ஜீவிப்பன், மூன்றாந்திரேக்காணமாகில், களித்தியானையி னடையையும், அன்னநடையையும் சரியல்லவென்ற ஸ்திரீகள் மூலமாய் ஜீவிப்பன் எ-று.

இனியசெவ்வாயங்கிசத்திலக்கினமேவலுக்கில்
  இரும்புவெள்ளிசெம்பொனும்விற்றுய்வனவாங்கிசைதான்
நனியபலமாயிடிலக்கினியிலுறுதொழிலே
  நடத்திடுவன்றிரிம்சாங்கிசம்பலமேயாயின்
தனியுறுமாயுதம்பிடித்துச்சேவிப்பனேழாங்
  தானமதுபிலனாகிற்றக்கதொழில்செய்வன்

கனிமொழியாயிரவிமுதல்சனிமட்டுமெண்ணிக்
  கண்டதுசப்தாங்கிசமேழாம்பலன்கண்டீரே.

(இ-ள்.) செவ்வாயினுடைய அமிசத்தில் லக்கினம்சம் பிலத்தால் ஈயம், இரும்பு, வெள்ளி, பொன்விற்று ஜீவிப்பன், நவாம்சம் பிலத்தால் நெருப்பிடத்து வேலைசெய்து ஜீவிப்பன், திரிம்சாம்சம் பிலத்தால் ஆயுதபாணியாகி ஜீவிப்பன், 'ஏழாவது அமிசம்பிலத்தால் வருத்தத் தொழிலால் ஜீவிப்பன், முக்கனியொத்த மொழியினையுடைய பெண்ணே? சூரியன்முதல் சனிவரையிலெண்ணி சத்தமமாகிய ஏழாம் அமிசத்தின் பலன் சொல்லுதல் எ-று.

க்ண்டபுதனங்கிசத்தின்பலனவனங்கிசையேல்
  காவியங்கற்பன்றுவாதசாங்கிசமேயாயின்
மிண்டுசிற்பசாஸ்திரமேயறிந்துணவுகொள்வன்
  மேவுதிரிம்சாங்கிசமேயெழுதுந்தொழிலாளன்
கொண்டவறுபதிலோரையங்கிசமேற்கணிதம்
  குறித்திடுவன்புதனிருந்தராசிதனைப்பிரித்து
மண்டியறுபதுபங்குவதிலொற்றைப்பங்கில்
  வந்துபுதனிருக்கிலிதுவேவழுத்தல்வேண்டும்.

(இ-ள்.) புதனமிசப் பலனுவது, நவாமிசையில் தான்பிலத்தால் இலக்கணவிலக்கியவித்தையால் ஜீவிப்பன், துவாதசாம்சையில்பிலத்தால் சிற்பசாஸ்திரமூலமாய் ஜீவிப்பன், திரிம்சாம்சத்தில் பிலத்தால் எழுத்துமூலமாய் ஜீவிப்பன், சஷ்டியாம்சத்தில் இலக்கினம்சம் வலுத்தால் கணிதசாஸ்திரமூலமாய் ஜீவிப்பன், புதனிருந்தராசிதனை சுo-பங்குசெய்ய ஒற்றிற்றபங்கில் புதனிருந்தால் மேற்சொன்ன பலனைச்சொல்ல வேண்டுமென்பதாம் எ-று.

வேண்டுகுருவங்கிசத்தின் முதற்றிரையக்காணம்
  விப்பிரராற்பலனிரண்டாந் திரேக்காணந்தன்னில்
பூண்டதேவதைகளினற் பலன்மூன்றுங்காணம்
  புண்ணியத்தாற்பயனுகுஞ் சுக்கிரனங்கிசைக்குத்
தாண்டுசுரபிகளெருமை பெறுமூன்றுங்காணம்
  தக்கவெள்ளிவிற்பனடுத் திரையக்காணந்தான்
மீண்டுமுதற்றிரையக்கா ணம்மதுவேயாயின்
  விரவுநவரத்தினமே வியாபாரஞ்செய்வன்.

(இ-ள்.) குருவினுடைய அமிசத்தில் க-வது திரேக்காணமாகில், பிராமணமூலமாய் ஜீவிப்பன். உ-வது திரேக்காணமாகில் தெய்வகடாக்ஷத்தினுல் ஜீவிப்பன். ந-வது திரேக்காணமாகில் தர்மவகையில்

ஜீவிப்பன். சுக்கிரனுடைய அமிசத்தில் பிறந்தவன் காலிமாடுபசு எருமையினால் ஜீவிப்பன். ௩-வது திரேக்காணமாகில் வெள்ளிவியாபாரத்தால் ஜீவிப்பன். உ-வது திரேக்காணமாகிலும் க-வது திரேக்காணமாகிலும் நவரத்தின வியாபாரத்தால் ஜீவிப்பன் எ-று.

செய்யசனியங்கிசத்திற் பலன்சிறுவன்றானுஞ்
செப்பியமித்ராங்கிசமே பிரயாசத்தொழிலாம்
வெய்யபாவக்கிரகம் லக்கினந்தைப்பார்க்கில்
மெத்தவுஞ்சுமைசுமந்து மெய்க்குணவுகொள்வன்
ஐயமிலக்கினந்தன்னை நீசருங்கண்டாக்கால்
ஆகாதகாரியங்க ளவத்தொழிலேசெய்வன்
துய்யசனியங்கிசத்திற்சுபக்கிரகங்கூடில்
துலங்கிடவேதான்சொற்பத்தொழில்செய்துவாழ்வன்.

(இ-ள்.) சனியமிசத்தின் பலனாவது—மித்திராம்சம் [illegible] கஷ்டஜீவனம், குரூரக்கிரகம் லக்கினத்தைப் பார்க்கில் சுமைசுமந்து ஜீவிப்பன், நீசகிரகம் பார்த்தால் தகாத வேலைசெய்து ஜீவிப்பன், சனியமிசத்தில் சுபக்கிரகமிருக்கில் சொற்பத்தொழிலால் ஜீவிப்பன்.

வேறு.

ஆதவன்சசி லக்கினமூன்றிற் கதிபரி லதிகமாய்ப்பலந்தோன், அடைந்தவங்கிசந்தான் பரிதியங் கிசமே யாகில் புல்வைக்கலும் விற்று, நீதியாய் வயித்தியங்களுஞ்செய்வன் நீள்பிறையங்கிசமாயின், நீரினிற்சோங்கு நடத்தியேயுய்வன் நிலமகனங்கிசையாயின், ஏதுமக்கினியாலிரும்புபொன்வெள்ளி யுருக்கலாயுதங்களினாலும், உணவுகொண் டிடுவன்புந்தியங்கிசமே லுரைத்திடுகணிதமுங்கணக்கும், தீதறுசிற்பத் தொழில்கள்காவியத்தாற் சீவனம்வேந்தனங்கிசைக்கு, தெய்வமா மறையோர்பெரியவராலுஞ் சீவனம்புரிந்தினி திருப்பன்.

(இ-ள்.) சூரியன், சந்திரன், இலக்கினம், இம்மூன்றிடத்ததிபதி வலுத்திருந்தாலும், அல்லது இம்மூவிடத் தமிசைக்கிரகம், சூரியனமிசமாகில் புல் வைக்கோல்விற்று ஜீவிப்பன், மேலும் வயித்தியமூலமாய் ஜீவிப்பன், சந்திரனமிசையாகில் ஜலத்தில் கட்டுமரமுதலிய மரக்கலம்விட்டு ஜீவிப்பன், செவ்வாயி னமிசையாகில் அக்கினியிடத்தில் ஈயம், இரும்பு, பொன், வெள்ளி யுருக்கியும், ஆயுதம்பிடித்தும் ஜீவிப்பன், புதனமிசமாகில் மேன்மையாய் கணிதசாஸ்திரம் கணக்கு குற்றமற்ற சிற்பத்தொழில் இலக்கணசாஸ்திரம், இதுமூலமாய் ஜீவிப்பன், குருவினுடைய அமிசமாகில், தேவதையாலும் வேதியராலும் சான்றோர்களாலும் ஜீவிப்பன் எ-று.

கலிவிருத்தம்.

இருந்தசுக்கிரனங்கிசமேறிலோ
திருந்தரத்தினம்வெள்ளியாற்சீவனம்
பொருந்தசுன்னங்கிசம்புகவீனமாய்
வருந்திடுந்தொழிற்செய்வன்வளமிலான்.

(இ-ள்.) சுக்கிரனமிசமாகில் இரத்தினம், இரசிதம், இதனால் ஜீவிப்பன். சனியமிசமாகில் ஈனத்தொழில் செய்தும் மெய் வருந்தும் படியான ஜீவனஞ்செய்வன் கஷ்டப்பிராணீ எ-று.

வேறு.

இருப்பிடம்.

தானமாஞ்சென்மவீடு சரமெனிற்பரதேசத்தில்
ஊனதோர்திரமதாயின் மருவன்சுதேசந்தன்னில்
ஈனமிலுபயமாகி விதரதேசத்திற்பாதி
ஊனமிற்சுதேசந்தன்னி லுறைவன்பாதியுங்காண்பீரே.

(இ-ள்.) ஜாதகன் ஜென்னலக்கினம்-சரமாகில் பிரதேசவாசம், திரமாகில் சுதேசவாசம், உபயமாகில் பிரதேசத்தில் சிலகாலமும், சுதேசத்தில் சிலகாலமும் வாசமாம் எ-று.

வேறு.

விவாக மின்மை.

எண்ணுதபாவியர்களத்திரத்திலெய்திட
நண்ணுகவாறெட்டுபன்னிரண்டினண்ணிட
நூன்றருஞ்சத்துருநீசம்பெறத்தோன்றிட்டான்
மின்னுரைக்கைப்பிடித்து வேட்டல்செயமாட்டானே.

(இ-ள்.) இயாதொரு ஜாதகத்திற்கு ஏழாமிடமாகிய களத்திரத் தானத்தில் குரூரக்கிரகங்க ளிருந்தாலும், அந்தஸ்தானாதிபன் ஷட்டாஷ்டம் விரயத்தானத்தி லிருந்தாலும், சத்துருஸ்தானம் நீசஸ்தானம் அடைந்தாலும், இவ்விதக்குறிப்புகளில் பிறந்தவன் பாணிக்கிரகணஞ் செய்து மணம்புரியமாட்டான் எ-று.

வேறு.

மரிப்பிடம்.

வரத்தினிற்பார்க்கவனுதையமறையவன்பெண்மதியாய்
வருடையிலாங்கிசமான தனுப்புறமாய்வரினுந்
தரத்தினிலந்தணனுறினுஞ்சிவலோகமிரவி
தமலிவர்கள்பெலக்கினரருலகிலிரசதமு

நிரத்துகலைக்குளவிதுவும்பெலத்தல்பிதுருலக
நிதிமீனத்துதையமுறினிமலருடன்கூடித்
திரத்துதையகேந்திரத்திற்றிவிக்கிரவிற்சரமாச்
சீவனுறிவிவன்சேர்தல்பிரமபதமெனுமே.

(இ-ள்.) எ-ல், சுக்கிரனும், க-ல், குருவும்கன்னியிற் சந்திரனுமாக இலக்கினம் தனுவாகி மேடாங்கிச மேறிலும், இலக்கினத்தில் வியாழன் இருக்கிலும் சிவலோகம் அடைவனென்க - கிரகாதிபரில் இரவி சேய் பெலக்கில் பூலோகத்தை அடைவனென்க-சுக்கிரனும் பூருவபக்ஷத்துச்சந்திரனும் பெலக்கில் பிதுருலகம் அடைவனென்க-மீனலக்கினமாகி குருவிருக்கிலும் திவியிற்றிரமும் நிசியிற்சரமும் இலக்கினமாக கேந்திரத்திற் சுபருடன் வியாழன் கூடியிருக்கிலும் பிரமபதம் அடைவனென்க எ-று.

## தேவருலகடைபவன் நரகஞ்சேர்பவன் வைகுண்டம் பெறுபவன்.

பதப்பதியுமிதற்கிறையுமுற்றவர்பார்த்தவரும்
பார்ப்பான்றன்வர்க்கமுறிற்பண்ணவராகுவராற்
சிதப்பதியுமெட்டீறுஞ்சுபராசியாகித்
தீதகலச்சுபர்பார்க்கிற்றேவருலகடைவர்
மதப்பதிமன்பெலக்கவசையீறிவர்கணீச
மடைந்திடினுநரகமைக்கோணேர்பூமிவான
முதற்பதிமற்றப்புறமாய்மொழிவர்குருவர்க்க
முதற்புதனைச்சனிபார்க்கின்மாலுலகமுறலே.

(இ-ள்.) கஉ, இதற்குடையவனும் இதில் இருந்தவனும் பார்த்தவனும் குருவர்க்கமேறில் தேவனவனென்க. கo-அ-கஉ-ம், சுபராசியாகி பாவமில்லாச் சுபர்பார்க்கில் தேவருலகத்தை அடைவனென்க. எ-க்குடையவன் பெலக்க, க, அ, கஉ, க்குடையவர்கள் நீசவர்க்கம் அடையில் நரகம் அடைவனென்க-மேடக்கோண் முதல் நாற்கோணில் இலக்கினமானதுகண்டு பூலோகம் அந்தரலோகம் சுவர்க்கலோகம் நேர்வைத்துச் சொல்லுக. இலக்கினம் குருவர்க்கமாகி புதனிருக்க சனிபார்க்கில் வைகுண்டம் அடைவனென்க எ-று.

---

வேறு.

## நக்ஷத்திரபாதபலன்.

### அச்சுவினி.

ஆசிரிய விருத்தம்.

சீர்பெறுகோளன் சஞ்சலன்பாவி செறிந்திடும் ரூபமேயில்லான், செப்பியபிலுக்க னந்நியர்க்கன்பு செய்குவ னசுபதி முதற்கால், தார்செறிபிறரின் குணத்தினை யறிவன் சவுந்தர வானலம் புரிவன், சாத்திர முறைக்குஞ் ஞானமுட்பார்வை தருமிருகாலினிற் சனித்தோன், ஏர்பெறுகணித வித்தையிற் பிரிய னினிதுளபுத்தியே புகல்வன், இசைந்திடுமூல ரோகிநற் கரும மெண்ணுவன் மூன்றதாங்காலான், போர்செறியுடம்பு வளைவதாமதிக புத்திமான்சோதிடமறிவான், புரந்தரன்காமி சத்தியவானும் புகழுநாற்காலினி லுதித்தோன்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய குற்றம் பேசுதலும் சபலமும் பாவமும்-அழகில்லாமையும் டம்பமும்-அன்னியமானவர்களுக்குப் பிரியம் செய்தலும், அசுவனி நக்ஷத்திரமுதற் பாதத்தவர்க்குண்டு.

கூர்மையுடன் எதிரியின்மனதை யறிதலும் - சுந்தரமும் - நன்மைசெய்தலும் - சாத்திரங்கள் முறையிடும்படியான மெய்ஞ்ஞானத்தில் திர்ஷ்டியும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

அழகுபொருந்திய சோதிட சாஸ்திரத்தில் - அபிலாசையும் - இனிப்பான புத்தியைச் சொல்லுதலும்-மூலரோகமும் நற்செய்கையை விரும்புதலும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

சண்டைசெய்தலில் சோம்பலில்லாமல் தேகத்தைவளைத்தலும்-மகாவிவேகமும் - சோதிடசாஸ்திர மறிதலும் - இந்திரபோகமும்-ஆசையும்-சத்தியமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

### பரணி.

காலமாஞ்சிவப்பன் மிகுபராக்கிரமன் கனபிலனீதியுமுள்ளான், கருதலர்சிங்கஞ் செந்நிறமயிரான் காணுமேபரணியின் முதற்கால், கோலமாமானி நிபுணனும் வசியன் குணமுளன்புத்திமான்காமி, கூரியதருமசாத்திரமுரைப்பன் குலவியபரணி காலிரண்டான், சாலவுங்கோபி யுருட்சியுள்கண்ணன் றன்னியன் மானிசந்தோஷி, சற்குணனெடியோ னுகுமூன்றுங் கால் சாற்றிய பரணியாமதன்மேல், தூலதேகத்தன் கோபியாமரசர் துன்னுசேவகத்துவமுள்ளன், தூர்ச்சனன்கெருவியாகுமேபரணி தோன்றுநாற்காலினுற் சொல்லே.

(இ-ள்.) ஜெனனகாலவிசேஷம் சிவந்ததேகமும்-உத்தண்டமும்-மிகுந்த பலமும்-விபகாரமும்-சத்துருக்களை ஜெயிக்கும் கோளரிபோலும் சிவப்புரோமமும்-பரணிநக்ஷத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

அழகிய அபிமானமும்-வெகுவல்லமையும்-கிரகித்தலும்-நல்லகுணமும்-விவேகமும்-ஆசையும்-தர்மசாஸ்திரஞ் சொல்லுதலும் பொருந்திய ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

மிகுந்தசோபமும்-வட்டமாகிய கண்ணும்-எல்லாத்திறமையும்-அபிமானமும் - உத்சாகமும்-நற்குணமும்-தேகதாட்டியும் ஷை மூன்றும் பாதத்தவர்க்குண்டு.

காத்திரதேகமும்-கோபமும்-இராஜத் துவாராவில் உத்தியோகமும்-துன்மார்க்கமும்-கெர்வமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு.

## கார்த்திகை.

சொல்லுமாசாரன் வித்துவான்பிரபு தோன்றியவிலாபமுள்ளவனும், சூரனுநேசன் புத்திமான்ரோகி தோன்றிடுமாரவின் முதற்கால், வெல்லுமாசார வீனன்மானிடர்கள் வெறுத்திடுகோபமுள் ளவனும், வெற்றிசேர்பிறரைச் சேர்ப்பனூறன்னை விரும்பிடான் கார்த்திகைபிருகால், புல்லுவனரிட்ட மடந்தையர்தம்மைப் புத்தியிலான்மிகுசூரன், பொருந்திடாக் கோபி கருவிபொல் லாங்கைப் புரிகுவனுமொரு மூன்றில், அல்லுறுமிடியன் கலைபலவறியா னுமனத்தாப மேயுள்ளான், அடைந்திலான் பொறுமை துக்கவான்ரோகி யாகுநாற்காலதன் பொருளே.

(இ-ள்.) சொல்லத்தகுந்த ஆசாரமும்-வித்துவத்தன்மையும்-பிரபுத்துவமும்-நினைத்தபடி இலாபவரும்படியும்-சூரமும்-நேசமும்-அறிவும்-கிஞ்சத்ரோகமும் கிருத்திகைமுதலாம் பாதத்தவர்க்குண்டு.

அனுசாரமும்-எல்லோரும் அசங்கியப்படும்படியான மூர்க்கமும்-தான் முயற்சிபடச் சிலரைச் சேர்த்துக்கொள்ளலும்-சாஸ்திரங்களைப் பாராட்டாமையும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

கெட்ட நடைபடிப்பெண்களைச் சேர்தலும்-புத்திகுறைவும்-அதிகரூரத்துவமும்-வீண்கோபமும் - கெர்வமும் - கொடுமையைச் செய்தலும் ஷை மூன்றும் பாதத்தவர்க்குண்டு.

தரித்திரமே குடிகொண்டிருத்தலும் - படிப்பில்லாமையும்-மனவெறுப்பும்-பொறுமை யில்லாமையும்-துயரமும்-வியாதியும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## ரோகணி.

பொருளழகுள்ள னலைச்சலான்காமி புறத்தியார்க்கியற் றுவன்றுன்பம், பொறையிலான்வர்ம்மி ரோசவான்ரோகி பொருந்துரோ கணிமுதற்காலான், அருளுயர்சாந்த குணமுளான் ரோகி யான்சத்ய வாக்கியாசாரன், அமர்ந்ததோர்பெண்ணை மணப்பன்வாய்ச்சால னன்புளனுமிருகாலான், குருவருள்கணித வித்தைசங்கீதன் கூறியமந்திரன் சுகவான், குலவியபஞ்ச காவியமறியுங் கொள்கையானுகு மூன்றுங்கால்,இருளிலாத்தத்வ னங்கியருடைமைக் கிச்சைசெய் புத்தியானினிய, ஏந்திழைலோலன் ரோகணிநாற்கா லினில்வருவோன்பல னுரைக்கில்.

(இ-ள்.) நற்பொருளடைதலும் திரிச்சலும்-அவாவும்-அன்னியருக் கிடையூறு செய்தலும்-பொறுமையில்லாமையும்-மர்மமும்-குரத்வமும்-வியாதியும்-ரோகணி நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

கிருபைபொருந்திய தண்மையும்-பீடையும்-பேச்சு நிலைமையும்-சிலமும்-இல்வாழ்க்கைக்குத்தகுதியான பெண்ணைக் கலியாணம்செய்தலும்-வாக்கு ஐம்பமும்-பிரீதியும்ஷை இரண்டாம்பாதத்தவர்க்குண்டு.

ஆசாரியனுடைய கிருபையும்-கணிதசாஸ்திரமும்-கானவித்தையும்-மாந்திரீகமும் - சௌக்கியமும் - பிரகாசம்பொருந்திய பஞ்சலக்ஷணகாவியங்களை யறிதலும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

அழகுள்ளதேகமும்-பிறர்பொருளை யிச்சிக்கும் படிக்கான குணமும்-ரக்த்தியுள்ள ஸ்திரீ லோலத்துவமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## மிருகசீரிஷம்.

உரைத்திடுதனவான் சத்ருசங்கார னுதித்திடுந் தேகனுங்கோபி, உண்மையாசார வினன்ராக்ஷதனு மோங்குமான்றலை முதற்காலான், தரைக்குணல்வழக்கே யுரைப்பனுத்தேசி சாதுவாமனோகரம் பெற்றோன், சத்தியவாக்கியரிவையர்லோலன் சாற்றிடு மிரண்டதாங்காலான், உரைக்குநல்லுதார குணமுளனல்ல னுத்தமன்சாதுசந்தோஷி, உசிதவாசாரன் புத்திமான் சீமா னுற்றமூன்றும்பதத்துதித்தோன், விரைத்துறுபுத்தி சத்தியன்சாது மேவியதருமனற்காமி, வீரியன்கோபி வஞ்சகனென்றே விளம்புநாற்பாதமாமினியே.

(இ-ள்.) சொல்லத்தகுந்த திரவியமும்-சத்துரு நாசமும்-காத்திரசரீரமும்-கோபகுணமும் - சுத்தமில்லாத ஆசாரயீனமும் - ராக்ஷசத்தையும் மிருகசீரிட நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

உலகத்திற்குச் சரியான வழக்கத்தைச் சொல்லலும்-யோசித்த லும்-தண்மையும்-மனசக்துர்ஷ்டியும் - சத்தியவசனமும் - ஸ்திரீகமன மும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

பிரபலமான ஔதாரியகுணமும்-யோக்கியமும்-உத்தமநடக்கை யும்-பரமசாதுவும்-சந்தோஷகுணமும் - உச்சிதம்பொருந்திய ஒழுக்க மும்-விவேகமும்-சம்பத்கரமும் ஷை மூன்ரும் பாதத்தவர்க்குண்டு.

விரைவுள்ள புத்தியும்-சத்தியமான வசனமும்-சாந்தகுணமும் தருமமும்-ஆசையும்-வீரியமும்-கோபமும்-கபடமும் ஷை நான்காம் பா தத்தவர்க்குண்டு எ-று.

## திருவாதிரை.

இனியநல்வசன குணமுளன்மகத்மா யெவ்வன நாரியர்க்கினியன், இயலுறுநல்ல வாதிரைமுதற்கா லினில்வருங்குண த்திறனென்ப, தனியுரைவாய்சா லகனுங்கிட்டோன் நருக்கிய ன்கர்விதீக்ஷையிலான், தகுதியாய்மடவா ருடன்புணர்ந்திடுவ ன் சாற்றியபாதமோ ரிரண்டில், குனியவில்லாத ரோகமுமுள் ளோன் கோபிதண்கிருபையு மில்லான், கோளனுமஞ்சு நாரிய ர்தமக்கே குணமிலான் காலொருமூன்றில் துனியுநல்வேகி வுற வினர்ப் பகையான்ரூன்றியவீனமா மனத்தன், துர்ப்புத்தி யூத்தை யுடம்புளன்பொல்லாத் துர்ச்சனனுகு நான்கென்றே.

(இ-ள்.) இனிமையான வார்த்தையும்-நற்குணமும்-பரமாத்தும மும்-யவ்வனஸ்திரீகளுக்கிஷ்டமும்-திருவாதிரை நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

ஒப்பற்றவாக்கு தாட்டியும்-பழிபோடலும்-வாதுபேசுதலும்-கேர் வப்படுதலும்-விரதமில்லாமையும்-தகுதியான ஸ்திரீகளுடன் கமனம் பண்ணுதலும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

குனியக்கூடாத வியாதியும்-கோபமும்-சாந்தம் தயையில்லாமை யும்-கோள்சொல்லுதலும்-பெண்களுக்குப் பயப்பட்டாலும் குணமில் லாமையும் ஷை மூன்ரும் பாதத்தவர்க்குண்டு.

கோபத்தில் சுறுசுறுப்பும்-உற்ருர்பகையும் - ஈனமாகியகுணமும் துஷ்டபுத்தியும்-அழுக்கடைந்ததேகமும்-கொடுமையுள்ள துற்செய் கையும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு.

## புநர்பூசம்.

என்றுமெய்தூலப் பிலுக்கனற்போகி யிசைந்திடுசெவிட னுங்காமி, ஏனமாமயிர னிதுபுநர்பூச மாமுதற்காலினிலிசைந் தோன், துன்றியபித்த னுட்டினதேகி சோம்பலாசாரமு மில்

லான், துக்கமேமிகுத்தம் பொருந்துவனிருகா ரேன்றியநாட்ப லன் மிகவே, அன்றிறுங்குட்ட ரோகியாஞ்சாது மலைச்சலான் காரிய மறிவான், அந்தமுடடந்தரோகவான்றீர்க்க வயதுளான் பாதமூன் றதனில், நன்றினிற்பிரிய முள்ளவன்குள்ளன்வல்ல வனழகுளானென்றே, நாடியபார்வை லக்ஷணமறிவ னற்பத மறிந்துரை தனக்கே.

(இ-ள்.) ஸ்தூலதேகமும்-சளுக்கும்-நன்கு யனுபவித்தலும்-காது கேளாமையும்-ஆசையும்-பன்றிமயிரைப்போன்ற ரோமமும்-புனர்பூச நட்சத்திரம் முதலாம் பாதத்தவர்க்குண்டு.

இளைத்தபயித்தியமும்-காங்கையுள்ள தேகமும்-அசத்தியும்-அனு சாரமும்-சார்வதாய் துயரமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

ஜெனனமானபோது விளைந்த குஷ்டவியாதியும்-வெகு மேதக மும் - அலைச்சலும் - காரியந்தெரிதலும்-பலத்தபல்நோயும்-நீண்டவாயு ளும் ஷை மூன்றும் பாதத்தவர்க்குண்டு.

நன்மையான காரியத்தி விஷ்டமும்-வாமனமும்-வல்லமையும் அந்தமும்-யாவரும் நாடும்படியான பார்வையும் ஷை நான்காம் பாதத் தவர்க்குண்டு. எ-று.

## பூசம்.

தனக்கொடிமாதே சூலைகிட்டோன் றருமவான் கோபிபுத் தியுளான், தாழ்வறுந்தீர்க்க வாயுளான்றீயன் றகுமிளிர்பூசநா ண் முதற்கால், தினத்தினிற்பிரபு சர்வவியாபகனுஞ் செனங் களைத் தாபரித்திடுவான், செப்பியநிதானியன்பியர்சிநேகி சேர் ந்திடுமிரண்டதாம் பதத்தில், இனத்தினர்க்கினியன் புத்திமா ன்ஞானி யினிபசந்தோஷியானேசன், இதத்தினல்ல காரி யமுடிப்ப னெழில்பெறு மூன்றதாங்காலான், மனக்குறுசண் டை யுடையவன்கோபி வாஞ்சையானுரியர்தமக்கே, மகிழ்ந் திடுகமனன் பூசநன்னாற்கால் வரும்பலனறிந்துணர்மின்னே.

(இ-ள்.) பொற்கொடிபோன்ற பெண்ணே-சூட்டைப்பற்றியநோ யும்-நிஷ்டூரமும்-தர்மகுணமும்-கோபமும்-புத்தியும்-குறைவற்ற ஆயு ளும்-கொடுமையும் பூசநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

பிரதிநாளிலும் பிரபுத்துவமும்-சகலத்திலும் வியாபகமும்-ஜென க்கூட்டங்களைக் காப்பாற்றலும்-சொல்நிதானமும்-பிறரைச் சிநேகஞ் செய்தலும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

பந்துக்களிடத்திலிஷ்டமும்-அறிவும்-விவேகமும்-மிகுந்த சந்துஷ் டியும்-சிநேகமும்-பக்குவமாக நற்கருமஞ் செய்தலும்-அழகுபொருந் திய ஷை மூன்றும்பாதத்தவர்க்குண்டு.

தைரியமில்லாமையும்-சச்சுரவும்-சினமும்-விசுவாசமும்-ஸ்திரீகளிடத்தில் சந்தோஷமாய்ச் சேர்தலும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## ஆ யி லி ய ம்.

மின்னியதனமும் பெண்வடிவுள்ளான் மேன்புத்தியுடையன்சந்தோஷி, மிகுநலனுறு தொழில்புரிந்திடுவன் வேண்டுமாயிலியத்தின் முதற்கால், அன்னியரேவற் றொழில்புரிந்திடுவ னழகுளனேக்கமுமுள்ளான்,அசங்கியனடையன் றுர்ப்புத்தியுடைய னுயில்யங் காலிரண்டதற்கே, நன்னியற்கோபி நாரியை வதைப்பன் ஞானியாலசியனு நிபுணன், நலமிலாவார்த்தைப் பற்றவேயுரைப்ப னயமிகுபாதமூன்றதற்கே, புன்கொலைநாசம் புரிபவனசுபன் புகர்தனைச்செய்பவர்க்கினியன், புலைச்சியர்சங்கம் பண்ணுவனேயைப்புணர்ந்திடுநான்கதாங்காலே.

(இ-ள்,) பிரகாசிக்கும்படியான திரவியமும்-ஸ்திரீரூபமும்-மேன்மையான விவேகமும்-உத்சாகமும்-மிகுதியான நன்மையும்-அனேகமான காரியங்களைச் செய்தலும் ஆயிலிய நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

அயலார் இட்டவேலையைச் செய்தலும்-சௌந்தரமும்-வியாகூலமும்-ஒழுக்கங்கெட்டநடத்தையும்-துன்மார்க்கமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

இயற்கையிலே கோபமும்-ஸ்திரீகளைத்துன்பப்படுத்தலும்-தெளிதலும்-சோம்பலும்-கெட்டித்தனமும்-பிரயோசனமில்லாத வார்த்தையைப் பேசுதலும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

பொல்லாத கொலைசெய்தலும்-அமங்களமும்-புரட்டு செய்யப்பட்டவர்களிடத்தில் பிரியமும்-நீசஸ்திரீசங்கமும்-வியாதியும்ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## ம க ம்.

காலனைப்போலப் பயமுளசிவந்த கண்ணன்பேராசையான்யூகி, கருதிடுசிவந்த மெய்யினன்சேர்ந்த குஞ்சியான்மகமுதற்காலான், போலியான்புத்தி யனல்வடிவுடையோன் பொருட்செலவானசந்தோஷி, பொன்னிறக் கண்ணன் காதினேயுடையோன் பொருந்திய காலிரண்டதற்கே, சாலவும்பலவான் மிக்கநோயுள்ளான் சாதுபொல்லாதவன் கடினன், றுன்மிகவாசை யுடையவன்றாயன் றகுதிகான்மூன்றினி லுதித்தோன், சிலனுநாரி பேச்சினைக்கேட்பன் சிரங்குடனேயுமுற்றிடு

வன், சிந்தைநோயுடையோன் மதுரவாசகனுந் தெளிந்துரை நாற்பதமாமே.

(இ-ள்.) சண்டாளனைப்போல - பயந்தரும் பார்வையும் - இரத்தக்கண்களும்-பெருத்த ஆசையும்-யோசனையும்-சிவந்த நிறத்தேகமும் சிவந்தசிகையும் மகநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

போலத்தனமும்-தேகத்தில் நெருப்புக்காயமும் - திரவியச்செலவில் சந்தோஷமும்-பொன்மயம்போன்ற விழியும்-கர்னரோகமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

மிகுந்த பலாட்டியமும்-அதிகமான வியாதியும் - சாத்விகமும்-அண்டக்கொடுக்காத கோபமும்-கண்டகமும்-பேராசையும்-பரிசுத்தமும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

பரிசுத்தமும்-ஸ்திரீகளுடைய வார்த்தையைக்கேட்டலும்-புண்ணும்-சிலநோயும்-மனக்கவலையும்-தித்திப்பானவார்த்தையும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

பூ ர ம்.

ஆமெனுந்தீர னின்சொலன்கோபி யானவன் சவுரியன் சிறுவீ, டாக்கமில்லாதான் வியாபாரஞ்செய்வா னனபூரம்முதற்காலான், தாமெனுமுழவுத் தொழில்புரிகுடிஞன் முகமுங்கிலேசமு முள்ளோன், தானொருசகாயம் பிரபலனில்லா தவனென்ப விரண்டதாங்காற்கே,நாமனுங்குணவா னுகுமேன்பாட்டா னல்லதோர்கீர்த்திமானுகும், நாடியமூன்றும் பதமெனும் பொருளை நாட்டினி லுரைப்பர்நல்லோரே,தேமுறுந்துக்கங்குரவடுவுள்ளன் சொற்றிடுநிந்தையேபுரிவன், சோர்வறுமறையோர் தேவதூஷணத்தைச் சொல்லுவனுன்கெனக் கண்டே.

(இ-ள்.) தைரியமும்-மாதுரியமான வார்த்தையும்-கோபமும்-வீடுவாசலில்லாமையும்-வர்த்தகஞ் செய்தலும் பூரநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

மிகுந்த பயிர்த்தொழில் செய்யும்படிக்கான சம்சாரியும்-இல்லாமையும்-கவலையும்-உபகாரம்செய்தலில் பிரபலமில்லாம விருத்தலும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

குணக்கியமானபேரும்-மேன்மையும்-சுபகீர்த்தியும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

சார்வதாய் துக்கமும் - குருநிந்தையும்-அபாண்டம் போடுதலும் சோம்பலோக்கும் பெரியோர்களையும் தெய்வங்களையும் தூஷித்தலும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## உ த் தி ர ம்.

கண்டெனமிருது வசனனுங்கீர்த்தி கண்ணியன் றீரனிங் கிதனுங், கருதியகிளைஞர் மேன்விருப் புடையான் காணுமுத் திரமுதற் காலோன், கொண்டிடுங்கர்மி தரித்திர னூணன்கோ துறுசஞ்சலசித்தன், கூறிபசித்தம் யாசகனுகுங் குலவியவிரு பதத் துதித்தோன், அண்டிடும்பிலுக்கன் பழுதிலா வுரையா னுக்களை மேய்த்திடு மவனும், ஆனவாசார வானதாமூன்றி லாகியபிறப்புடையவனே, வண்டனுநன்றி மறந்திடான்பிற ரை மதித்திடான்றூஷணமறைவன், வாலிபந்தன்னிற் றுய்ம றிந்திடுவள் வழங்குவர் நான்கெனப்பெரியோர்.

(இ-ள்.) சொற்சுவையுள்ள மிதபாஷிணியாயும்-கீர்த்தியும்-கண் ணியமும்-தைரியமும்-இங்கிதவார்த்தையும்-பந்துக்கள்மீது சந்தோஷ மும் உத்திரநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

கர்மியும்-இல்லாமையும்-அதிகதிண்டியும்-குற்றமுற்ற சபலகுண மும்-பிரதிதினம் பிட்சையெடுத்தலும் ஷை இரண்டாம் பாதத்தவர்க் குண்டு.

டம்பமும்-பரிசுத்தமான வசனமும்-பசுமாட்டுமந்தைகளை மேய்த் தலும்-யோக்கியதையும் ஷை மூன்றும் பாதத்தவர்க்குண்டு.

போக்கிரித்தன்மையும்-ஒருவர்செய்த சகாயத்தை மறக்காமலும்- ஒருவரையும் லட்சியம் செய்யாமையும்-தூறுபேசுதலும்-சிறுபோதிலே யே பெற்றவள்சாதலும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## அ ஸ் த ம்.

பெரியதோர்கலகம் பண்ணுவித்திடுவன் பேசியபொய்ய னுங்கர்வி, பிலுக்கனுசாரன் பசுக்கடம் மிடத்திற் பிரியனுமத் தத்தின் முதற்கால், அரியதோர்குணவான் செய்தொழிலறி வா னுமதோர் வாலிபந்தன்னில், அன்னைபோம்பாட்டோ டா டவிற்பிரிய னதியுரை யுடையனு மிரண்டில், தரியலர்போல மனத்தினுன்றந்தை தானறுஞ் சிறுவயததனில், தந்திரவாதி ரோகியாபாரி சார்ந்திடுமூன்றதாங்காலான், உரியநன்னடை யா னீகையானெடியோ னேதுசந்தோஷவானுகும், உசிதனு மன்னைக் கினியன்மெய்க்கீர்த்தி யுடையனுற்காற்பலனறியே.

(இ-ள்.) பிரபலமான கலகத்தை உண்டுபண்ணுதலும்-பொய்வா ர்த்தைப் பேசுதலும்-ஆங்காரமும்-ஜம்பமும்-சுசியும்-காலிமாடுகளிடத் திற் பிரியமும் அஸ்தநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

அரிதானகுணமும்-செய்யுந்தொழிலில் திறமையும்-சிறுவயதில் பிதாயிறந்திடுதலும்-ஆடல்பாடலில் சந்தோஷமும்-அதிகமாய் வார்த்தையாடுதலும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

சத்துருவைப்போல மனதைக் காட்டலும்-இளம்பிராயத்தில் தகப்பன் சாதலும்-சூதும் பீடையும் வாணிஜ்ஜியமும் ஷை மூன்றாம்பாதத்தவர்க்குண்டு.

ஒப்பத்தகுந்த நன்மார்க்கமும்-உதாரத்துவமும்-உயரமும்-சந்தோஷகுணமும்-அபூர்வமான செய்கையும்-தாய்சொற்றவறாமையும்-புகழுடலமும் ஷை நாலாம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## சித்திரை.

அறிந்திடாப்பொல்லாக்காரியம்பண்ண வறிகுவனேத்திரரோகி, ஆக்குவான்வியாக்கி யானஞ்சஞ்சாரி யாகிடுஞ்சித்திரை முதற்கால், பெறுந்தனிவசனன் றேகபோஷணேயான் பெருமிடியாமெனடி யோனும், பேணியதபசிசஞ்சலமெனன்றே பேசுவர் மாசிலாரிரண்டால், செறிந்திடுங்கீர்த்தி மான்பராக்கிரமன் றிட்டுறும் வித்துவான்ஞானி, செப்புநன்னடையோ னறிவுடையாளன் றிரிபதமதிலுதித்தோனும், எறிந்திடும்பகைவர் தமைமடக்கிடுவ னியல்புத்தியான்சய முள்ளான், ஏதமற்றிடு நாற் காலினுக்கென்றே யியம்புவர் மேன்மைபெற்றோரே.

(இ-ள்.) அறியக்கூடாமல்பொல்லாங்கான காரியஞ்செய்ய உபாயந் தெரிந்திருத்தலும்-நேத்திரரோகமும்-மொழிபெயர்த்தலும்-தேசசஞ்சாரமும் சித்திரை நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

ஒருவருடைய போதகத்திற் கெதிர்பாராமல் பேசுதலும்-சரீரத்தை நன்றாய்காப்பாத்தலும்-வெகுதரித்திரமும்-உன்னதமும்-தபசிரேஷ்டமும்-வியாகூலமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

பிரபலமான கீர்த்தியும்-வெற்றியும்-தேர்ந்தவித்வத்தன்மையும்-அறிவும்-நற்குணமும் - நற்செய்கையும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

எறிந்துபேசப்பட்ட சத்துருக்களை வசியம்பண்ணுதலும் - இயற்கையில் விவேகமும்-விஜயமும்-குற்றமற்ற ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## சுவாதி.

பெற்றிடுதீரன்சொப்பனன்ஞானி பிரபுவையடைந்தினிதிருப்பன், பெருமைசேர்வித்தைப் பிரசங்கிசாது பேசியசோதியின் முதற்கால், உற்றநற்றிடவா னுரும்வாய்ச்சால னுத்தி

மான்காரியவாதி, உண்மையானந்த ரங்கவான்காமி யோதுகா லிரண்டதாம் பலனே, வெற்றிவிற்றெழிலன் குரூரனுங்குடிலன் மேவுநன்னடையிலான்கலக, மியத்துவான்சோதி விளம்புமூன்றாகு மெனும்பதத் துதித்திடுவோனே, சொற்றிறன் கோபி கலகமேற்பிரியன் றூர்ச்சனன் சீலவான்காமி, சோரனு நான்காம் பதத்தினிலுதித்தோன் றோற்றியவடிவமைத் தோளாய்.

(இ-ள்.) சுபாவத்தில் தைரியமும்-கனவுகாணலும்-தெளிந்தஞானமும்-மகாப்பிரபலவான்களைச் சிநேகஞ் சேர்ந்திருத்தலும் - சிறப்பு பொருந்திய கல்வியும்-பிரசங்கதாட்டியும்-சாத்விகமும் சோதிநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

வலிமைபொருந்திய சரீரமும்-வாக்கு சாதுரியமும்-விவேகமும் காரியத்தில் ஜாக்கிரதையும்-நிலைமையும்-ரகசியமும் - ஆசையும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

வல்லமைபொருந்திய வில்வித்தையும்-கொடுமையும்-விஷமும் நன்மார்க்க மில்லாமையும்-கலகப்பிரியமும் ஷை மூன்றும் பாதத்தவர்க்குண்டு.

சொல்நிலைமையும் - ஆத்திரமும்-விகல்பம் செய்வதில் பிரீதியும்-துன்மார்க்கமும்-சீலமும்-சந்தோஷமும்-சோரமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## விசாகம்.

அமைத்திடுவஞ்சன் கல்விமானுரு மறிவன்சோதிடஞ்சவுக்கியவான், அறிவுறுபுலவன் வாணிபம்புரிவா னுரும்மெவிசாகத்தின் முதற்கால், தமைப்புகழ்ந்திடுவன் மந்திரன்காமி சத்தியனீதிமான்ரோகி, சரசவானுஞ்சந் தோஷியிங்கிதவான் சாற்றிருகாற்பல னென்பாய், இமைத்திடுபிலவான் சோரனுங்குள்ள னினியகாரியமறிந் திடுவன், எழில்பெறும்பரஸ்திரீகமனன்வாய்ச்சாலனேதமின் மூன்றதாங்காலான், அமைப்பெருப்புத்தி யுடையனும்யோகியருந்தன முடையவன்ஞானி, அழகுறுந்தாரமொன்றுளனெடிமயா னுரும்வாய்ச் சாலனுற்பதமே.

(இ-ள்.) வஞ்சகநிறைவும்-படித்ததன்மையும்-சோதிட சாஸ்திர மறிதலும்-ஆசோதையும்-கல்வித்திறமும்-வியாபாரஞ் செய்தலும் விசாகநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

தன்னைத்தான் புகழ்ந்துகொள்ளுதலும் - மந்திரவித்தையும்-அபிலாசையும்-நிலைமையும்-நீதியும்-பிணியும்-விளையாட்டும்-வேடிக்கையும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

பார்வைக்குப் பலமும்-சோரத்தனமும்-குள்ளமும்-உபாயமாய்காரியத்தை கிரிகித்தலும்-அழகிய பெண்களைப் புணர்தலும்-வாயாடுதலும் ஷை குற்றமற்ற மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

அமைந்த விசாலமான புத்தியும்-அவஞாதித்தன்மையும்-அரும்பொருளுடைத்தாயிருத்தலும்-கியானமும்-சௌந்தரமான வொரேமனைவியும் - உயரமும் - வாக்குதாட்டியும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## அ னு ஷ ம்.

பதமுளனீதி யிங்கிதமறிவான் பண்புறுசத்தியவானும், பகருமாசாரன் மந்திரசீலன்பற்றிய வனுஷநாண்முதற்கால்,—இதமுளபுள்ளாங் குழலினிற்பிரிய னிசைந்தவாய் சாலனும்புத்தி, எய்தியசிறப்பன் மானிகாமியனு மிருபதப்பொருளென வுரைப்பர்,—விதமுளபுத்தி மான்சவுந்தரியன் மென்குரலோசையா னெழுதும், வித்தைசாதுரியனெடுப்புளோனென்றே விளம்புமூன்றாம்பாதத்திற்கே,—அதஞ்செயும் விஷவாக் கன்பரத்துரோக மன்னியதமயர்களுள்ளா, னன்புறுமோசை நாணமுமுடைய னவிர்சிரங்குடையனுந்தெரியே.

(இ-ள்.) மேலானபதமும்-விவகாரமும்-பக்குவமறிதலும்-மேன்மை பொருந்திய பிரமாணமும்-விரதமும்-மாந்திரிகமும் - ஒழுக்கமும் அனுஷநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

இன்பமாகிய நாதசுரங்களில் பிரியமும்-பொருந்தியவாக்கு ஜாலமும்-புத்தியில் விசேஷமும்-அபிமானமும்-காமாதுரந்தரமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

பகுற்றறிவும்-சுந்தரமும்-மிருதுவாகிய குரலோசையும்-எழுத்துவகையில் சமத்தும்-எடுப்புள்ள யுத்தியும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

நாசத்தைக்கூறும் அறவாக்கும்-பரமாத்தும துரோகமுள்ள அண்ணன்மார்களும்-இனிப்புள்ள கண்டத்தோசையும் - வெழ்க்கறையும்-புண்வியாதியும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## கேட்டை.

தெரிந்துதானெழுத வல்லவன்கர்வி செயும்பரி காசியர் சாந்தி, செறிவிளையாட்டு நடக்கைசந்தோஷி சீர்மிகுங்கேட்டையின் முதற்கால்,—பொருந்துசங்கீதப் பிரீயன்வாய்ச்சாலி புகழுநல்லீகையான் சுகவான், போகிகன்மனத்தன் ரோகியா மென்றேபுகலுவ ரிரண்டதாங்காலே,—திருந்துகண்ரோகிபசு

வுளன்கலகன் செப்பியவினைபுத்தியினன், செய்குவன்பிறர் காரியந்தனதென்றே சீர்பெறுஞ்சாதுமூன் றாங்கால்,—வருந் திடுங் கலகப் பிரியன்முன்கோபி வஞ்சகன்குரூரமே புரிவன், வந்திடுங்குலத்தின் மென்மைகூறிடுவன்மன்னியவிரிருதாளே.

(இ-ள்.) என்றுயோசித்து எழுதுந்திறமும்-கெர்வமும்-குசோத்தியமும்-பிரகாசமான விளையாட்டு நடைபடியும்-உல்லாசமும்-சிறப்புப் பொருந்திய கேட்டை நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

பொருந்திய நக்கின்ற கீதங்களிடத்தில் விஷ்டமும்-வசனசமத்தும் பெருமையும்-கேட்டதைக்கொடுத்தலும்-சுகவாசமும்-போகமும் - கடினமனதும்-வியாதி பீடிதமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

திருத்தமுள்ள நேத்திரத்தில் வியாதியும்-பசுமாடு விர்த்தியும்-கிள்ளிவிட்டு கூத்துபார்க்கலும்-இலேசான விவேகமும்-ஒருவருடைய காரியத்தைத் தன்காரியம்போலச் செய்தலும் - அமரிக்கையும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

ஒருத்தர் வருத்தப்படும்படிக்கான சண்டையை மூட்டலும்-முன்கோபமும்-கபடமும்-பொல்லாங்கும்-தன்னுடையவமிசப்பரம்பரைப் பெருமையை எடுத்துப்பேசுதலும்ஷை நான்காம்பாதத்தவர்க்குண்டு.

மூலம்.

தானுறுமுணவிற்கிழங்கின்மேற்பிரியன் க்ஷாத்திரம்பாபமேபுரிவன், தாழ்விலாரோகியுன்மத்தனென்றே சாற்றுவர் மூலநான்முதற்கால்,— வானுயர்புலமை வயிற்றினோயுடையோன் வாய்மையும்புத்தியுமுளனும், வளமுடைமானிபக்ஷமுள்ளவனு மருவுகாலிரண்டினில் வந்தோன்,—ஈனமாம் பில்விசூனியமறிவா னெழிலுளான்சோம்பலான்காமி, இனியநற்கனிமேற் பிரியனுமூன்றி லெண்ணிபபலமிஃதென்ப,—கோனெனும்பலவா னிபுணனுஞ்சாது கோபமேநீக்குவன்ஞானி, கூறுசத்துருவை யடக்குவன்கழுத்திற் கொண்டநோயுளனதனீறே.

(இ-ள்.) தான்சாப்பிடும்படியானத்தில் கிழங்குதினுசுகளைப் பிரியமாய்த் தின்றலும்-கோபமும்-பாபகாரியங்களைச் செய்தலும் - குறையாத வியாதியும்-உன்மத்தமென்ற பயித்தியமும் மூலநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

பிரக்கியாதியான புலமையும்-குன்மவியாதியும் - நிலைமையும்-வி[illegible]கமும்-வளப்பம்பொருந்திய மானமும் - அன்பும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

ஈனத்தொழிலாகிய சூனியவித்தை யறிதலும்-அழகுண்டாயிருத்தலும்-அசதியும்-இனிப்பான பழவர்க்கங்களின்மேல் பிரீதியும் ஷ மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

மிகுந்தவலிமையும்-அதிகசாமர்த்தியமும் - சாந்தமும் - ஆத்திரத்தையடக்கலும்-கியானமும்-சத்துருக்களை யதஞ்செய்தலும்-கண்டமாலையாதியும் ஷ நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## பூராடம்.

ஈறிலாவணக்க முடையவன்சேயோ விலாதவன்விகாதமேபுரிவன், இயம்பிடுசூரன் மத்திபவயதாமென்பர் பூராடத்தின்முதற்கால்,—பேறுறும்யோகி சவுந்தரியோனும் பெட்புறுஞ்சிநேகிதமில்லான், பேதையன்வேசை கமனனென்றுரைப்பர் பெரியவரிரண்டதாங்காற்கே,—மாறிலாச்சுகவான் பாக்யவான்மாதா வாலிபந்தன்னிலேமரிப்பள், வளர்பெருநோயன் குணமுளன்றெளிவன் மன்னியமூன்றதாங்காலே,—வீறிலான்முதுகி ஞேயுளன்றிருடன் விளம்பபவாதவான்பலவான், மேவியதுரோகி சிறுவயதிற்சாம் விளம்பியதந்தைநாற்காற்கே.

(இ-ள்.) கெடுதலில்லாத மரியாதையும்-புத்திரவீனமும் - விகாதம்பண்ணுதலும்-வீம்பும் - மத்திமவயதும் பூராடநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

மோக்ஷமடைதற்கான தவசும்-அழகும் - நற்சிநேக மில்லாமையும்-அறியாமையும்-வேசியாஸ்திரீகளைப் புணர்தலும் ஷ இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

மாறுதசுகமும்-சௌபாக்கியமும் - இளம்பிராயத்தில் தாயிறத்தலும்-பெருத்தவியாதியும் - நல்லகுணமும்-தேர்ச்சியும் ஷ மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

தனிமையுள்ள முதுவில் நோயும்-திருடலும்-சோரமும்-நிந்தையும்-பலிஷ்டமும்-அபகரிக்குங் குணமும்-சிறுபோதிலேயே தகப்பன் இறந்துபோதலும் ஷ நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## உத்திராடம்.

ஏரியனல்ல புத்திமானீகை யான்றருநூல்பல வறிவன், ஏதிலாதாசான் றனையுபசரிப்ப னெனப்புகலுத்திராடத்தின்,—ஓரதாங்காலி லுயர்பெருவாக்கி லோபியாம்பிலுக்கனற்றிடவான், உசிதமாய்கருமம் ராஜ்ஜியத்தியற்று முயரிரண்டாகிய காற்கே,—கூரியகர்வி பெருமொழியாளன் குருரோணங்கலங்கினமனதான், கோபியாந்தூல வடிவுளனென்றே கூறுமூன்

றென்றதோர்காற்கே,—வீரியனல்லதன்மமேமுடிப்பன் விசே ஷகாரியமுளான். லோக,வேபாரமுடையன் பந்துமேற்பிரியன் வேண்டியநாற்பதம்வந்தோன்.

(இ-ள்.) அழகிய விவேகமும்-உதாரகுணமும்-தகுதியான பல சாஸ்திரங்களை யறிதலும் - குறைவில்லாமல் ஆசாரியனை உபசாரஞ் செய்தலும் உத்திராட நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

உயர்ந்த பிரபலபிரசங்கமும்-உலுத்தத்தன்மையும் - ஜம்பமும்-தா க்ஷிணகமும்-விநோதமாகிய செய்கைகளைச் செய்தலும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

கூர்மைபொருந்திய கர்வமும்-மிகுதியான வார்த்தையும்-விஷமி யும்-மனக்கிலேசமும்-ஆத்திரமும்-பருத்தவுடலும் ஷை மூன்றும் பாத த்தவர்க்குண்டு.

வீரமும்-நல்லதர்மத்தை முடித்தலும்-விசேஷமான காரியங்களு டைத்தாயிருத்தலும்-உலகநடத்தை தெரிதலும் - பந்துக்களிஷ்டமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## திருவோணம்.

வந்திடும்புத்திமானுடல்பெருத்தோன் மைந்தரில்லான் போகவானும், மன்னுமுற்சாகி கலகவான்கர்வி மாந்திருவோ ணத்தின் முதற்கால்,—சந்ததம்பிர்மக் ஞானியாங்காமிதயவி லான்மேலாபியாஞ்சிநேகந், தானிலானென்றே சாற்றுவரிரண் டதாகியகாலதாம்பலனே,—தந்திடுங்காமிரோகிநற்போகி தன முளன்மெத்தவுதாரன், தயவிலானென்றே யுரைத்திடுவார்க டரும்பதமூன்றினின்பயனே,—சிந்தாநுதல்வே சையர்வுருப் புடையன் சிலனுந்தருமவான்றியாகி, சிறப்புளன்றனவான் பி பிரிடுவோனுஞ் செய்யுநாற்கால்பலவகையே.

(இ-ள்,) விவேகசாலியும்-காத்திரதேகமும் - மக்களில்லாமையும்- சம்பிரமமும்-சந்தோஷமும்- சண்டைமூட்டுதலும்-ஆங்காரமும் [illegible] வோண நட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

சார்வதாய் பிர்மக்கியானமும் -காமமும் - கிருபையில்லாமையும்- உலோபத்வமும் - நேசமில்லாமையும் ஷை இரண்டாம்பாதத்தவர்க்கு ண்டு.

காமவாஞ்சையும்-வியாதியும்-நல்லபோகமும்-திரவியமும்-மிகுந் தயிகையும்-தாக்ஷண்ணிய மில்லாமையும் ஷை மூன்றும் பாதத்தவர் க்குண்டு.

நெற்றியில் சிருங்காரமாகத் திலதமிடுதலும் - வேசியாஸ்திரீகள் மேல் கமனமும்-ஆசாரயோக்கியமும்-தானதர்மமும்-உதாரத்துவமும்-கன்னியமும்-அயிஸ்வரியமும்-வெள்ளாண்மையும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு எ-று.

## அ வி ட் ட ம்.

வகையிலான்காமி பசிபொருன்மனதில் வசையுறுகிலேசனிட்டேரன், வளம்பெறுதூல சரீரவான்கரியன் மருவியவிட்டத்தின்முதற்கால்,— தகையிலான்மனதிற் பேதகமுடையான் சத்தியன்புத்திமான்மிடியன், க்ஷாத்திரவாதியூக்கமுள்ளோனுந் தருமவானிருபதமென்ப,—திகைசெறிகுணவான் குறுகியமெய்யன் சோர்ந்திடுதிடமுளன்மானி, செப்புநன்னடையான் செந்நிறவானுந் தெரிந்திடுமூன்றதாங்காலில்,—தொகைமிகுதனவான் குரூரனுந்தூல தேகவான்கர்விபேதகனும், துலங்கியரோம வழகுடையோனுஞ் சோர்வறுநாற்பதந்தொட்டோன்.

(இ-ள்.) வழியில்லாமையும்-காமமும்-பசிதாளாமையும்-மனதில் குடிலமும் - சஞ்சலமும்-நிபஞ்சொல்லுகையும்-வளப்பம் பொருந்திய பருத்ததேகமும்-கரியநிறமும் அவிட்ட நட்சத்திரமுதலாம் பாதத்தவர்க்குண்டு.

பெருமையில்லாமையும்-மனதில் வேற்றுமை நினைத்தலும்-உண்மையும்-அறிவும்-தரித்திரமும்- அடஞ்செலுத்தலும்-தைரியமும்-தருமச்சிந்தையும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

கீர்த்திபொருந்திய குணமும் - குட்டையாகிய சரீரமும்-கெட்டியான மனதும்-அபிமானமும்-நன்மார்க்கமும்-சிவந்தநிறமும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

விசேஷதனமும்-குரூரபுத்தியும் - காத்திரதேகமும்-ஆங்காரமும் வேற்றுமையும் மயிரழகும் ஷை நான்காம்பாதத்தவர்க்குண்டு எ-று.

## ச த ய ம்.

தொட்டநற்குணவா னழகுளானுதாரன் சுசியனும்விப்பிரர்மேலும், துலங்கியபசுக்கண்மேலுநற்பிரியஞ்சொர்ணமும் சதயமொன்றுங்கால்,—பொட்டெனக்கோப முடையவன்கிலேசி பொருந்துநற்பேதகம் புரிவான், புநிதமதில்லா னிழிகுலந்தன்னிற் பொருந்துவனிரண்டதாங்காலே,—பட்டுநற்கருமம் பொறுத்துடன்முடிப்பன் பசியுளன்வயிற்றினோயுள்ளான், பண்புடன்பித்தன் சேவகாவிருத்தி பண்ணுவன்மூன்றதாம்பதமே,—நட்டினையுணர்வனுத்தேசிமாமானி நாடியகாரியமுடி

ப்பன், நல்லவன்சுகவானுற்பதமென்றே நவின்றனர்நான்மறை யோரே.

(இ-ள்.) மிகுந்த நற்குணமும்-சுந்தரமும்-தாதுருத்வமும்-ஆசாரமும்-பிராமணர்களிடத்திலும் - பசுக்களிடத்திலும் - மிகுந்த விசுவாசமும்-பொருள்சேர்த்தலும்சதயநட்சத்திரமுதலாம்பாதத்தவர்க்குண்டு.

அடிக்கடிகோபமும்-சஞ்சலமும்-வித்தியாசமும்-சுசியில்லாமையும்-ஈனருடைய சகவாசமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

சரீரபிரயாசைப்பட்டு நினைத்த காரியத்தை நிறைவேற்றலும்-பசியும்-வயிற்றுவலியும்-பித்தமும்-உத்தியோகவிர்த்தியும் ஷை மூன்றாம்பாதத்தவர்க்குண்டு.

கூத்தாட்டிற் பிரீதியும்-யோசனையும்-அண்டினபேரிடத்தில் இஷ்டமும்-எண்ணியகருமத்தை முடித்தலும்-நல்நெறியும் - சௌக்கியமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டு, எ-று.

## பூரட்டாதி.

மறையவன்பரந்த முகமுளன் பலவான்மனைவிமேற்பிரியன்போர்புரிவன், மதியுணர்வுடைய னுத்தேசிசுகவான் மன்னுபூரட்டாதிமுதற்கால்,—இறையவன்சிரேஷ்ட மந்திரமறிவனிளைத்திடான்மனதுமேயொல்கி, எவர்க்குமே வணங்கிக்காரியமுடிப்போ னிருபதஞ்சதுர்ஷ்டிமானும்,—பொறையுளானல்ல நடையுடைப்புலவன் பிறர்மனைப்போசனப்பிரியன், போதஞ்செய்பித்த ரோகியனுகும் புத்திமான்பேசிடுமூன்றில்,—தறைபுகழ்குணவான் சத்தியனழகன் றாழ்வறுசினேகிதப்பிரியன், சற்றெருழிற்புரியுஞ்சுகமுளன்சீமான் சாற்றுநாற்பதமுறுநாடே.

(இ-ள்.) பிராமணீகமும்-விசாலவதனமும்-திடதேகமும்-பெண்சாதியிடத்தி லிஷ்டமும்-சண்டைசெய்தலும்-நன்குணமும் புத்திவிசாலமும்-ஒன்றின்மேல் நாட்டமும் - சுகமும் பூரட்டாதி நட்சத்திரமுதலாம் பாதத்தவர்க்குண்டு.

இராஜத்வமும்-மேலான பீஜாக்ஷர மந்திரந்தெரிதலும்-பின்னுக்குவாங்காதகுணமும்-மனந்தாழ்ந்து எவர்களுக்கும் வணக்கமாக இருந்து காரியத்தை நடத்திக்கொள்ளுதலும் ஷை இரண்டாம்பாதத்தவர்க்குண்டு.

பொறுமையும்-நன்னெறியும்-புலமையும்-அசலார்வீட்டில் அதிகமாச்சாப்பிட - ஆசைகொள்ளலும் - வித்தைபோதித்தலும்-பைத்தியவியாதியும்-விவேகமும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

உலகங் கொண்டாடத்தகுந்த கீர்த்தியும்-பிரமாணமும்-சௌந்தரமும்-மேன்மையானவர்களைச் சிநேகம் செய்தலும் நற்கருமஞ்செய்தலும்-சுகமும்-லட்சுமீகரமும் ஷை நான்காம் பாதத்தவர்க்குண்டாம்.

## உத்திரட்டாதி.

நாடொறுங்கோபி சஞ்சலன்ருதா நாடினவுடம்பினின் மயிரன், நலம்பெறுசிரேட்டன் பிரதானனென்றே நவில்வருத்திரட்டாதிமுற்கால்,—நீடுறும்ரோஷக் காரனுஞ்சாது நிறைந்திடுமிடியனற்குணவான், நிலைத்தனன்னடையா னறிவுளானென்றே நிகழ்த்துவிரண்டதாங் காற்கே,—கோடுறுபுத்தியிலான் பத்திமான்முன் கோபிசந்தோஷிசெம்மயிரன், கோளனுமூன்ருங் காற்பலனென்றே கூறுவர்மறையுணர்புலவர்,—பீடறுஞ்சொற்கேட் பவன்மிகவாடும் பேதியானுதாரனற்பயிரைப், பேணுவான்கோபி கிலேசவானுகும் பெட்புநாற்கால்பலன்றேனே.

(இ-ள்.) நாள்தோறும் ஆத்திரமும் - வியாகூலமும் - தேகமெல்லாம் ரோமமும்-அக்கிரகண்ணியமும்-பிரதானமும்-உத்திரட்டாதி நட்சத்திரமுதலாம் பாதத்தவர்க்குண்டு.

நீண்டரோஷமும்-சாத்மீகமும்-தரித்திரமும்-நல்லகுணமும்-நிலைபெற்ற நன்மார்க்கமும்-விவேகமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

குற்றமற்ற விவேகமும்-பத்தியும் - முன்கோபமும்-உத்சாகமும்-செந்நிறம்பொருந்திய ரோமமும் - ஒருவர்பேரில் குற்றஞ்சாற்றுதலும் ஷை மூன்ரும்பாதத்தவர்க்குண்டு.

துப்பற்ற கெட்டவார்த்தையைக் கேட்கலும்-மனவாட்டமும்-மனம் பேதிக்காதலும் - ஔதாரியமும்-விவசாயமும்-கோபமும்-ஆகுலமும் ஷை நான்காம்பாதத்தவர்க்குண்டாம் எ-று.

## இரேவதி.

தேன்மொழிகலகப் பிரியனுநிபுணன் செறிகுணவித்துவான்யாண்டும், செப்பியகிலேசி பிரியமுமுள்ளான் றிடம்பெறுரேவதி முதற்கால்,—தானெனுஞ்சோரன் றீரமாமனத்தன் சவுக்கியன்கோபிநற்காமி, சஞ்சலன்மிருதுவாஞ்சரீரத்தன் ருனிருகாற்பலனென்றே,—பான்மொழிபுத்தி யிலாதவன்பாவிபடிறனே தனமிலானுகும், பரிந்திடுமுதாரன் குணமிலானென்றே பகருமூன்ரும்பதமதற்கே, நானெனுந்தீரன் சத்தியவா

க்கி நவின்றிடுங்குலத்தினிற்கேடன், நாடியசுகவான்சத்ருசங் க்கார னலம்பெறுசூரனூற்பதமே.

(இ-ள்.) இனிப்பானவார்த்தையும்-கலகஞ்செய்தலும்-மிகுந்தவ ல்லமையும் - நிறைந்த நல்லகுணமும்-பாண்டியத்தியமும்-சார்வதாய் கிலேசமும்-உவப்பும் ரேவதிநட்சத்திர முதலாம் பாதத்தவர்க்குண்டு.

திருட்டுப்பட்டமும்-உறுதியான மனசும்-சுகமும்-அவசரப்படுதலு ம்-மிகுந்த ஆசையும்-வியாகூலமும்-மெலிந்ததேகமும் ஷை இரண்டாம் பாதத்தவர்க்குண்டு.

வெள்ளைச்சொல்லும்-அறிவில்லாமையும்-பாபமும்-திருட்டுத்தன மும்-காசில்லாமையும்-எல்லாக்காரியத்திலும் முயலுதலும் - ஈகையும் குணக்கேடும் ஷை மூன்றாம் பாதத்தவர்க்குண்டு.

தன்னைத்தானே தயிரியசாலியெனச் சொல்லுதலும்-சொல்நிலை யும்-பிறந்தகுலத்திற்குக்கேடும்-தன்மட்டும் சவுக்கியமும்-பகையாளிக ளைத்தும்சம் செய்தலும்-வீரமும் ஷை நான்காம்பாதத்தவர்க்குண்டாம்.

---

## நவக்கிரக திசாபுக்திபலன்.

பூமேவுங்கார்த்திகைமுன்-பூரமளவுங்கிரகந்
தாமேவுவாரிரவிசந்திரனுங்-கோமளஞ்சேர்
அங்காரகன்கருங்கோ-ளானகுருமந்தன்புத
னுங்கேதுசுக்கிரனுகும்.

(இ-ள்.) இலக்ஷ்மீகரம்பொருந்திய - கிர்த்திகைநக்ஷத்திரமுதல் பூரநக்ஷத்திரம் வரையிலுள்ள நாள் ஒன்பதனுள் கிரமமாக ஒவ்வொன் றில் பொருந்திவருங் கோள்களாவது சூரியன் - சந்திரன் - அழகுபொ ருந்திய செவ்வாய் - இராகு - குரு - சனி - புதன் - கேது - சுக்கிரன்- என்பதாம் எ-று.

இன்னவகைநட்சத்-திரமிருபானேழையுமுன்
சொன்னபடியே-தொகுத்தறிவா-யன்னவகை
யுத்திரம்பூராடமட்டு-முத்திராடம்பரணி
யித்திறமுன்சொல்கிரகமே.

(இ-ள்.) இந்தவகைக்கு - நக்ஷத்திரம், இருபத்தேழையும்-முன் கூறியபடி சேர்க்கத்தெரிந்துகொள்ள,எவ்வாறெனில்-உத்திர நக்ஷத்தி ரமுதல் பூராடநக்ஷத்திரம்வரையிலும், நாள்-கூ, உத்திராடநக்ஷத்திர முதல் பரணிநக்ஷத்திரம்வரையிலும், நாள்-கூ, இவற்றில் ஒவ்வொரு கோளும் முன்போல்பொருந்தி வருமாதலால் மாந்தரில் ஒவ்வொருவ

ருடைய ஜென்மநக்ஷத்திரம், எதுவாகுமோ - அதற்குரியகோள் முன் சொன்ன திசைக்கிரகமாமென்றறிந்துகொள்க வென்பதாம் எ-று.

பானுமுதற்சுக்கிரன்பின்-பானநவக்கிரகந்
தானிருந்துவாழ்வு-தரும்வருடம்-மாநிலத்தோர்
கேட்டுவப்பர்சாலக்-கிருபையினலித்தொகையை
நாட்டமுடன்சொல்லுகின்றேனன்.

(இ-ள்.) சூரியன்-ஆதியாகவும், சுக்கிரன்-அந்தமாகவும், கோள்ளில் ஒன்பது கிரகங்களாகும். இவர்கள் பலன்கொடுக்கும் ஆண்டளவை இதனடியில் யான்-சங்கியத்தொகையாகச் சொல்லுகின்றபடியால் - உலகத்திலுள்ளோர் - என்மீதுமிகக்கிருபைவைத்து கேட்டு சந்தோஷிப்பார்களென்பதாம் எ-று.

சுவைவாயுவாரி-தூய்புராணம்மிந்
திவன்கலைஸ்மிருதி-யின்னும்-புவியில்
புனைபேர்விகுதி-புயல்ராவணன்கை
எனவிஃதுநூற்றிருபானே.

(இ-ள்.) சுவை-சு, வாயு-கo, வாரி-எ, புராணம்-கஅ, சந்திரகலை-கசு, ஸ்மிருதி-கரு, பெயர்விகுதி-கஎ, புயல்-எ, இராவணேச்சுரன்கை-உo ஆககூடியதொகை ஆகஉo, ஆகையால், இஃதுநவக்கிரகங்களின் திசைவருஷங்களாகுமென்பதாம் எ-று.

ஒந்தோர்மஹாதிசையி-லொன்பதுகோளும்புசிக்க
வந்தேயிருக்க-வகையறிய-அந்தத்
திசையாம்வருடத்தைச்-சேர்த்துவருமுன்
றிசையினலேபெருக்கல்செய்.

(இ-ள்.) உவந்து ஒவ்வொருகோளின்திசையில் - அந்தக்கிரகமுதலிய நவக்கிரகங்களும் பலனைப்புசுந்துண்ணவந்திருக்கும். புத்திப்பிரிவாவது - முந்திவருங்கிரகத்தின் திசைவருஷத்தொகையைப் பிந்திவருங்கிரகத்தின் திசைவருஷத்தொகையைக்கொண்டு மாறவேண்டுவதென்பதாம் எ-று.

கண்டதொகையைக்-கருதிமகாதிசைகள்
கொண்டவருடத்தொகையிற்-கூறிடத்து-உண்டதொகை
தானேபுசிப்பந்தத்-தன்மைபோலெத்திசைக்குங்
கானேர்குழலணங்கேகாண்.

(இ-ள்.) முன்மாறின மொத்தத்தொகையை-மகாதிசையின் வருஷத்தொகையாகிய கஉoஐ - கொடுக்க, உண்டாகிய ஈவுதானே,

அந்த அந்தக்கிரகத்தினுடைய புக்தியளவாகும். அத்தன்மைபோலவே, எந்தக்கிரகத்தின் திசையாண்டாலும், எந்தக்கிரகத்தின் புக்தியையும் பார்த்துக்கொள்கவென்பதாம் எ-று.

தக்கதிசையும்புசிப்புந்-தானறியும்வாறிதுவே
மிக்கதிசைமூன்றுவிதமுண்டா-மொக்கவவை
சாற்றுங்காலந்தரந்-தான்சூக்ஷமம்பின்னும்
ஈற்றிற்பிராணதிசையே.

(இ-ள்.) திசைப்பிரிவும் - புக்திப்பிரிவும் - அறியத்தக்கவகை இதுவேயாம். பின்னும், மூன்றுவகைப்பிரிவுகளிருக்கின்றன. அவைகளில், அந்தரப்பிரிவு - சூட்சுமப்பிரிவு, கடையாகிய பிராணப்பிரிவாம் - அவற்றிற்கும் இவ்வடைவே மாறியீதலென்பதாம் எ-று.

இந்ததிசைமுன்-னியம்புந்தொகையாலே
சிந்தைகளிகூர்ந்து-தெளிவாகச்-சந்ததமும்
பார்க்கும்பெரியோர்கள்-பாதாம்புயமலரைச்
சேர்க்குந்தமியேன்சிரம்.

(இ-ள்.) இதுமுன் கூறிவந்த கணக்கைக்கொண்டு மனோச்சாகத்தினாலே - தெளிவுறச்சதாகாலமும், விசாரணை செய்யும்படியான மேதாவிகளுடைய பாததாமரையை எனது சிரத்தின்மீது அணிவேனென்பதனால் அவர்களுடைய ஆசீர்வாதம்பெற்று இந்நூல் இடையூறின்றி முடியுமென்று வணக்கம் செய்யப்படுமென்பதாம் எ-று.

கூறும்பலனைக்-கொடுமென்போன்போதகனும்
வேறுபண்ணிதட்டிவைப்போன்-வேதகனுந்-தேறுபலன்
கூட்டிவைப்போன்பாசகனுங்-கோலமஹாதிசையி
லீட்டுபொருள்காரகனீவான்.

(இ-ள்.) ஒவ்வொருகோளின்திசையில்-வரும்புக்திக்கிரகங்களில் தனது பாகப்பலனைக் கொடுக்கச்செய்யுங் கோள்போதகனெனவும், அப்பாகப்பலனை மாறுபடுத்துங்கோள் வேதகனெனவும், தேறியபலனைக் கிடைக்கச்செய்யுங் கோள்பாசகனெனவும், சம்பாதித்தபொருளைப்பெறச்செய்யுங்கோள் காரகனெனவும் சொல்வரென்பதாம்எ-று.

பானுதிசையின்மந்தன்-பாசகனுஞ்சுக்கிரனே
மானேகேள்வேதகனு-மாவேந்தன்-தானேதான்
காரகனுகுஞ்செவ்வாய்-காசினியோர்தாமறிய
எரணியும்போதகனுமே.

(இ-ள்.) சூரியனுடையதிசையில் - சனி - பாசகன், சுக்கிரன் - வேதகன், குரு - காரகன், செவ்வாய் - போதகனென்பதாம் எ-று.

இந்துதிசையில்வெள்ளி-யோர்த்ததோர்பாசகனும்
விந்தமலரின்னணண்பன்-வேதகனும்-மந்தனே
கங்காதிபுடைடசூழ்-காசினியிற்காரகன்பி
சங்காதசேய்போதகன்.

(இ-ள்.) சந்திரனுடையதிசையில் - சுக்கிரன் - பாசகன், சூரியன் - வேதகன், சனி - காரகன், செவ்வாய் - போதகனென்பதாம்.

மங்கலன்றன்றிசையின்-மார்த்தாண்டன்பாசகனுந்
திங்கள்பெரும்போதகனுஞ்-சேயிழையீர்-பொங்குபுக
ழீயுமால்வேதகனு-மித்தரணியோரறிய
வாயுசனிகாரகனும்வந்து.

(இ-ள்.) செவ்வாயினுடையதிசையில் - சூரியன் - பாசகன், சந்திரன்-போதகன், புதன் - வேதகன், சனி-காரகனென்பதாம் எ-று.

புந்திதிசையிற்-புரவலனேபோதகனுஞ்
சந்திரனேபாசகனுத்-தானுகும்-இந்துநுதல்
மின்னேசெவ்வாய்தானே-வேதகனும்வெள்ளியோ
மன்னுபுகழ்காரனும்வந்து.

(இ-ள்.) புதனுடையதிசையில் - குரு - போதகன், சந்திரன்-பாசகன், செவ்வாய் - வேதகன், சுக்கிரன் - காரகனென்பதாம் எ-று.

வேந்தன்மஹாதிசையில்-வெய்யவனேவேதகனும்
போந்துவருஞ்செவ்வாயே-போதகனுங்-காந்திசெறி
சந்திரனேகாரகனுந்-தையலேதாரணியில்
மந்தனேபாசகனும்வந்து.

(இ-ள்.) குருவினுடையதிசையில் - சூரியன் - வேதகன், செவ்வாய்-போதகன், சந்திரன்-காரகன், சனி - பாசகனென்பதாம் எ-று.

வெள்ளிமஹாதிசையில்-வேந்தனேபோதகனுந்
தெள்ளியமால்பாசகனுஞ்-செங்கதிரோன்-மெள்ளவருங்
காரகனேதானுகுங்-காரியேவேதகனும்
வாரணியுங்கொங்கைமயில்.

(இ-ள்.) சுக்கிரனுடையதிசையில் - குரு - போதகன், புதன் - பாசகன், சூரியன் - காரகன், சனி - வேதகனென்பதாம் எ-று.

சனியின்றிசையில்-சசிபோதகனு
மினியகுஜன்வேதகனென்-றேர்க்குங்-கனிமொழியாய்

வெள்ளியேபாசகனும்-வேந்தனேகாரகனுந்
தெள்ளியநூலாலறியுஞ்சீர்.

(இ-ள்.) சனியினுடையதிசையில் - சந்திரன் - போதகன், செவ்வாய்-வேதகன், சுக்கிரன் - பாசகன், குரு-காரகனென்பதாம் எ-று.

ஒருவன்மஹாதிசையி-லுற்றபலனுண்ண
வருமங்நவக்கிரக-மட்டுந்-தெரியவே
போதகனும்பாசகனும்-போற்றுபொருள்காரகனும்
வேதகனுமாகிவரும்.

(இ-ள்.) ஒரு கிரகதிசையிலுள்ளபலனைப் பகுந்துபுசிக்கும்படியான கிரகங்களுள் - போதகனென்றும், பாசகனென்றும், காரகனென்றும், வேதகனென்றும் வருவர்களென்பதாம் எ-று.

இந்தப்படிநால்வ-ரெய்தியொருவன்றிசையில்
வந்துபலனுண்ணும்-வகையறிந்தே-சிந்தித்
துரைக்கில்பலனெற்றிருக்கு-மொண்டொடியேசொல்லிவை
தரைக்குள்வந்தோரறியத்தான்.

(இ-ள்.) இவ்வகையாக - நான்குபெயரும், ஒவ்வொரு கிரகத்தின் திசையில் - அவரவருக்குள்ள பாகப்பலனைப்புசிப்பர். அஃது - விபரந் தெரிந்து யோசித்துப் பலனைச் சொல்லில் பொருந்தியிருக்கும் ஆகையால், பிரகாசம்பொருந்திய வளையலையணிந்திருக்கும் - மாதே - இப்பூமிகண் ஜெனனமெடுத்த மாந்தர்கள் அறிந்துக்கொள்ளும்படி கூறுவாயென்பதாம் எ-று.

இரவிதிசாபலன்.

அக்கினியாற்பீடை-யமர்விருத்திப்பொன்சேதம்
மிக்கபயஞ்சத்துருவால்-மேவுபகை-யொக்குமே
கண்ணோய்சிரரோகங்-காதல்பிதாமிருத்யு
வெண்ணுமிரவித்திசையிலே.

(இ-ள்.) அக்கினிபயமும் - சண்டைசச்சுறவும்-தனச்சேதமும் - சத்துருபயமும்-பகையும் - நேத்திரவியாதியும் - சிரநோயும்-ஆசைப்பிதாவரிட்டமும், இவைமுதலிய தீயபலன்களைக் கொடுக்கும். இஃது-சூரியனுடைய திசைக்கு சொல்லவென்பதாம் எ-று.

இரவிபுக்திபலன்.

மன்னர்பகைமிருத்யு-வாணிபஞ்செட்டாகாது
பின்னும்பொருள்போம்-பிதாமிருத்யு-மன்னுஞ்
சிரரோகமும்பயமுஞ்-சேருங்கண்ணோயா
மிரவிதிசையில்லிரவியே.

(இ-ள்,) அரசர்பகை - சாவு - தொழில்கேடு - தனச்சேதம் - பிதாமரணம் - தலைநோய் - திகில் - கண்ணோய் - இவைமுதலிய தீயபலனைக்கொடுக்கும். இஃது - சூரியனுடைய திசையில் - சூரியனுடையபுக்தி - மீ ந-நாள் கஅ-ல் என்பதாம்.

## சசிபுக்திபலன்.

தனலாபமாம்பகைபோஞ்-சம்பத்துண்டாகு
மினமானபீடைகள்விட்-டேகு-மனநோயால்
வந்தபிணிதீரும்-மார்த்தாண்டன்றன்றிசையில்
சந்திரன்வந்தேபுசிக்கில்தான்.

(இ-ள்.) திரவியலாபம்-பகையிராது-சம்பத்கரமுண்டு - இனத்தினுண்டாகிய துன்பநிவர்த்தி, மனவருத்தத்தினுண்டாகிய துன்பநிவாரணம், இவைமுதலிய நல்லபலன்களைக் கொடுக்கும். இஃது - சூரியனுடையதிசையில் சந்திரனுடைய புக்தி - மீ சூ-ல் என்பதாம்.

## குஜபுக்திபலன்.

செல்வந்தனலாபஞ்-செம்பொன்னவமணியு
முல்லாசமாய்வந்-துறையுமே-யெல்லோன்
பொருந்துமஹாதிசைக்குட்-பூபாலன்செவ்வா
யிருந்துபுசித்தேயிடில்.

(இ-ள்.) ஐஸ்வரியம்-பொருள்விர்த்தி-பொன்னுபரணமும்-ரத்னாபரணமும் வந்து சேரும். இவைமுதலிய நல்லபலன்களைக் கொடுக்கும் இது சூரியனுடைய திசையில் பூமாதேவியின் புத்திரனாகிய செவ்வாயினுடைய புக்தி-மீ சு-நாள் சூ-ல் என்பதாம்.

## இராகுபுக்திபலன்.

மிகுவாதையாந்தனம்போம்-மின்னுசமாகுந்
தகுமானசத்துருவாற்-சண்டை-தொகுக்குமுட
னெப்பொருளுஞ்சேத-மிரவிதிசைக்குள்ராகு
தப்பாவந்துப்புசிக்கில்தான்.

(இ-ள்.) நோய்விர்த்தி - பொருள்நஷ்டம்-லட்சுமிவிலங்கும்-தகுதியான ஒரு சத்துருவினுல் சண்டை - உடனே சகலபொருளும் நஷ்டம். இவைமுதலிய தீயபலன்களைக் கொடுக்கும். இஃது சூரியனுடைய திசையில் இராகுவினுடைய புக்தி-மீ க0-நாள் உசு-ல் என்பதாம்.

## குருபுக்திபலன்.

பாவம்பகைபோம்-பரவுமனநோயகலும்
மேவியசம்பத்து-மிகுதியாந்-தாவுபுகழ்

செங்கதிரோன்றன்னில்-செய்யபிரகத்பதிதான்
பொங்குமுடனேபுசிக்கும்போது.

(இ-ள்.) தரித்திரம் - சத்துருத்வம் - மனவியாதி முதலாய் போய்விடும், செல்வம் விருத்தியாகும்-கீர்த்தியுண்டு இவைமுதலிய நல்ல பலன்களைக்கொடுக்கும். இஃது சூரியனுடைய திசையில் பிரகஸ்பதியினுடைய புக்தி-மீ கூ-நாள் கஅ-ல் என்பதாம்.

### சனிபுக்திபலன்.

சத்துருவுமன்னவருந்- தக்கவுறவின்முறையு
மெத்துவகைப்பொன்சேத-மெய்துமே-எத்திக்கும்
பொல்லாப்புமுண்டாம்-புகலாதவன்றிசையில்
வல்லசனியுண்ணவரில்.

(இ-ள்.) பகைஞரும் - அரசர்களும் - உறவினர்களும் எத்திப்பொருளை அபகரித்துக் கொள்ளுவர்கள். மேலும் எந்த இடத்திலும் பொல்லாப்பும் இவைமுதலிய தீயபலன்களைக்கொடுக்கும். இஃது சூரியனுடையதிசையில் சனியினுடைய புக்தி-மீ கக-நாள்-கஉ-ல் என்பதாம்.

### புதபுக்திபலன்.

குட்டம்வருநெஞ்சங்-குலைமார்பிணையாகும்
மட்டற்றுப்போம்போக-மாறியே-துட்டர்
அடிக்கவடிபடுவ-னுதவனில்வித்தை
படித்தபுதன்புசிக்கில்பார்.

(இ-ள்.) குஷ்டவியாதியும் - குலைநோயும்-மார்படைப்பும்-ஸ்திரீவாஞ்சை நீக்கமும் - துன்மார்க்கரா லடிபடுதலும் இவைமுதலிய தீய பலன்களைக் கொடுக்கும். இஃதுசூரியனுடையதிசையில்-புதனுடைய புக்தி-மீ கO - நாள் சு-ல் என்பதாம்.

### கேதுபுக்திபலன்.

எண்ணியிருப்பூர்தனைவிட்-டேகுவிக்கும்பொன்சேதம்
நண்ணுமுறவின்முறையு-நாசமே-பண்ணும்
மரணம்வரும்வெய்யோன்-மாதிசையிற்கேது
கிரணமிதுதான்புசிக்கில்.

(இ-ள்.) நல்லதென் றெண்ணியிருந்த ஸ்தானத்தைப்பேர்த்தலும் - தனவிரயமும் - பந்துபீடையும்-சாவும் - இவைமுதலிய தீயபலன்களைக்கொடுக்கும். இஃது சூரியனுடையதிசையில் கேதுவினுடைய புக்தி-மீ ச - நாள் சு-ல் என்பதாம்.

### கவிபுக்திபலன்.

சூலையதிசாரஞ்-சுரரோகந்தனுடனே
காலிற்கரத்திலூனங்காட்டுங்-கோலப்
பருதிமஹாதிசையிற்-பண்பாம்பிருகு
கருதிபுசிக்கிலிதுகாண்.

(இ-ள்.) பக்கசூலை - அதிசாரபேதி - சுரவியாதிகளு மல்லாமல் காலிலும் - கையிலும் ஊனம்-இவைமுதலிய தீயபலன்களைக்கொடுக்கும். இஃது சூரியனுடைய திசையில் சுக்கிரனுடையபுக்தி௵ க-ல் என்பதாம்.

### மதிதிசைப்பலன்.

ஆரோக்கியஞ்சுபமு-மர்த்தலாபம்பிரியஞ்
சீராம்புவிலாபஞ்-செல்வருமாம்-பாராளப்
பாக்கியமுமின்பம்-பரவும்விவாகமுமே
தேக்குவிக்குஞ்சசிதிசை.

(இ-ள்-) ஆரோக்கியம் - சுபகரம்-திரவியலாபம்-இஷ்டம்-மேலானபூமிலாபம் - பேர்கொண்டு வரும்படியான புத்திரர்கள்பாக்கியம் - சந்தோஷம் - விவாகத்தைக் கூட்டலும் - இவைமுதலிய நல்லபலன்களைக்கொடுக்கும். இஃது சந்திரனுடைய திசையில் என்பதாம்.

### மதிபுக்திபலன்.

மனைவியுமுற்றாரும்-வருவர்மகிழ்ந்தே
இனம்விவாகந்துகிலு-மெய்துங்-கனகா
பரணமுடனன்மைப்-பயிலுஞ்சசியில்
தரணிமதியேபுசிக்கில்தான்.

(இ-ள்.) களத்திரம் உறவினர்கள் மனமகிட்சியுடன்வருவார்கள்-பந்துக்களும் சுபசோபனமுமுண்டாகும் - வஸ்திராபரணம்-நன்மை-இவைமுதலிய நல்லபலன்களைக்கொடுக்கும். இஃது சந்திரனுடைய திசையில் சந்திரனுடையபுக்தி௴ கo-ல் என்பதாம்.

### குஜபுக்திபலன்.

வாதங்கிரந்திபித்தம்-வாய்ந்தவெகுநோயிவையோ
டோதுகள்ளரக்கினியா-லுமெலிவாங்-காதலினல்
துக்கம்வருமாந்-துலங்குஞ்சசிதிசையில்
தக்ககுஜன்வந்துபுசித்தால்.

(இ-ள்.) அண்டவாதம்-கிரந்தி-பயித்தியம் பொருந்திய பலவியாதி-இன்னும் திருடர்களினாலும்-அக்கினியினாலும்-ஸ்திரீவிஷயத்தின

லும் துன்பம்-இவைமுதலிய தீயபலன்களைக் கொடுக்கும். இஃது சந்திரனுடையதிசையில் செவ்வாயினுடைய புத்தி மீ எ-ல் என்பதாம்.

### இராகுபுக்திபலன்.

சத்துருவாற்றுக்கந்-தனச்சேதம்ரோகபயம்
புத்திமதிநாசம்-பொருந்தியே-மெத்த
மெலிவாங்கிஞ்சத்போக- மேவுஞ்சசியில்
வலியகருங்கோளுண்வரில்.

(இ-ள்.) பகையாளிகளால் துன்பம் - திரவியநாசம்-ரோகபயம்-புத்திமதியிராது-கிஞ்சத் சவுக்கியங்கிடைப்பது யரிது - இவைமுதலிய தீயபலன்களைக் கொடுக்கும். இஃது சந்திரனுடையதிசையில் இராகுவினுடைய புக்திவருடம் கரு-ல் என்பதாம்.

### குருபுக்திபலன்.

வேந்தரானன்மைவரு-மேகலையுண்டாஞ்ஜெயமாம்
போந்துசுபலாபம்-பொருந்துமே-நேர்ந்த
பிறையிற்பிரகத்பதி-பேராய்வந்துண்ணும்
முறைமையறிந்தேநீமொழி.

(இ-ள்.) அரசர்கள் சன்மானம்-வஸ்திராபரணம்-ஜெயப்பிரதம்-சுபம் - லாபம் - இவைமுதலிய நல்லபலன்களைக் கொடுக்கும். இஃது சந்திரனுடைய திசையில் குருவினுடைய புக்தி வருடம்-க-மீ சு-ல் என்பதாம்.

### சனிபுக்திபலன்.

துக்கம்பயமிகுநோய்-சூழ்வலங்கப்பீடை
தக்கமனைவிற்கீனந்- தானுகு-மக்கினியால்
பீடைமரணம்-பெருகுஞ்சசிதிசையில்
நாடுஞ்சனிபுசிக்குநாள்.

(இ-ள்.) வியசனம் - பயம் - மிகுந்தநோய் - நெருங்கிய பந்துக்களில் பீடை-களத்திரவானி-அக்கினிபயம்-சாவுசமாச்சாரம். இஃதெல்லாம் சந்திரனது திசையில் சனியினுடைய புக்திவருடம் க-மீ எ-ல் என்பதாம்.

### புதபுக்திபலன்.

கொற்றவர்கண்மெச்சிக்-குதிரைகுடைதண்டிகையிட்
டுற்றவெகுமான-முடன்செய்வர்-மற்றுங்
குலத்திரிக்காண்பிள்ளை-குளிர்சந்திரனில்
நலத்தபுதன்புசிக்குநாள்.

(இ-ள்.) இராஜப்பிரபுக்கள் புகழ்ந்து அஸ்வம் - க்ஷத்திரம் - பல்லக்கு முதலாகிய பெருமதிசெய்வர். பின்னும் பத்தினி ஆண்பிள்ளை பெறுவள். இஃதெல்லாம் சந்திரனது திசையில் புதனுடையபுக்தி ஷ க-மீ ரு-ல் என்பதாம்.

### கேதுபுக்திபலன்.

மார்பிற்பிணியா-மனதில்வெகுசஞ்சலமாம்
பார்வையுறவும்-பகைநாசஞ்-சேரும்
சுதன்மரணமும்பயமுஞ்-சொல்சந்திரனில்
இதமிற்கேதுப்புசிக்கிலே.

(இ-ள்.) மார்பில்நோய்-மனதில் வெகுவித வியாகூலம்-பார்வை பார்த்தல் பந்துநாசம்-புத்திரஆனி-திகிலும். இஃதெல்லாம் சந்திரனது திசையில் கேதுவினுடைய புத்திமீ எ-ல் என்பதாம்.

### சுவிபுக்திபலன்.

வாகனம்பொன்முத்து-வருமனைவியுஞ்சேரும்
கோகனகச்செல்வங்கொடுப்பனே-பாகுமொழி
மானேசசிதிசையில்-வால்சுக்கிரபகவான்
தானேபுசிக்கிலிதுதான்.

(இ-ள்.) வாகனசவுக்கியம் - பொன்னாபரணம் - முத்தாபரணம் வரும்-விவாகமுண்டாகும்-திரவியசம்பத்து உண்டாகும். இஃதெல்லாம் சந்திரனதுதிசையில் சுக்கிரனுடைய புக்திஷ க-மீ அ-ல் என்பதாம்.

### இரவிபுக்திபலன்.

தக்கமிருகங்களினாற்-சத்துருவால்மன்னவரால்
அக்கினியாலும்பயமுண்-டாகுமாங்-திக்கெனவே
பீடைசரீரப்-பிணியாஞ்சசிதிசையில்
நாடுங்கதிர்புசிக்குநாள்.

(இ-ள்.) நாற்கால் ஜீவன்களாலும் - சத்துருக்களாலும், அரசர்களாலும் - அக்கினியாலும் பயமுண்டாகும் - இருந்தாப்போலிருந்து சரீரத்தில் நோயுண்டாகும். இஃதெல்லாம் சந்திரனது திசையில் சூரியனுடையபுக்தி மீ சு-ல் என்பதாம்.

### குஜதிசைப்பலன்.

சித்தம்பிரமையாஞ்-செங்கோலாற்சோரரால்
மெத்தபயமிருத்யு-வெண்குட்டம்-ரத்தப்
பிரமியமாமீளை-பெருகிவருஞ்செவ்வாய்
பரவுமகாதிசையின்பண்பு.

(இ-ள்.) உன்மத்தம் - அரசர்பகை - திருடரால்சாவு-வெண்மையான குஷ்டரோய்-இரக்தப்பிரமியம்-ஈளைவியாதியுண்டாகும். இஃதெல்லாம் செவ்வாயினது திசைஞு எ-ல் என்பதாம்.

## குஜபுக்திபலன்,

அரசர்பகைகலக-மாயுதத்தாற்பீடை
விரவிற்றருமே-விரோதந்-தரைமிசையில்
அச்சம்வெகுவாகு-மங்காரகன்றிசையில்
மெச்சிக்குஜன்புசிக்குமேல்.

(இ-ள்.) இராஜகலகம்-ஆயுதத்தினாலே துன்பம்-உடனே சிநேகவிரோதம்-பூமியின்மீது பயப்பிராந்தி யுண்டாகும். இஃதெல்லாம் செவ்வாயினது திசையில் செவ்வாயினுடைய புக்திமீ ௨-நாள் உஎ-ல் என்பதாம்.

## இராகுபுக்திபலன்.

பித்தச்சுரம்வாத-பீடைகழியக்கினியால்
சத்துருவினன்மரணந்-தாறுது-மெத்தலத்தும்
கள்ளர்பகையாகுமங்-காரகன்றன்றிசையில்
மெள்ளவிராகுபுசிக்கில்.

(இ-ள்.) பித்தச்சுவரம் - வாயுபீடை-தண்டம்-அக்கினி-சத்துரு முதலியதால் மரணம்-எந்தவூர்போனாலும் அந்தவூரில் திருடருடைய தொந்தரை உண்டாகும். இஃதெல்லாம் செவ்வாயினது திசையில் இராகுவினுடைய புக்திஞு க - நாள் கஅ-ல் என்பதாம்.

## குருபுக்திபலன்.

கல்விதனஞ்செறியுங்-காரிகையார்தம்முடனே
செல்வமுஞ்சேருஞ்-சிறப்புண்டாம்-சொல்லுலகில்
அங்காரகன்றிசையி-லானபிரகத்பதிதான்
மங்காமலேபுசிக்குமாண்பு.

(இ-ள்.) கல்வியும் தனமும் லாபமாகும்-ஸ்திரீயும் ஐஸ்வரியமுமுண்டு-கீர்த்திகிடைக்கும். இஃதெல்லாம் செவ்வாயினது திசையில் குருவினுடைய புக்தி மீ கக-நாள் சு-ல் என்பதாம்.

## சனிபுக்திபலன்.

செவ்வாயிற்சுன்வந்து-சேருநாண்முந் நூறு
மொவ்வாகுந்தொண் ணூற்றே-டொன்பதுநா-ளவ்வளவுஞ்
சத்துருவினற்பயமுஞ்-சஞ்சலதுக்கங்கள்வரு
மெத்துந்திருநாசமே.

(இ-ள்.) சத்துருபயம் - சஞ்சலமாகிய துக்கமுண்டாகும் - லக்ஷ்மீகரம் நீங்கும். இஃதெல்லாம் செவ்வாயினது திசையில் சனியினுடையபுக்தி ஞூ க - மீ க-நாள் கூ-ல் என்பதாம்.

### புதபுக்திபலன்.

ஆபரணவத்திரமுண்டாகும்பிரமியமும்
தாபமுடன்றித்திப்பு-தானுகுஞ்-சோபங்கொள்
நீரிழிவுநோய்வருமே-நீண்டசெவ்வாய்த்திசையி
லாரும்புதன்புசிப்பிலாம்.

(இ-ள்.) வஸ்திராபரணமுண்டு-ஆனல், விடாய்ப்புமேம்படியான நீரில்தித்திப்புகாணும்-சோபத்தைச் செய்யும்படியான நீரிழிவு நோயுண்டாகும். இஃதெல்லாம் செவ்வாயினது திசையில் புதனுடையபுக்தி மீ கக-நாள் உஎ-ல் என்பதாம்.

### கேதுபுக்திபலன்.

வெகுநோய்பயங்கடினம்-வேந்தர்பகையங்கித்
தொகுதியாலாயுதத்தாற்-றுன்பம்-மிகுதியாஞ்
செவ்வாயிற்கேது-தினநூற்றிநாற்பத்தே
ழிவ்வாறுதான்புசிக்கிலே.

(இ-ள்.) வெகுவியாதியும்-பயமும்-சங்கடமும் - அரசர்பகையும்-அக்கினியினுலும்-அஸ்திரத்தாலும் துன்பம். இஃதெல்லாம் செவ்வாயினது திசையில் கேதுவினுடைய புக்தி மீ ச-நாள் உஎ-ல் என்பதாம்.

### சுவிபுக்திபலன்.

கானத்துறைவிலங்காற்-கள்ளராற்சத்துருவா
லீனங்கிஞ்சத்போக-மெய்துமோர்-மானனையாள்
தன்னேடிருந்தசுகந்-தாழ்வாகுந்துக்கமாம்
மின்னேசுங்கன்புசிப்புமேல்.

(இ-ள்.) காட்டில் சஞ்சரிக்கின்ற மிருகத்தினுலும்-திருடராலும் - பகையாளியாலும் - துன்பமுண்டு. பின்னும்கொஞ்சம் சவுக்கியத்தைத்தரும். ஸ்திரீயினுடைய சுகம்குறைந்து துயரமுண்டாகும். இஃது செவ்வாயினது திசையில் சுக்கிரனுடைய புக்தி ஞூ உ-மீ உ-ல் என்பதாம்.

### இரவிபுக்திபலன்.

தனம்ராஜபூஜிதமுஞ்-சம்பத்துண்டாகும்
இனமானமின்போக-மெய்தும்-கனகநிதி
அங்காரகன்றிசையி-லாதித்தனூற்றிருப
திங்குவருநாளாறினில்.

(இ-ள்.) திரவியம் - ராஜபூஜிதம் - சம்பத்து - ஸ்திரீசௌக்கியம் பணப்புதையல் கிடைக்கும். இஃது செவ்வாயினது திசையில் சூரி யனுடைய புக்தி - ௴ ௪ - நாள் ௬ - ல் என்பதாம்.

**மதிபுக்திபலன்.**

அதிகசுகந்தனமுண்-டாகுங்கமலப்
பதியாள்தருஞ்செல்வப்-பண்புங்-குதிகொள்ளுந்
துய்யமுத்திரத்தினமுஞ்-சொர்ணஞ்செயமுண்டாஞ்
செய்யசசிபுசிக்குஞ்சீர்.

(இ-ள்.) மேலான சௌக்கியம் - தனவரத்து - லட்சுமீகரம்பொ ருந்தியிருக்கும். பரிசுத்தம்பொருந்திய - முத்து - ரத்தினம் - பொன் - சுபகரமுண்டு. இஃது செவ்வாயினது திசையில் சந்திரனுடைய புக்தி ௴ ௭ - ல் என்பதாம்.

**இராகுதிசைப்பலன்.**

துச்சேஷ்டைநோய்நஷ்டந்-துக்கந்துருவிருத்தி
அச்சமனதிற்சோப-மக்கினியால்-மிச்சபயம்
நாசவினைசம்பாரி-னல்குமற்பபாக்கியமுந்
தேசுதரும்பாம்பின்றிசை.

(இ-ள்.) கொடியதொந்தரை - பிணி - விரயம் - வியாகூலம்-கெ ட்டசெய்கை - மனோபயம் - தாபம் - அக்கினியால்பயம் - கேடுமேல் கேடுண்டு. ஆனால், சிலபோது கிஞ்சத் பாக்கியத்தையுங்கொடுக்கும். இஃது இராகுவினதுதிசை ௵-௧௮-ல் என்பதாம்.

**இராகுபுக்திப்பலன்.**

சற்பபயமரணந்-தன்றலம்விட்டோட்டிவிக்கும்
நிற்குமதிநாசம்-நிதிமோசம்-முற்படுநோய்
மேவுங்கருங்கோள்-மிளிர்திசையிலக்கோளே
தாவிப்புசிக்கிலிதுதான்.

(இ-ள்.) பாம்பின்பயம் - சாவு - ஸ்தானப்பிரஷ்டம் - அறிவில் லாமை - பொருள்மோசம் - முன்சேஷமிருந்த வியாதிகள் அதிகரிக் கும். இஃது இராகுவினது திசையில் இராகுவினுடைய புக்தி ௵-௨ ௴ ௮-நாள் ௧௨-ல் என்பதாம்.

**குருபுக்திபலன்.**

துக்கமறுநோயகலுந்-துர்ஜனரால்பீடையிலை
மிக்கதெய்வவிப்பிரரால்-மேன்மையா-மக்காலத்
தன்னியமின்போக-மணுகுங்கருங்கோளின்
மன்னிமரசன்புசிப்பிவ்வாறு.

(இ-ள்.) துன்பநிவாரணை - வியாதிநீங்கும் - துஷ்டரால் கேடி ல்லை - தேவப்பிராமணரால் மேன்பாடு. அன்னிய ஸ்திரீசஞ்சாரமு ண்டு. இஃது இராகுவினது திசையில் குருவினுடைய புக்தி ௵-உ மீ அ-நாள் உஅ-ல் என்பதாம்.

### சனிபுக்திபலன்.

சித்தப்பிரமைகொண்டு-சேர்தலம்விட்டேகுவிக்கும்
பித்தமிகும்பீடை-பெருகுமாம்-அத்தம்
அகலும்பிதிர்பீடை-யாம்வாதமர்கும்
மிகுகலகம்மந்தன்வினை.

(இ-ள்.) மதிகெட்டு இருந்த இடத்தைவிட்டோட்டம்-பித்தோ பரியான வியாதிவிர்த்தி-தனவிரயம்-பிதாவரிட்டம்-வாயுசம்பந்த வி யாதி-கலகமுமுண்டு. இஃது இராகுவினது திசையில் சனியினுடை யபுக்தி ௵-உ மீ கo நாள் கூ-ல் என்பதாம்.

### புதபுக்திபலன்.

கூர்ந்தறிவுதண்மைமிகுங்-கூட்டந்தமரோர்கள்
சார்ந்தசகோதரம்பெண்சாதிவகைச்-சேர்ந்தவின
மெய்துங்கொஞ்சந்துக்க-மெண்ணுங்தொளாயிரநா
ளுய்யபதினெட்டுபுதனாண்.

(இ-ள்.) நல்ல ஆலோசனை-மேன்மை-பந்துக்கள்வரவு-தன்னுட ன் பிறந்தோர் பெண்சாதிவர்க்கவரவு-அற்பதுக்கமும் உண்டு. இஃது இராகுவினது திசையில் புத புக்தி ௵-உ மீ கூ-நாள் கஅ-ல் என்ப தாம்.

### கேதுபுக்திபலன்.

சுரமரசரக்கினியால்-துன்பந்தொடுத்த
கருமங்கெடுமனைவிக்குங்காண்-பிரிய
சுதனுக்குமாயுதத்தால்-துன்பம்பிதுர்க்கு
சதிகேதுகோள்புசிக்கில்தான்.

(இ-ள்.) சுரத்தினாலும் - அரசராலும் - அக்கினியாலும் துன்பம் நேரிடும் - எடுத்தகாரியங்கெடும் - பெண்சாதிக்கும் புத்திரனுக்கும் ஆயு தத்தினால் பீடை - பிதாவுக்குமோசம் உண்டு. இஃது இராகுவினது திசையில் கேதுவினுடைய புக்தி-௵ க-நாள் கஅ-ல் என்பதாம்.

### கவிபுக்திபலன்.

சுக்கிரனுண்டோர்மூன்றுந்-துய்யதனஞ்சேரும்
மிக்கதெய்வதாசியின்ப-மெய்துமே-தக்கபடி

ஆளடிமைசேரு-மரசர்மானஞ்செய்வர்
நீள்கருங்கோளினினீர்க்கோள்.

(இ-ள்.) சற்பாத்திரவழியில் திரவியஞ்சேரும் - தேவதாசியினுடைய சிநேகம் - அடிமையாள்வரத்து - அரசர்கள்மெச்சி பரிசுகொடுப்பர். இஃது இராகுவினது திசையில் சுக்கிரனுடைய புக்தி வருடம் ௩-ல் என்பதாம்.

## இரவிபுக்திபலன்.

வன்னிகள்ளர்சத்துருவால்-மாவிரணரோகமதா
லுன்னுபயிர்பொன்சேத-முண்டாகும்-துன்னுகரும்
பாம்பின்றிசையிற்-பரிதிநாண்முந்நூறுந்
தாம்புசிக்குநாளாறிற்றுன்.

(இ-ள்.) அக்கினி-திருடர்-சத்துரு-ராஜரணம்-பயிர்-திரவியமுதலாகியதுகளினுல் நஷ்டமுண்டாகும். இஃது இராகுவினது திசையில் சூரியனுடைய புக்தி-மீ கo-நாள் உசு-ல் என்பதாம்.

## சசிபுக்திபலன்.

பூமிதனலாபமுடன்-போந்தமனையாள்லாபம்
ஆமிதனுலேகாணியாளர்பகை-கோமளஞ்சேர்
ராகுதிசையிற்சசிதா-னல்கியமாதம்பதினெட்
டாகுமிவைகண்டறியலாம்.

(இ-ள்.) மனைலாபமுமல்லாமல்-தகுதியான களத்திரலாபம்-ஆனுல், இவைகளினுலே பங்குபங்காளிகளுடைய பகையுண்டு. இஃது இராகுவினது திசையில் சந்திரனுடைய புக்தி வருடம் கஉ-ல் என்பதாம்.

## குஜபுக்திபலன்.

நாடியதோர்யாத்திரையோ-நாசமாஞ்சோரபயம்
நீடுவன்னியால்பயமு-நேரிடுமே-ஆடரவில்
செவ்வாயொருவருடஞ்-சேர்ந்தமூவாறுநாள்
இவ்வாறுதான்புசிக்கிலே.

(இ-ள்.) உத்தேசித்திருந்த யாத்திரைதடை-திருடராலும் அக்கினியாலும் நஷ்டம். இஃது இராகுவினது திசையில் செவ்வாயினுடைய புக்தி வருடம் க-நாள் கஅ-ல் என்பதாம்.

## குருதிசைப்பலன்.

வித்தைசெயம்புத்திரர்சம்-பத்துமிகுமேலரசர்
சித்தமகிழ்சன்மானஞ்-செய்வரே-மெத்த
அபிஷேகபூஷணமு-மாதிபத்தியங்கள்
லபிதங்குருதிசாபலன்.

(இ-ள்.) வித்யாலாபம்-ஜெயப்பிரதம்-புத்திரபாக்கியம் - மேலான அரசர்கள் கிருபைவைத்து பெருமானஞ்செய்து, மிகவும்வஸ்திராபரணமளித்து பெருமையான சுயாதிபத்தியமும் தருவார்கள். இஃது குருவினது திசை-ஞ௵ கசு-ல் என்பதாம்.

குருபுக்திபலன்.

புத்திரர்மன்னர்சேர்வை-பூலாபமாரோக்கியம்
நித்தியவிவாகமா-நிட்சேபம்-வத்திரம்பொன்
னுபரணமுண்டாகு-மாசான்றிசையிலவன்
பாபமிலாப்புசிப்பில்பார்.

(இ-ள்.) புத்திரலாபம்-நிருபதெரிசனம்-பூமிலாபம்-சௌக்கியம்-சார்வதாய்சுபகரம் - புதையல்லாபம்-வஸ்திராபரணசித்தி. இஃது குருவினது திசையில் குருவினுடைய புக்தி ஞ௵-உ மீ௷ க - நாள் கஅ - ல் என்பதாம்.

சனிபுக்திபலன்.

மன்னன்மகாதிசையில்-மந்தனதுமாசமூப்பான்
உன்னியநான்குநாளுற்றிடும்போ-திந்நிலத்தில்
வேசியராலின்பங்கண்-மேவுமிதுவல்லாமல்
பேசுதனலாபமுமாம்பின்.

(இ-ள்.) அன்னியஸ்திரீசஞ்சாரமும்-தனலாபமுமுண்டு. இஃது குருவினது திசையில் சனியினுடைய புக்தி ஞ௵உ ௬ - நாள் கஉ-ல் என்பதாம்.

புதபுக்திபலன்.

தனதானியலாபஞ்-சத்துருக்கள்பத்தி
மனைவிக்குநன்மை-மருவு-மினமுடனே
தக்கதமையன்-றனக்குநோய்மன்னவனில்
மிக்கபுதன்புசிக்கின்மேல்.

(இ-ள்.) தனந்தானியலாபம் - சத்துருக்கள் விகிதமாவார்கள்-பெண்சாதிக்கு நன்மையுண்டாகும் - பந்துக்கள்வரவு - தமையனுக்கு நோய்காட்டும். இஃது குருவினது திசையில் புதனுடைய புக்தி ஞ௵ உ மீ௷ ரு-நாள் கூ-ல் என்பதாம்.

கேதுபுக்திபலன்.

துக்கம்விஷநோய்-சுரரோகமும்வருமே
தக்கதலத்திற்பிரமை-தான்கொள்வன்-மிக்கதமிழ்
வித்வஜெனர்பகையாம்-வேந்துதிசையிற்கேது
புத்திதனைத்தானறியும்போது.

(இ-ள்.) துயரமும்-விஷத்தினல்பீடையும்-சுரநோய் பீடிதமும்-இருந்த இடத்தில் பிரமைகொள்ளலும்-வித்வஜெனர் பகையுமுண்டு. இஃது குருவினது திசையில் கேதுவினுடைய புக்தி ௴ கக-நாள் கூ-ல் என்பதாம்.

## கவிபுக்திபலன்.

சத்துருவினல்நாசம்-தன்மனையாளும்பிரிவள்
வித்தையகலுங்கலக-மேவுபயம்-மெத்ததிறல்
மன்னன்மகாதிசையில்-மாதநாலெட்டசுரர்
தன்குருவந்தேபுசிக்கில்தான்.

(இ-ள்.) சத்துருவினலே நஷ்டம்-தன்பெண்சாதியும் பகையாவள் - படித்தபடிப்பும்போகும் - கலகமும் பயமுமதிகம் உண்டாகும். இஃது குருவினது திசையில் சுக்கிரனுடைய புக்தி ௵-உ ௴ அ-ல் என்பதாம்.

## இரவிபுக்திபலன்.

புண்ணியஞ்சேருஞ்ராஜ-பூஜிதமுஞ்சவுக்ய
மெண்ணுஞ்சவுரியமுண்-டெங்நாளு-நண்ணி
வருஞ்சத்துருநாசம்-மார்த்தாண்டனர்வந்
திருந்துபுசிக்கிலிவை.

(இ-ள்.) தர்மமுண்டாகும்-ராஜபூஜிதமுண்டு - சார்வதாய் சௌக்கியம் - வெகுதயிரியமுண்டு - தேரும் சத்துருக்களை நாசம்பண்ணும். இஃது குருவினது திசையில் சூரியனுடைய புக்தி-௴ கூ-நாள் கஅ-ல் என்பதாம்.

## சசிபுக்திபலன்.

விலைமாதரால்போகம்-வேந்தரால்நன்மை
தலைநாட்பகைநட்பு-தானகும்-விலகும்நோய்
பாராளரசன்-பகர்திசையிற்சந்திரனும்
நேராய்புசிக்கும்நெறி.

(இ-ள்.) கணிகைமாதருடைய சையோகம் - அரசர்சன்மானம்-நெடுநாளையபகையாளியும் இஷ்டமாவர்-பிணிநீங்கும். இஃது குருவினது திசையில் சந்திரனுடையபுக்தி ௵ க ௴ ச-ல் என்பதாம்.

## குஜபுக்திபலன்.

மெய்யிற்குருநோயு-மேதமக்குஞ்சுரமுஞ்
செய்யசவுபாக்கியமுஞ்-சேருமே-யெய்யவருஞ்
சத்துருக்கணசஞ்-சவுரியங்களுஞ்சுபமும்
மெத்தசெவ்வாய்புசிக்கின்மேல்.

(இ-ள்.) தேகத்தில் தமக்குக்கண்ட மேகசுரமும் - நல்லசவுக்கி யமுமுண்டாகும் - சத்துருக்கள்நாசமாம் - சவுரியமுண்டு - சுபம்தீர்க்க மாகும். இஃது குருவினது திசையில் செவ்வாயினுடையபுக்தி மீ கக நாள் சு-ல் என்பதாம்.

## இராகுபுக்திபலன்.

கலகமிகுமிருகங்-கள்ளரால்துக்கம்
தலபேதமாம்புத்தி-தாழ்வாங்-குலவுபுகழ்
விரியங்கண்ட-மிகுந்தவுறவும்பகையாம்
காரியராகுப்புசிப்பில்காண்.

(இ-ள்.) கலகவிர்த்தி-மிருகத்தினாலும்-சோரராலும்துக்கம்-இட ம்விட்டுப்பேர்தல் - யோசனையிராது-கீர்த்திபிரதாபங்கள்குறையும்-பந் துக்களின்பகை. இஃது குருவினது திசையில் இராகுவினுடையபுக் தி வருஉ மீ சு-நாள் உசு-ல் என்பதாம்.

## சனிதிசைப்பலன்.

சோகம்பயமிலங்குஞ்-துக்கமகோதரமுண்
டாகுமபிமானமது-கேடாம்-வாகையுள
மாட்டுக்குச்சேதம்-வருமுயுத்யமுண்டாகுந்
தீட்டுசனியின்றிசை.

(இ-ள்.) சோகமும்-பயமும்-துக்கமும்-மகோதரவியாதியும் உண் டாகும்-ஒருவர்வைத்த அபிமானங்கெடும் - மாட்டுக்குச்சேதம் வரும்- சண்டைநடக்கும். இஃது சனிதிசை வரு கக-ல் என்பதாம்.

## சனிபுக்திபலன்.

மனைவிபுதல்வர்பொருள்-வாழகம்பீடை
தினவழக்குநோய்பயிருஞ்-சேதங்-கனவிலங்கு
பூண்டிருப்பனூர்விட்டுப்-போவன்சனிதிசைமூன்
றாண்டுநாள்மூன்றாகுமால்.

(இ-ள்.) களத்திரம்-திரவியம்-புத்திராள்-குடியிருந்த வீடுமுதலி யதினால்துன்பம்-நித்தியம்வழக்கு-ரோகம் - பயிர்ச்சேதம்-தளையுண்டு- ஸ்தானபிரஷ்டம்செய்யும். இஃது சனியினது திசையில் சனியினு டையபுக்தி வரு ந-நாள் ந-ல் என்பதாம்.

## புதபுக்திபலன்.

ஆசாரம்பூஜைஜெப-மன்புசவுபாக்கியமும்
மாசாரமுள்நோன்பும்-வந்தெய்தும்-தேசார்
சவுக்கியமாமந்தன்றிசை-தன்னிற்புதனும்
புவிக்குள்புசிக்கின்றபோது.

(இ-ள்.) சீலமும்-பூஜையும்-புண்யகரமும்-பிரியமும் - சந்தோஷமும்-சாராம்சமுள்ள விரதமும்-மேன்மைபொருந்திய சவுக்கியமும் உண்டாகும். இஃது சனியினது திசையில் புதனுடைய புக்தி வருடம்-உ மீ அ-நாள் கூ-ல் என்பதாம்.

## கேதுபுக்திபலன்.

அனுசாரமாம்புதல்வ-ராற்பீடைபொல்லாக்
கனுவாம்பொருட்சேதங்-காட்டு-மனோதிடம்போம்
துக்கம்வாதஞ்சோபந்-தோன்றுந்தாரத்தாலும்
அக்கியினாற்கேதுாணறை.

(இ-ள்.) அனுசாரமும் - புத்திரபீடையும் - பொல்லாக்கனவும்-பொருள் சேதமுண்டு-மனோதைரியம்போம் - துக்கமும் - வாக்குவாதமும் - பெண்சாதியாலும் - அக்கிப்புண்ணினாலும் சோபமுண்டாகும். இஃது சனியினது திசையில் கேதுவினுடைய புக்தி வருடம்-க-மீ க-நாள் கூ-ல் என்பதாம்.

## கவிபுக்திபலன்.

சுத்தத்தவர்களால்-சோமுரால்நன்மைவரும்
நத்துமனைவியரால்-நாடுசுகம்-அத்தும்
சகலசவுபாக்கியமுஞ்-சந்தானமந்தன்
தருந்திசையிற்சுக்கிரன்வந்தால்.

(இ-ள்.) நெருங்கிய பந்துக்களாலும் - சிநேகிதராலும் - நன்மையுண்டாகும் - ஸ்திரீசவுக்கியமுண்டு - சகலசவுபாக்கியமும்-சந்தானலாபமுமுண்டு. இஃது சனியின் திசையில் சுக்கிரனுடையபுக்தி வருடம் ந-மீ உ-ல் என்பதாம்.

## இரவிபுக்திபலன்.

செய்யதந்தைதேசாந்-திரம்போவன்புத்திரரால்
தையலால்பொன்னினால்-தான்சேதம்-உய்யவே
உற்றபுவிக்குள்பயங்க-ளுண்டாஞ்சனிதிசையைப்
பற்றிகதிர்புசிக்கும்பண்பு.

(இ-ள்.) அன்புள்ளதந்தை தேசாந்திரம்போகவும் - புத்திராளாலும்-ஸ்திரீகளாலும்-பணத்தினாலும்சேதம் - சுவதேசபயம். இஃது-சனியினது திசையில் சூரியனுடைய புக்திமீ கக-நாள் கஉ-ல் என்பதாம்.

## சசிபுக்திபலன்.

மனைவிகுருமரணம்-வாழ்ந்தகம்பொல்லாப்புந்
தனமதனாலும்பிரிவு-தானு-மினமாய்

கபாலவாயுப்பிடிப்புங்-காரிதிசைதன்னில்
உபாயமதிபத்தொன்பதும்.

(இ-ள்.) பெண்சாதியும்-ஆசாரியரும்மரணம் - வீட்டில்கலகம்-திரவியத்தினல் பிரிவுபடச்செய்யும் - கபாலத்தில்வாயுவும் - கைகால் பிடிப்பும் உண்டாகும். இஃது சனிதிசையில் சந்திரனுடைய புக்தி ஷ்டு க-மீ எ-ல் என்பதாம்.

குஜபுக்திபலன்.

அன்னைபிணிகொள்வ-ளத்தங்கணுச'மா
முன்னியேவாழ்தலம்விட்டோட்டுமே-பின்னுமோ
நாணுதுக்கம்மெய்து-நாற்றிசையெண்கார் தனில்
மாணுபரஞ்சேயவரில்.

(இ-ள்.) தாய்நலுக்குவையாவள்-பொருள்விரயம் - இருந்த இடத்தைவிட்டுப்பேர்க்கும் - நாலாவிதத்திலும்துக்கமுண்டு. இஃது சனியினது திசையில் - செவ்வாயினுடையபுக்தி ஷ்டு க-மீ க நாள் கூ-ல் என்பதாம்.

இராகுபுக்திபலன்.

அங்கத்திற்கீன-மதிசாரமுஞ்சுரமுந்
தங்குஞ்சிரநோய்-தனச்சேதம்-பங்கமிகும்
சத்துருவால்பீடை-சனிதிசையிலேராகு
புத்திவருகின்றபோது.

(இ-ள்.) அங்கத்திற்கேடு-அதிசாரம்-சுரம் - தலைநோய்-தனச்சேதம்-பங்கம்வரும் - சத்துருக்களால்பீடை. இஃது சனிதிசையினில் இராகுவினுடையபுக்தி ஷ்டு உ-மீ க௦-நாள் சு-ல் என்பதாம்.

குருபுக்திபலன்.

பூமிபொருள்புதல்வர்-பூசிதமும்வந்தெய்தும்
தாமிருந்துபோனதலஞ்-சார்வர்-நேமிதனில்
உற்றுரால்நன்மை-யுயர்காரியின்றிசையில்
பற்றியாசானாண்பலன்.

(இ-ள்.) பூலாபம் - புத்திரலாபம் - பொருள்வரவு-மேன்பாடு-பழையபடிதன்னிடம்வந்துசேரல்-நெருங்கியபந்துக்களால் நலமுண்டாகும். இஃது சனியினது திசையில் குருவினுடைய புக்தி ஷ்டு உ-மீ சு-நாள் கஉ-ல் என்பதாம்.

புதன்திசைப்பலன்.

பண்ணியமேழிப்-பயிர்பச்சைத்தான்பலிக்கும்
நண்ணும்விவாகமனே-லாபமா-மெண்ணுர்

தனலாபம்பங்குகொளத்-தானும்மிகுதி
கனமாம்புதன்றிசைக்குள்காண்.

(இ-ள்.) உழுதுபயிரிடும்படியான விவசாயப்பலிப்பும் - விவாகமும் - பூமிலாபமும்-திரவியலாபமும்-பங்குகொள்ளில்கூடுதலும் உண்டாம். இஃது புதன்திசை ஷூ கஎ-ல் என்பதாம்.

புதன்புக்திபலன்.

பூசிக்குமாமக்கள்-பூமியுற்றாருந்தூரத்
தேசந்தனிற்பொருளுஞ்-சேருமே-பேசரிய
ஞானந்தமையனார்-நன்மைசுகந்தர்ம
தானம்புதன்புசிக்கிற்றான்.

(இ-ள்.) புகழ்பெறும்படியான பிள்ளைகளும்-பூமியும்-பந்துவர்க்கங்களும் - தூரதேசத்திலிருந்து திரவியமும் உண்டாகும் - ஞானேதயமும் - தமையனார் நன்மையாக இருக்கவும் - சுகந்தமும் - தர்மதானமுமுண்டு. இஃது புதனது திசையில் புதனுடைய புக்தி ஷூ உ-மீ ௬-நாள் உஎ-ல் என்பதாம்.

கேதுபுக்திபலன்.

உற்றார்பகைதுக்க-மோடுதனமுஞ்சேதம்
மற்றவராலும்வரும்-பீடை-பற்றிகள்ளர்
தன்னால்குலத்திற்குத்-தாட்சியுடன்கேடு
மின்னாளேகேதுமேவிடில்.

(இ-ள்.) உறவினருடைய பகையும்-துக்கமும்-தனநாசமும்-அக்கம்பக்கத்தாரால் பீடையுமுண்டாகும்-சோரர்களால் குலத்திற்கு ஈனமும்-குறைவுமுண்டாகும். இஃது புதனது திசையில் கேதுவினுடைய புக்தி மீ கக-நாள் உஎ-ல் என்பதாம்.

சுவிபுக்திபலன்.

அக்கினிஷ்டோமங்குருவா-லாசரிக்குந்தேவதையால்
தக்கநன்மையுள்ளமைந்தர்-தானுமுண்டு-மிக்க
வலங்காரவஸ்திரம்பொன்-னன்பாய்வருமே
இலங்குபுதனில்வெள்ளியே.

(இ-ள்.) அக்கினியாலும் - ஆசாரியனாலும் - இஷ்டதேவதையாலும்-தகுதியான நன்மையும்-புத்திரருமுண்டு - வஸ்திராபரணஞ் சித்திக்கும். இஃது புதன்திசையில் சுக்கிரனுடைய புக்தி ஷூ உ மீ க௦-ல் என்பதாம்.

## இரவிபுக்திபலன்.

புனல்வன்னியால்நன்மை-பொன்வித்தைபோகம்
கனபுத்திபூமி-கடாக்ஷம்-மனைகட்டி
நாற்காலிருகாலுள்-நற்ஜீவம்ரத்தினமும்
ஏற்கவுண்டாங்கதிரிலே.

(இ-ள்.) சலத்தினாலும் - அக்கினியினாலும் - நன்மையுண்டு-பொன்னும் - வித்தையும் - வைபோகமும் - மேலானபுத்தியும்-பூமியில் புதையலும் - நூதனகிரகங்கட்டலும் - நாற்கால்ஜீவன்வரத்தும்-இருகால்ஜீவன்வரத்தும்-நல்லரத்தினமுமுண்டு. இஃது புதன்திசையில் சூரியனுடையபுக்தி மீ கo-நாள் கூ-ல் என்பதாம்.

## சசிபுக்திபலன்.

புந்திமகாதிசையில்-போந்தசசிமாதம்
வந்தபதினேழு-மட்டுக்குந்-நொந்தே
இளைப்பன்க்ஷயரோக-மெய்தும்பயத்தால்
களைப்பன்மற்றவ்வளவேகாண்.

(இ-ள்.) தேகம்கிரிஷிக்கும் - க்ஷயரோகமுண்டாகும் - பயப்பட்டு களைதாங்கும். இஃது புதனது திசையில் சந்திரனுடைய புக்திவரு௫ க-மீ ௫-ல் என்பதாம்.

## குஜபுக்திபலன்.

ஆயுதத்தினற்கிரந்தி-யாற்பீடையுற்றாரால்
ஏயுங்கலக-மெழிலுமே-நோயுடனே
செந்துகிலும்புண்ணியமுஞ்-சேருமன்னரால்வாழ்வு
புந்தியிற்செவ்வாய்புசித்தபோது.

(இ-ள்.) ஆயுதத்தினாலும் - கிரந்திப்புண்ணினாலும் பீடை - பந்துக்களால்கலகம் - கீர்த்தியுண்டு - நோயுண்டு - சிவந்தவஸ்திரமும்-புண்ணியவிஷயமும் சேரும் - அரசர்களால் வாழ்வுமுண்டு. இஃது புதன்திசையில் செவ்வாயினுடைய புக்தி மீ கக-நாள் உஎ-ல் என்பதாம்.

## இராகுபுக்திபலன்

வாதமிருகத்தினல்-வாதைப்பிரமாதம்
மோதுமுற்றார்நாச-முன்கோபம்-போதுகால்
நித்திரைரோகம்வருமே-நீண்டபுதனிற்கருங்கோள்
பத்திரமாகப்புசிக்கிற்பண்.

(இ-ள்.) வாதவியாதியும்-மிருகத்தினால்தொந்தரையும் - பிரமாதமுமுண்டாகும் - பந்துகள்நாசம் - முன்கோபம் - விடியற்காலத்தில்

நித்திரையுண்டாகும்-வியாதியுண்டு. இஃது புதனது திசையில் இராகுபுக்தி வஷ உ-மீ ௬-நாள் கஅ-ல் என்பதாம்.

### குருபுக்திபலன்.

பொன்பொருளைத்தேடப்-போவன்பிரதேசம்
இன்பப்ரதாபமும்வந்-தெய்துமே-புன்மைப்
பிணிசத்துருபயமாம்-பேசும்புதனில்
அணியரசன்வந்துபுசித்தால்.

(இ-ள்.) பொன்னையும் - பொருளையும்தேடப்பிரதேசம்போகும்படியாகும் - இன்பமும் - பிரதாபமும் உண்டாகும் - அற்பவியாதியும்-சத்துருபயமுமுண்டு. இஃது புதனது திசையில் குருவினுடையபுக்தி வஷ உ-மீ ரு-நாள் ௬-ல் என்பதாம்.

### சனிபுக்திபலன்.

கெண்டம்பிரமாணக்-கேடுறவுக்கீனமாம்
மண்டலத்திற்புத்திரரும்-வந்தெய்தும்-கண்டீர்நாற்
கால்ஜீவலாபமுங்-காட்டுந்தனக்கீனம்
மால்திசையில்மந்தன்வரில்.

(இ-ள்.) கெண்டம் - பிரமாணக்கேடு - பந்துநாசம் - புத்திரருண்டு - நாற்கால்ஜீவன்வரத்து-தொந்தரை. இஃது புதனது திசையில் சனியினுடையபுக்தி வஷ உ-மீ கூ-நாள் கஉ-ல் என்பதாம்.

### கேதுதிசைப்பலன்.

பித்தம்க்ஷயரோகம்-பெண்மருந்தினலிளைப்பன்
சுத்ததரித்திரமுஞ்-சூனியமும்-மெத்த
வருமாடுபோயுமே-வாய்ந்ததிறற்கேது
உருவாய்மருவுதிசைக்குள்.

(இ-ள்-) பித்தோபரி - க்ஷயவியாதி-ஸ்திரீயால் மருந்திட இளைப்பன் - இல்லாமையும் - சூனியம்வைக்கப்படும் - மாடுமுட்டும். இஃது கேதுவினது திசை வஷ க-ல் என்பதாம்.

### கேதுபுக்திபலன்.

குலத்திற்கோர்துக்கங்-கொடுங்கோலாலச்சம்
பிலத்தவொருசத்துருவால்-பீடை-நிலத்தில்
புதல்வருக்கும்பீடை-பொருள்கலகங்கேது
பதியிலவன்புசிக்கும்பண்பு.

(இ-ள்.) குடும்பத்தில்துக்கம் - அநீதியால்பயம் - ஒருசத்துருவினலேதுன்பம் - புத்திராள்நஷ்டம் - பொருள்விஷயத்தில் பொல்

லாப்பு. இஃது கேதுவினதுதிசையில் கேதுவினுடையபுக்தி மீ ௪-நாள் உஎ-ல் என்பதாம்.

### கவிபுக்திபலன்.

தனமிகுஞ்சாந்தந்-தயிரியமுச்சாகங்
கனமரசரால்வாதங்காணும்-மனைவி
தன்னாற்கலகந்-தருங்கேதுவில்வெள்ளி
பன்னாள்புசிப்பின்பயன்.

(இ-ள்.) பொருளுண்டாகும் - சாந்தமும் - தயிரியமும் - உல்லாசமுமுண்டாகும் - இராஜப்பிரபுவினால் வாக்குவாதமுண்டாகும்-களத்திரத்தினால் கலகமுண்டு. இஃது கேதுவினது திசையில் சுக்கிரனுடைய புக்தி ௵ க-மீ உ-ல் என்பதாம்.

### இரவிபுக்திபலன்.

தாகமழலைச்சுரமுஞ்-சத்துருவாலக்கினியால்
போகனெனும்மன்னவரால்-போர்பீடை-யேகதலம்
வேற்றுமையாங்கேதுவினில்-வெய்யோன்வந்தேபுசிக்கும்
நூற்றிருபத்தாறுநாளும்.

(இ-ள்.) தாபமும் - சூட்டின்பேரில்சுரமும்-சத்துருக்களாலும்-அக்கினியாலும் - அரசர்களாலும் - சண்டைசச்சரவும் - ஸ்தானப்பிரஷ்டமும் நடக்கும். இஃது கேதுவினதுதிசையில் சூரியனுடைய புக்தி மீ ௪-நாள் சு-ல் என்பதாம்.

### சசிபுக்திபலன்.

துக்கஞ்சுகங்கலகந்-தோகையர்பொன்னாலாயம்
மிக்கதனச்சேதம்-மிகப்புசிப்பு-மொக்கலாம்
செம்பாம்பிலிங்ந்தேழு-திங்கள்புசித்திட்டால்
அம்பாம்வேற்கண்ணையறி.

(இ-ள்.) துயரமும் - சுகமில்லாமையும் - ஸ்திரீயினாலும்-பொருளினாலும் - தீவாணத்தாலும் - தனவிரயம் - அதிகமாகச்சாப்பிடலுமுண்டு. இஃது கேதுவினதுதிசையில் - சந்திரனுடைய புக்தி மீ எ-ல் என்பதாம்.

### குஜபுக்திபலன்.

வாதுசெய்வார்தன்னினத்தோர்-வாய்க்குந்தேகப்பீடை
ஓதுகள்ளரால்பயமு-முண்டாகும்-கேது
திசையிற்செவ்வாய்புசிக்குந்-திங்களொருநாளோ
டிசையுநாள்மூவொன்பதே.

(இ-ள்.) பந்துக்குரோதம்-தேகத்தில்ரோகம்-சோரபயம். இஃது கேதுவினது திசையில் - செவ்வாயினுடையபுக்தி மீ ௪-நாள் உஎ-ல் என்பதாம்.

**இராகுபுக்திபலன்.**

இல்லில்விரோத-மியர்க்கையனுசாரம்
வல்லகள்ளர்சத்துருவால்-வாதைவரும்-நல்ல
கலகமிருபாம்புங்-கலந்தோர்வருட
முலவியநாளீரொன்பதும்.

(இ-ள்.) கிரககலகம் - அனுசாரங்குடிகொள்ளும் - கள்ளராலும்-சத்துருக்களாலும் சங்கடமாகும்-கலகமும்வரும். இஃது கேதுவின துதிசையில்-இராகுவினுடையபுக்தி வரு௰ க-நாள் கஅ-ல் என்பதாம்.

**குருபுக்திபலன்.**

சம்பத்தாசாரமுடன்-றக்கபிரக்கினையும்
இன்பமனையாள்புதல்வ-ரெய்துமே-அம்புவியில்
மானேகேதின்றிசையில்-வந்தபிரகத்பதியாங்
கோனேபுசிப்புகொள.

(இ-ள்.) சம்பத்கரம் - சீலம் - நல்லறிவு - இஷ்டநாயகிபிள்ளை பெறுவாள். இஃது கேதுவின துதிசையில் - குருவினுடையபுக்தி மீ கக-நாள் கூ-ல் என்பதாம்.

**சனிபுக்திபலன்.**

அங்கத்திற்கீனமா-மக்கினியாற்பீடையாம்
பொங்குதலப்பேதம்-பொருட்சேதம்-திங்கள்
பதின்மூன்றுமொன்பதுநாள்-பாழ்வாதபித்தம்
அதுவருமந்தன்புசிக்கவாம்.

(இ-ள்.) சரீரத்திலூனம் - அக்கினியால்சங்கடம் - இடம்விட்டுப் பேர்தல் - பொருள்விரயம் - வாதபித்ததொந்தவியாதியும் உண்டு. இஃது கேதுவினதுதிசையில் - சனியினுடையபுக்தி வரு௰ க-மீ க-நாள் கூ-ல் என்பதாம்.

**புதபுக்திபலன்.**

சீமையினல்தன்னல்-சிலுவில்லைமைந்தருற்றார்
தாமும்வருவர்-தலஞ்சேர்வர்-பூமி
வெகுலாபம்செம்பாம்பில்-மேவிப்புதனும்
தொகுதியுடனேபுசிக்கிற்சொல்.

(இ-ள்.) ஊரினலும் - தன்னலும்சிக்கில்லை - புத்திரபாக்கியம் - பந்துக்கள்வரவும் - தன்னிடம்வந்துசேரச்செய்யும் - பூமியினல் அதி

கலாபமுண்டு. இஃது கேதுவின துதிசையில்-புதனுடையபுக்தி மீ௱ கக நாள் உஎ-ல் என்பதாம்.

### கவிதிசைப்பலன்.

மன்னர்மறையோர்தமரோர்-வாஞ்சிப்பர்வேள்வியுடன்
உன்னுக்ஷத்ரக்ஷாமரைபொன்-னுண்டாகும்-மின்னுஞ்
விபாகம்சுபப்ரீயம்-மெய்யிற்பிணிபோம்
சுபாவமிதுசுக்கிரனிற்சொல்.

(இ-ள்.) அரசர்கள் - வேதபிராமணுள் - பந்துக்கள்-சிநேகம்செய்வர்கள் - யாகம் - குடை - சாமரை - பொன் - லாபமாம்-பங்குபாகம் வரும்-சுபகரம்-சந்தோஷமுண்டு. இஃது சுக்கிரனதுதிசை ௵ உ௦-ல் என்பதாம்.

### கவிபுக்திபலன்.

தன்மார்த்தகாமியஞ்-சௌரியங்களுண்டாம்
துன்மார்க்கரைச்செயிக்கத்-துப்புண்டா-நன்மார்க்கம்
எண்ணோங்துதிங்க-ளெழில்சுக்கிரன்திசையில்
நண்ணியவன்புசிக்குநாள்.

(இ-ள்.) அறம் - பொருள் - இன்பம் - சவுரியம் - உண்டு துன்மார்க்கரைச்செயிக்கச்சக்தியுண்டு - நன்னெறியாகும். இஃது சுக்கிரனதுதிசையில் சுக்கிரனுடைய புக்தி ௵ ௩-மீ௱ ௪-ல் என்பதாம்.

### இரவிபுக்திபலன்.

கண்வலிமெய்பீடைதுக்கங்-காவலர்தம்மால்பயமாம்
எண்ணுஞ்சுரதாப-மெய்துமே-நண்ணி
பிருகுமகாதிசையில்-பேரானவெய்யோன்
வருபன்னிரண்டுமெதி.

(இ-ள்.) கண்ணோய் - தேகவியாதி - துயரம்-அரசர்களால்பீதி - எப்போதுஞ்சுரமும்-தாபமுமுண்டு. இஃது சுக்கிரனதுதிசையில் - சூரியனுடையபுக்தி ௵ க-ல் என்பதாம்.

### சசிபுக்திபலன்.

சிரரோகங்காமாலை-செய்யமுதம்பந்தும்
வரவாம்மனைகட்டி-வைப்பன்-சரீரம்
உருக்கும்பிருகி-லொளிர்மதிவந்துண்ணப்
பெருக்குமதிநாலைந்துபேசு.

(இ-ள்.) சிரநோய் - காமாலை - விருந்து - பந்துவரத்து-நூதனகிரகசித்தி-தேகம் இளைக்கும். இஃது சுக்கிரனதுதிசையில் சந்திரனுடையபுக்தி ௵ க-மீ௱ அ-ல் என்பதாம்.

### குஜபுக்திபலன்.

பீனிசமாம்மார்பிற்-பிணியாகுஞ்சஞ்சலமாம்
மாநிலத்திலாபமே-வந்தெய்தும்-ஆனசெவ்வாய்
ஈரேழுதிங்க-ளியல்சுக்கிரன்திசையில்
பாரோரறியவுணும்பண்பு.

(இ-ள்.) பீநிசம் - மார்பில்நோய் - சஞ்சலம் - பூமியினுலாபமு ண்டு. இஃது சுக்கிரனதுதிசையில் - செவ்வாயினுடையபுக்தி ஷூ க மீ உ-ல் என்பதாம்.

### இராகுபுக்திபலன்.

புலவர்பகையிருந்தாப்-போலேசிரநோய்
குலவுந்தியாகங்-கொடுப்பன்-விலைமாதர்
போற்றவேசுக்கிரனைப்-பூண்டுகரும்பாம்பு
எத்தவருடம்மூன்றினில்.

(இ-ள்.) வித்வஜனபகை-திடீலென்றுதலைநோய்-தானங்கொடுப் பிப்பன்-தேவதாசிகள்கூட்டம். இஃது சுக்கிரனதுதிசையில் இராகுவி னுடையபுக்தி ஷூ ந-ல் என்பதாம்.

### குருபுக்திபலன்.

இல்லாளானன்மைசுக-மெய்துந்தனலாபம்
தொல்லைமனையில்சந்தோஷமே-பல்லோரும்
கண்டுசந்தோஷக்-களிப்பினுலெட்டுமதி
உண்டுகவிபொன்னனுணவு.

(இ-ள்.) களத்திரத்தினுல் நன்மையும் - சுகமும் - தனலாபமும்- பழையபூமியினுலே சந்தோஷமும்-சகலரும்பார்த்து சந்தோஷிக்கும்ப டியான இஷ்டமும் ஆம். இஃது சுக்கிரனதுதிசையில்-குருபுக்தி ஷூ உ-மீ அ-ல் என்பதாம்.

### சனிபுக்திபலன்.

பட்டினமூர்சாலப்-பரபத்தியஞ்செய்வன்
வட்டமுலைதுர்க்கந்த-வஞ்சிதனை-இட்டமே
செய்வன்சுரர்குருவைச்-சேர்ந்தசனிமாதம்
உய்யமுப்பானெட்டுணர்.

(இ-ள்.) இராஜதானிமுதல் பிரதேசங்கள்வரையில், பெரிதான வியாபாரஞ்செய்வன்- மலினஸ்திரீயைப்புணருவன். இஃது சுக்கிரனது திசையில் - சனிபுக்தி ஷூ ந-மீ உ-ல் என்பதாம்.

**புதபுக்திப்பலன்.**

சிந்தித்ததெல்லாம்-ஜெயமர்த்தலாபமாம்
மைந்தரால்தோழரால்-மாநன்மை-மூந்தும்
சவுபாக்கியம்பிருகு-தன்னிற்புதன்வந்
தவுபோஜனஞ்செய்யுமால்.

(இ-ள்.) நினைத்தகாரியமெல்லாஞ்சித்தி - திரவியலாபம் - புத்திராளாலும் - சிநேகிதராலும் - லாபமும்-நல்லபாக்கியமும் உண்டாம். இஃது சுக்கிரனதுதிசையில் - புதபுக்தி ௵ உ-மீ கo-ல் என்பதாம்.

**கேதுபுக்திப்பலன்.**

சத்துருவினாற்கூட்டு-தானுண்டுபீடையுடன்
சித்தமதிலெண்கருமஞ்-சேதமாம்-மெத்த
கலகமுற்றூர்நாசமது-காட்டும்பிருகில்
இலகியகேதுபுசிக்கில்.

(இ-ள்.) வியாபாரம்செய்வதில் சத்துருகூட்டுண்டு - துர்க்குறித்தனம் - நினைத்தகாரியஞ்சேதம் - மிகவும் கலகம்-பந்துநாசம். இஃது சுக்கிரனதுதிசையில் - கேதுவினுடைய புக்தி ௵ க-மீ உ-ல் என்பதாம்.

**மாரகதிசாயோகபலன் வழுத்துகின்றது.**

மாரகன்றன்றிசையின்-மன்னுஞ்சுபர்புசிப்பில்
மாரகத்தைப்பண்ணனம்-மானவர்க்கு-மாரகத்தைப்
பண்ணுவான்றன்றிசையில்-பற்றுவகத்தவர்கள்
திண்ணும்புசிப்பிற்செறிந்து.

(இ-ள்.) மனிதர்க்குமாரகன் றன்திசையில் தன்னுடன்சம்பந்தமுற்றிருக்கிற சுபக்கிரகங்களுடைய புக்திகளில் மாரகத்தைக்கொடான், தன்னுடன்சம்பந்தமில்லாமலிருக்கிற பாபக்கிரகங்களுடைய புக்திகளிலே துணிந்து கொல்வான் என்பதாம்.

(க-ரை.) மற்றமாரகவிலக்கணமனைத்து முன்சொன்னபடியே கொள்கவென்க.

**சனி சுக்கிராள்பலன் கூறுகின்றது.**

பிருகுதிசையிற்சனிதன்-பேரார்புசிப்பில்
பெருகுசுபாசுபங்கள்-பேணித்-தருகுவன்
அன்னவனுமப்படியே-யாழ்ந்தறிவாய்நீர்சூழும்
இந்நிலத்தோர்யாவர்க்குமென்று.

(இ-ள்.) கடல்சூழ்ந்த இப்பூமியிலுள்ளயாவர்க்கும் சுக்கிரன்தன்திசையில் சனியின்புசிப்பில் தனக்குண்டான பெரிதாகிய சுபாசுபங்

களை விசேஷமாய்க்கொடுப்பன். அந்தச்சனியுந்தன் றிசையில் சுக்கிரன்புக்தியில் தனக்குண்டான சுபாசுபபலன்களைக் கொடுப்பனென்று ஆலோசித்தறிவாய் என்பதாம்.

### கோள்களின் குணங்களைப் பகுத்தறிதல்.

ஓரைதொறுமுன்ன-முரைத்தபடிகோட்குணங்கள்
சேரவரிசையதாய்ச்செப்பிடுவன்-காரமர்கட்
காம்புறுதோட்கண்டார்சொற்-கார்க்கூந்தற்காரிகையாய்
பாம்புறுநல்லல்குலாய்பார்த்து.

(இ-ள்.) கருமைபொருந்திய கண்களையும்,மூங்கில்போன்றதோள்களையும், கற்கண்டிற்கொப்பாகிய மொழிகளையும், மேகம்போன்ற அளகத்தையும், படம்போன்ற நிதம்பத்தையுமுடைய பெண்ணே? மேஷமுதல் பன்னிரண்டுபாவங்களும் முன்சொல்லியபடியே சூரியன்முதலான கிரகங்களுடைய சுபாசுபகுணங்களை வரிசையாகத் தொகுத்துச்சொல்லுகிறேன் என்பதாம்.

---

## மேடவிராசிபலன் விளம்புகின்றது.

மந்தனெடுமால்சுங்கன்-மாபாவிநல்லவர்கள்
கொந்தலர்பூங்கோதாய்-குருவிரவி-சந்ததமும்
தீயபலன்காரியொடு-தேவர்பிரான்சேர்ந்தக்கால்
ஏயுமவனேடொற்றதே.

மாரகத்தானப்பதியா-மன்னுகின்றபார்க்கவனும்
மாரகத்தைப்பண்ணனம்-மானவர்க்கும்-மாரகத்தைச்
செய்வார்சனிமுன்னோர்-செவ்வியமேடம்பிறந்தோர்க்
கிவ்வாறுரைப்பீரிருந்து.

(இ-ள்.) பூங்கொத்துகள் பொருந்திய, அழகியமாலையினை யுடையவளே? சனி-புதன்-சுக்கிரன் இவர்கள்பாபிகள். குரு-சூரியன் இவர்கள் நல்லவர்கள். சனிசம்பந்தமுற்ற குரு எப்போதும் அவனுக்கேற்ற பாபபலனைக்கொடுப்பன். இதற்குதாரணம்-தன்மகன்மப்பதிகடாமெட்டுடன் பதினென்றின் றலைவராகி லவரென்று முன்னங்கூறியவதனல் சனிபதினென்றின் றலைவனுவதுதான்-மாரகஸ்தானதிபதியாகிய சுக்கிரன் கொல்லான் சனிமுதலானவர்கள் கொல்வரென்று மேடவிராசியிற் பிறந்தோர்க்குக்கூறுவாய் என்பதாம்.

### இடபவிராசிபல னியம்புகின்றது.

குருவெள்ளியிந்து-கொண்டாடாக்கொடியார்
மருவுசுபக்கோண்மந்தன்-மன்னுந்-திருவுறுமா

யோகங்கொடுப்போ-னொருவனவன்சனியே
ஆகுமம்பாவாயறி.

குருமுதலாய்கூறுகின்ற-கோட்களேகொல்லும்
இருவினையராயினுரென்றும்-தெரியும்
படியிடபவோரையினிற்-பார்மிசையிற்றோன்றும்
முடியுடையோர்கட்குமொழி.

(இ-ள்.) பிரதமைபோன்றவளே ; குருவும்-வெள்ளியுஞ்-சந்திரனும் பாபிகள். சனியும்-இரவியும் நல்லவர்கள். சனியொருவனே சிறப்புபொருந்திய மேலான இராசயோகங் கொடுப்போன். குருமுதலானவர் கொல்வரென இப்பலனை ஆராய்ந்து பார்க்கும்போது, பூமியின்கண் இடபவிராசியிற் பிறக்கின்ற கிரீடத்தையுடைய அரசர்க்குத்தெரியும்படி சொல்லுவாய் என்பதாம்.

(க-ரை.) குரு-சுக்கிரன்-சந்திரன் இவர்களுடன் சம்பந்தப்பட்ட கிரகங்களை யாராய்ந்து, அவர்கள் நிலைகளறிந்து சொல்லத்தக்கதென்க.

**மிதுனவிராசிபலன் கூறுகின்றது.**

சேயரசனோடிரவி-சேராக்கொடுங்கொடியர்
ஆயில்புகரோனொருவ-னனகோள்-சேயிழையாய்
மந்தனொடுமந்திரியும்-கூட்டமென்னிலிம்மண்ணில்
நந்துமேடப்படியேநாடு.

அசமர்த்தனிந்துகொல்-கைக்கங்காரகன்முன்
அசமர்த்தரல்லரிதா-ராயில்-இசையுற்
றிலங்குமதிமுகத்தா-யென்றறிமூன்றாகும்
நலங்கொளிராசிக்குநவில்.

(இ-ள்.) செவ்விதாகிய வாபரணங்களையும் புகழ்பெற்றுப் பிரகாசிக்கும் பூரணச்சந்திரன்போன்ற வதனத்தையுமுடையவளே? அங்காரகன்-குரு-சூரியன் கொடியபாவிகள். சுக்கிரன் ஒருவனேசுபன். குரு சனியுடன் செருவானுகில், மேடவிராசியில் பிறந்தோர்க்கொத்தபடி அவயோககாரனுவான். சந்திரன் துதியாதிபத்தியதோஷத்தை அடைந்தவனுயிருந்தாலும், மாரகங்கொடான். குசன்-குரு-சூரியன் இவர்கள் மாரகத்தைகொடுப்பார்ளென்று மூன்றாமிராசியாகிய மிதுனவிராசியிற் பிறந்தோர்க்குச் சொல்வாயாக.

(க-ரை.) குருவும்-சனியும் தருமகருமாதிபதிகளாகையால், யோககாரகாள்வலிஅறிந்து சொல்கவெனக்கொள்க.

**கடகவிராசிபலன் கூறுகின்றது.**

சுங்கனிந்துமைந்தனிவர்-சூழாக்கொடுங்கோட்கள்
மங்கலன்மாவேந்தனிவர்-மன்னுகின்ற-துங்கமுள்ள

நல்லவர்கணல்லயோ-கத்திறைவனுகுமவன்
சொல்லுறிற்பூசுதனுச்சொல்.

ஆதித்தன்கொல்லான்மற்-ருறென்னிற்கொல்லுமவர்
சோதித்துரைக்கிற்சுங்கன்முதலாய்-தீதுற்ருேர்
கண்டென்றுகண்டோ-ருவக்குஞ்சொற்காரிகையாய்
நண்டிலுதித்தோர்க்குநவில்.

(இ-ள்.) கற்கண்டென்று கண்டோர்களுள்ளங் களிக்குஞ்சொற்களையுடையபெண்ணே? ஆலோசிக்கும்போது சுக்கிரன்-புதன் பாபிகள். செவ்வாயுங்-குருவும் விசேஷசுபர். யோககாரகன் செவ்வாய் ஒருவனே. சூரியன்கொல்லான் கொல்வாராரெனில், சுக்கிரன்முதலியோர் கொல்வார்களென்று, கடகவிராசியிற் பிறந்தோர்க்கு இப்பயனைக் கூறுவாய் என்பதாம்.

சிங்கவிராசிபலன் கூறுகின்றது.

புந்தியும்பார்க்கவனும்-போற்ருக்கொடும்பாபர்
செந்திறத்தசெவ்வாயே-செம்மைக்கோள்-அந்திறத்தில்
யோகமுற்ருர்தீப்பலனை-யோராதளித்திடுவ
ராகுமதியாரல்புகர்.

புந்திமுதலாப்புகலும்-பொல்லாரேபூமிசையோர்க்
கந்தமதாக்கொல்வரவர்-வினையில்-பந்தமுற்ருர்
ஆமாகிலாயிழையா-யார்கலிசூழ்வையகத்தில்
தாமாண்சிங்கத்தவர்க்குச்சாற்று.

(இ-ள்.) சிவந்தநிறத்தையும், ஆராய்ந்தெடுத்த வாபரணங்களையுமுடையவளே? கடல்சூழ்ந்த பூவுலகத்தில், புதன்-சுக்கிரன் துதிக்கத்தகாதபாபிகள். செவ்வாயொருவனே நல்லவன். யோககாரகாள் செவ்வாயும் - சுக்கிரனும், இவர்கள் சம்பந்தமுற்ருல் தீயபலனைக்கொடுப்பார். புதன்முதலானபேர் மாரகக்குறியுற்ருராஞல், கொல்வரென்று சிங்கவிராசியிற்பிறந்தோர்க்கு ஆலோசித்துசொல்வாயாக என்பதாம்.

(க-ரை.) செவ்வா யோககாரகனுனபோதிலும், சதுர்த்தகேந்திராதிபதி சம்பந்தத்திஞல் தீயபலனைக் கொடுப்பாரென்றதாயிற்று.

கன்னியிராசிபலன் கூறுகின்றது.

செவ்வாயுஞ்செம்பொன்னுஞ்-சேனூர்மதியுமிவர்
வெவ்வாயர்வெள்ளி-விளம்புங்கால்-ஒவ்வுசுபன்
பார்க்கவனும்பங்கயமா-வைரிமைந்தன்ருனிவர்கள்
ஏர்க்கமிகுயோகத்தரே.

கொல்லான்பெரிய-பிருகுகுஜன்முதலாய்
எல்லாருங்கொல்லு-மியல்புடையார்-நல்லாயென்
றெந்நாளுங்கூறுவா-யேரரிவைமீதுவந்த
மன்னுமவர்க்குமகிழ்ந்து.

(இ-ள்.) செவ்வாய்-குரு-சந்திரன் பாபிகள். வெள்ளி யொருவனேசுபன். வெள்ளியும் புதனும் யோககாரகாள், வெள்ளி கொல்லான், குஜன் முதலானபேர்கள் எப்போதுங்கொல்வாரென்று கன்னிராசியிற் பிறந்தோர்க்குச்சொல்வாய் என்பதாம்.

(க-ரை.) சுக்கிரன் துதியாதிபதியாயிருந்தாலுங் கொல்லானென்றறிக.

### துலாவிராசிப்பலன் கூறுகின்றது.

குருவிரவிசேய்கொடியர்-கூறுசனிபுந்தி
மருவுநலமுடையார்-மண்ணில்-திருவுறுமா
யோகத்தாரிந்துவு-மொண்சுதனுமொண்ணுதன்மீ
தாகுமளகத்தாயறி.

சேயவன்கொல்லான்பின்னே-சிவன்முன்னனவர்கள்
தேயுமதியனைய-செந்நுதலாய்-ஆயும்
அறிவினோர்க்கெல்லா-மளந்தறியக்கோலின்
குறியாகுமென்றுநீகூறு.

(இ-ள்.) ஒளிபொருந்திய நெற்றியையு மேலாகியகூந்தலையு முடையவளே? பிரகஸ்பதி-சூரியன்-செவ்வாய் இவர்கள் பாபிகள். சனியும்-புதனும் சுபாள். சந்திரனும்-புதனும் யோககாரகாள். செவ்வாய் கொல்லான். குருமுதலானவர்கள் கொல்லுவாரென்று துலாவிராசியிற் பிறந்தோர்க்கு யூகித்துச்சொல்வாய் என்பதாம்.

(க-ரை.) செவ்வாய் சப்தமாதிபதியா யிருந்தபோதிலுங் கொல்லான்.

### விருச்சிகராசிபலன் கூறுகின்றது.

புந்தியுஞ்சேயும்-புகரும்பொல்லாக்கொடியர்
இந்துவொருத்தனே-யேந்திழையாய்-சந்ததமும்
நல்லனிருஞால-நலனளிப்போன்ஞாயிறுடன்
அல்லவனுமாகவறி.

குருவென்பவன்கொல்லான்-கோதாய்கொல்வோர்கள்
மருவுபுதன்முதலோர்-மன்னும்-திருவிலியர்
என்றுரைப்பாய்தேட்பிறந்தோ-ரெல்லார்க்குமிப்படியே
குன்றெனவேகூறுமுலை.

(இ-ள்.) ஆபரணங்களையும், மலைபோன்றகொங்கைகளையுமுடையவளே? புதன்-செவ்வாய்-சுக்கிரன் பாபிகள். சந்திரன் ஒருவனே சுபன், சூரியனும்-சந்திரனும் யோககாரகாள். குரு துதியாதிபதியாயிருந்தபோதிலும்,மாரகத்தைச்செய்யான். புதன் முதலானவர்கள் கொல்வார்களென்று விருச்சிக இராசியிற் பிறந்தோர்களுக்குச் சோதித்து அறிவாய் என்பதாம்.

## தனுசிராசிபலன்கூறுகின்றது.

ஒருவன்புகர்பொல்லா-ஞெண்சேயிரவி
மருவுநலயோகமது-மன்னுந்-திருவுடையோர்
பார்க்கரனும்புந்தியென்று-பாம்பேரகலல்குல்
சீர்க்கமலச்சேயிழையாய்செப்பு.

கதிரவன்சேயாகிவளர்-காரிகொல்லான்கொல்வார்
மதிநுதலாய்வெள்ளிமுன்னோர்-மன்னும்-திதியுடைய
பாபிகளென்றோர்ந்திப்-படிமிசையிலெந்நாளும்
சாபமதிலுற்றவர்க்குச்சாற்று.

(இ-ள்.) அரவப்படம்போன்ற வல்குலையும், சிறப்புற்ற தாமரைமலரில்விளங்கிய இலக்குமிக்குச்சமானமும், பிறைபோன்ற நெற்றியினையு முடையவளே? சுக்கிரன் ஒருவனேபாபி. செவ்வாயும்-சூரியனும் சுபாள். சூரியனும்-புதனும் யோககாரகாள். சனி ஒருவனே கொல்லான். சுக்கிரன் முதலானவர்கள் எப்போதும் கொல்வார்களென்று பூமியின்கண் தனுசுவிராசியிற்பிறந்தோர்க்குச் சொல்வாய் என்பதாம்.

(க-ரை.) சனிதுதியாதிபதியா யிருந்தபோதிலும் கொல்லானென்றறிக.

## மகரவிராசிபலன் கூறுகின்றது,

ஆரல்பொன்னிந்துபொல்லா-ரானவர்சுங்கன்புந்தி
வீரமிகுயோகபரன்-வெள்ளியே-காரனைய
கூந்தன்மடமானேகேள்-கும்பிகொல்லானென்றே
ஆய்ந்துணர்ந்தோர்தாமுரைத்தாராம்.

சேய்முதலாய்முன்னமே-செப்புமவரேகொல்வர்
வாய்ந்தமகரமதில்-வந்துதித்துக்-காந்திபெற
வாழுமவர்க்கென்றே-வகுத்துரைத்தாரென்றுமிகச்
சூழுமடமாமயிலேசொல்.

(இ-ள்.) மேகத்தைநிகர்த்த கூந்தலையும், மலையைநிகர்த்த சாயலையுமுடைய பெண்ணே? செவ்வாய்-குரு-சந்திரன் பாபிகள். சுக்கிர

னும்-புதனும் சுபர். வெள்ளி ஒருவனே இராசயோககாரகன். சனிகொல்லான். செவ்வாய் முதலானபேர் கொல்வாரென்று தெரிந்தவர்கள் ஆலோசித்துச் சொன்னார்களென்று மகரவிராசியிற் பிறந்தோர்க்குச் சொல்வாயாக என்பதாம்.

(க-ரை.) சனி-துதியாதிபதியா யிருந்தாலும், மாரகத்தைக்கொடான்.

**கும்பவிராசிபலன் கூறுகின்றது.**

பொன்மதிசேய்பொல்லார்-புகரொருவனேபுனிதன்
நன்னயஞ்சேர்யோக-நயந்தளிப்போன்-கன்னனிகர்
ஆனமொழிமாதே-யசுரர்தமக்கெஞ்ஞான்றும்
ஞானநிலையுரைப்போனன்கு.

வேந்தனென்போன்கொல்லான்-வெறிகமழ்பூங்கோதைகொல்வார்
ஆய்ந்துணரிலாரன்முன்-னவரே-தேர்ந்துரையாய்
வேலைபுடைசூழுலகில்-வெம்புங்குடந்தன்னில்
சாலவுதித்தோர்க்கென்றுசாற்று.

(இ-ள்.) சருக்கரையை நிகரான சொற்களையும், வாசனை வீசும் பூமாலையினையுமுடையவளே? குரு-சந்திரன்-செவ்வாய் இவர்கள் பாபிகள். சுக்கிரன் ஒருவனே சுபன். அந்தச்சுக்கிரனே யோககாரகன். குரு கொல்லான். செவ்வாய் முதலானபேர்கள் கொல்வார்களென்று சமுத்திரஞ்சூழ்ந்த பூமியின்கண் கும்பவிராசியிற் பிறந்தோர்க்குக் கூறுவாயாக என்பதாம்.

(க-ரை.) குரு-துதியாதிபதியா யிருந்தபோதிலும், மாரகத்தைக் கொடான் என்றறிக.

**மீனவிராசிபலன் கூறுகின்றது.**

காரிபுகர்வெய்யோன்மால்-காணுக்கடுங்கொடியர்
ஆரலோடிந்துவிவ-ரானவரே-சேரக்கால்
செய்யோன்குருவிவரோ-செல்வமளிக்கும்பெரியோர்
ஐயநுண்ணூலிடையாயாய்ந்து.

பூசுநன்கொல்லான்கொல்வார்-போற்றுச்சனிமுதலாக்
தேசுபெரும்பாவரென்று-தேர்ந்துரைப்பாய்-காசினியில்
கட்டழகியென்று-கதித்துவளர்மீனத்தின்
உட்பிறப்போர்க்கொண்ணுதலாயோர்ந்து.

(இ-ள்.) சந்தேகமுற்ற நூல்போன்ற யிடையினையும், ஒளிபொருந்திய நெற்றியினையுமுடையவளே? சனி-சுக்கிரன்-சூரியன்-புதன்

பாபிகள். செவ்வாயும்-சந்திரனும் சுபர். செவ்வாயும்-குருவும் இராச யோககாரகர்கள். செவ்வாய் கொல்லான். சனிமுதலானவர் கொல்வாரென்று மீனவிராசியிற் பிறந்தோர்க்குக்கூறுவாய என்பதாம்.

(க-ரை.) செவ்வாய்-துதியாதிபதியாயிருந்தபோதிலும், கொல்லான். கிரகங்களுடைய வலிமையை யூகித்துச் சொல்லுகவென்க.

### சுபாசுபர்களைப்பொதுவிற்கூறுகின்றது.

நல்லார்பொல்லாரென்று-நாடிநவிலாத
எல்லாருமிவ்வுலகோர்க்-கேந்திமையாய்-சொல்லுகின்ற
தானமதற்குந்தம்மைச்-சார்ந்தசகவாசத்திற்
கானுகுலமாயீவராய்ந்து.

(இ-ள்.) ஆபரணங்களையணிந்தவளே? பூமியிலுள்ளவர்கட்குச் சுபாசுபர்களென்று குறித்துச்சொல்லாத எல்லாகோட்களும், எல்லாருஞ்சொல்லுகின்ற தங்கள்தானத்துக்கும், சுபருடன் பிறர் சம்பந்தமுற்றிருக்கிறதற்கும், அனுகூலமாய் பலன்களைக் கொடுப்பார்களென்று ஆராய்ந்து சொல்வாயாக என்பதாம்.

(க-ரை.) சுபர்கள் பாபர்சம்பந்தப்பட்டு, துர்ஸ்தானங்களிலாவது, மாரகஸ்தானங்களிலாவது இருந்தால், பாபபலனைக்கொடுப்பார்கள். பாபிகள் சுபர்சம்பந்தப்பட்டுக் கேந்திரதிரி கோணங்களிலிருந்தால், சுபபலனைக்கொடுப்பார்களென்க.

### ஸ்தானபலன்பகர்கின்றது.

புத்திரதாராதிகளைப்-போற்றுகின்றபாவத்திற்
கொத்தசுபக்கோட்டிசையி-லொண்புசிப்பிற்-புத்திரதா
ரம்முதலாய்ப்பேரளிப்ப-ராயிழையாயார்கலிசூழ்
அம்புவியில்வாழுமவர்க்கு.

(இ-ள்.) ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களை யுடையவளே? கடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களுக்குப் புத்திரகளத்திரஸ்தானமுதலானஸ்தானத்துக்கொத்த சுபக்கிரகங்களுடைய திசாபுக்திகளிற் புத்திரதாராதி சுபபலன்களைப் பெறும்படிக்கொடுப்பார்கள் என்பதாம்.

(க-ரை.) புத்திரதாராதி ஸ்தானங்களுக்கொத்த சுபராரெனில், அத்தானாதிபதிகளும், காரகாளுந்தான்.

கோட்சாரங்கொண்டு-குறிப்பறிதன்மானவர்வாழ்
நாட்பலனைநான்முகனை-யன்றியே-வாட்கண்ணாய்
ஆர்வல்லார்கூறுவதற்-கார்வல்லார்கேட்பதற்கிங்
கார்வல்லாராராய்வதற்கு.

(இ-ள்.) வாள்போலும் கண்களையுடையவளே? மனிதர்களுக்குத் தினபலன் சொல்வதற்குச் சோதிட நூல்வல்லவர்கள், கிரகசாரங்களைக்கொண்டு யுத்தியாகச்சொல்லிக் காண்பிப்பார்களே யன்றி, தாரதன்மயங்களைப் பிறிவினையாய்ச் சொல்லவேண்டுமென்றால், பிரமதேவனொருவனைத்தவிர சொல்வதற்கும், கேட்பதற்கும், ஆராய்வதற்கும், யார்வல்லவர் என்பதாம்.

யோகமதிலுற்பவித்து-மோங்கும்பயனின்றித்
தாகமிகவுற்றிருப்பர்-தாரணிக்குள்-வாகான
காசுமீரகண்டக்-கழுதைகளென்செய்யுமவர்
தேசுதிசைசேராவிடில்.

(இ-ள்.) பூமிக்குள் மிகவும் வளமைபொருந்திய காஷ்மீரகண்டத்தில், கழுதைகளானவைகள் பிறந்திருந்தாலும், அவைகள் என்னபலனையடையும். அத்தன்மைபோல், யோகத்திற்பிறந்தாலும், உயர்ச்சிசெய்யும்படியான யோககாரகதிசை வாராதாயின், அந்தயோகபல னனுபவமில்லாமல், ஆசைமாத்திர மிகுதியாயடைந்திருப்பார்கள் என்பதாம்.

## எல்லாக்கோள்களுடைய் நன்மை துன்மைகூறுகின்றது.

ஐந்தொன்பானுதிபரா-யாவர்வரினுமவர்
அந்தமிலின்பப்பலனை-யாற்றுவார்-அந்தமிறுன்
பப்பலனையாற்றுவார்-மூன்றுறுடன்பதினொன்
றுப்பதிகளிவ்வுலகுளோர்க்கு.

(இ-ள்.) இவ்வுலகத்துள் பிறந்தோர்களுக்கு, இலக்கினத்துக்கு ரு-ம் இடத்துக்கும், கூ-ம் இடத்துக்கும், அதிபராய் எந்தக்கிரகங்கள் வந்தாலும், மட்டில்லாத இன்பப்பலனைக்கொடுப்பார்கள். ங-ம் இடத்துக்கும், சு-ம் இடத்துக்கும், கக-ம் இடத்துக்கும் அதிபராய் எந்தக்கிரகங்கள்வந்தாலும், மட்டில்லாத துன்பப்பலனைக் கொடுப்பார்கள் என்பதாம்.

(க-ரை.) முன்சொன்ன ங-சு-கக-ம் இடங்களிலிருக்கிறவர்கள் பாபபலனைக்கொடார்கள் என்றறிக.

## கோள்களுக்தரித்தாதுஞ் சுபகேந்திரமும் பாபகேந்திரமுங் கூறுகின்றது.

கொடியோர்கள்கேந்திரத்தோ-ராகிற்கொடார்கள்
கொடியபலனல்லோர்-கொடுப்பர்-கடல்புடைசூழ்
வையகத்தோர்தங்கட்கு-வைவேன்மலர்விழியாய்
ஐயப்பாடின்றியறி.

(இ-ள்.) கூர்மைபொருந்திய வேல்போலு மலர்ந்த கண்களையு டைய பெண்ணே? சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களுக்குப் பாபக்கிரகங்களாகிற சூரியன்-செவ்வாய்-சனி இவர்கள் கேந்திரங்களாகிற க-ச-எ-க0-ம்-இடங்களுக்கு அதிபரானால், சுபபலத்தைக் கொடுப்பார்கள். சுபக்கிரகங்களாகிற குரு-சுக்கிரன்-புதன்-சந்திரன் இவர்கள் கேந்திராதிபதிகளானால், பாப பலத்தைக்கொடுப்பார்கள். முன்சொன்ன எல்லாக்கோள்களும், ஒன்றுக்கொன்று விசேஷபிரபலராவர். அஃதாவது, ரு-ம் இடத் ததிபதிக்கு-கூ-ம் இடத்ததிபதி பிரபலன். இலக்கினாதிபதிக்கு-ச-ம் இடத்ததிபதிபிரபலன். அவனுக்கு-எ-ம் இடத்ததிபதி பிரபலன். அவனுக்கு-க0-ம் இடத்ததிபதிபிரபலன். ௩-ம் இடத்ததிபதிக்கு சு-ம் இடத்ததிபதிபிரபலன். அவனுக்கு-கக-ம் இடத்ததிபதி பிரபலன் இவைகளை சந்தேகமில்லாமல் அறிவாயாக என்பதாம்.

**எட்டுக்கிறைவனியல்பு கூறுகின்றது.**

பாக்கியநாசத்திறையாம்-பாவத்தாலெட்டதிபன்
வீக்குவெம்பார்முலையாய்-மேதினியோர்க்-காக்கமிலாத்
துன்பமீவன்னவனே-தூயவோராதிபனேல்
இன்பமீவன்னிகலியே.

(இ-ள்.) கச்சுக்கட்டிய தனங்களையுடையவளே? பூமியிலுள்ளவர்களுக்கு-அ-ம்-இடத் ததிபதி பாக்கியத்தானத்திற்கு விரயத்தானாதிபதியான பாவகத்தினாலே, நன்மைப்பெருக்க மில்லாத துன்பத்தைக்கொடுப்பன். அந்த அ-ம்இடத்ததிபதிதானே இலக்கினாதிபதியானால், மாறுபட்டின்பத்தைக் கொடுப்பன் என்பதாம்.

(க-ரை.) அ-ம்-இடத்ததிபதியைப்போல மிகவுந்துன்பத்தைக் கொடானெனவுணர்க.

**கேந்திராதிபத்தியதோஷத்தைக் கூறுகின்றது.**

கண்டத்ததிபராம்-பாவத்திற்காரிகையாய்
கொண்டகுருவெள்ளி-கொடியரிவர்-தண்டாமல்
ஆயுவியத்திருப்பா-ராமாகிலையமிலா
தாயுவியஞ்செய்திடுவராங்கு.

(இ-ள்.) பெண்ணே? கேந்திராதிபத்திய தோஷத்தில், குருவும்-வெள்ளியும் மிகவும் பலவான்கள். இவர்கள் நீங்காமல் ஆயுள்தானத்திற்கு வியத்தானமாகிய உ-எ-ம் இடங்களில் நின்றாராகில், சந்தேகமில்லாமல் ஆயுவியஞ்செய்வார்கள் என்பதாம்.

(க-ரை.) மாரகத் தானாதிபதியைப்பார்க்கிலும், அந்தமாரகத்தானத்தி லிருப்பவர்கள் பலவான்களெனக்கொள்க. இவர்கட்குக் கேந்தி

ராதிபத்திய தோஷத்தாற் கூறப்பட்டது. மாரகத்தானவிலக்கினமேற் கூறுகின்றது.

### பேர்துச்சுபயோகம் புகல்கின்றது.

கோணக்கோள்கண்டக்கோள்-கூடலுடனேபார்த்தல்
பேணுற்றொருவரில்லிற்-பெட்புடனே-காணுற்
றொருவருற்றாராகி-லொழிந்தோருறாமல்
இருநலத்தையீவாரிவர்க்கு.

(இ-ள்.) திரிகோணாதிபதியும், கேந்திராதிபதியும், ௩-௬-அ-கஉம் இடங்களுக்குரிய அதிபதிகளுடன் கூடாமல், தங்கடங்கள் சம்பந்தமான வேறோரிடத்து ஆதிபத்திய தோஷமில்லாமல், இருவருங்கூடல், ஒருவரையொருவர்பார்த்தல், ஒருவரில்லி லொருவரிருத்தலான சம்பந்தமுற்றாராகில்; இவ்வுலகத்தோர்க்கு விசேஷ சுபபலனைக் கொடுப்பார்கள் என்பதாம்.

(க-ரை.) தானவிசேஷத்தால், சுபபலனைக் கொடுப்பவரானாலும், ஒருவருக்கொருவர் சம்பந்தத்தால் விசேஷசுபபலனைக் கொடுப்பார்களென்றறிக.

### இராஜயோகங் கூறுகின்றது.

தன்மகன்மப்பதிக-டங்களிற்றமாறியுமே
அன்னியமாய்த்தங்கட்-கறையுமிடத்-தின்பமுடன்
உற்றிடுவாராகி-லொளிவளையாயிவ்வுலகோர்
பெற்றிடுவார்யாவர்பெரிது.

(இ-ள்.) பிரகாசம்பொருந்திய வளையல்களை யுடையவளே? தருமாதிபதியுங் கருமாதிபதியுந் தங்களிடத்திற் றங்களிருந்தாலும், தங்களுக்கு அன்னியமாச் சொல்லுமிடத்திற் சேர்ந்திருந்தாலும், தருமத்தானத்தில் கருமாதிபதி கருமத்தானத்தில் தருமாதிபதி தானிருந்தாலும், இவ்வுலகத்தி லுள்ளவர்கள் யாவரும் பெரிதாகிய யோகபலனைப் பெறுவார்கள் என்பதாம்.

(க-ரை.) தருமகருமாதிபதிகள், தோஷத்துடனே கூடியிருந்தாலும், தோஷத்துடனே கூடாதிருந்தாலும், இராசயோகத்தைக்கொடுப்பார்கள் எனக்கொள்க.

யோகதிசையிரண்டி-னுண்ணடுகின்றோன்றிசையும்
யோகபலனளிப்ப-னொள்ளியநன்-னாகப்
படமனையவல்குலாய்-பாரினிற்கோட்கள்
உடனுறைதலின்றேலுரை.

(இ-ள்.) ஒளிபொருந்திய நல்லபாம்பின் படத்தை நிகர்த்தவல்குலேயுடையவளே? இராசயோகங் கொடுக்கு மவர்திசையிரண்டினுள், நடுவினின்றவன் திசையும், அவர்களுடன் சம்பந்தமில்லாமலிருந்துள்ளளவில், அவ்வரசயோகபலனைக் கொடுக்குமென்று சொல்வாயாக என்பதாம்.

கண்டங்கோணத்தி-லிருந்தகடுங்கோட்கட்குக்
கெண்டைவிழிச்செவ்வாய்-கிளிமொழிபாய்-ஒண்டொடியாய்
ஆதிபனேடல்லா-விடத்துண்டேற்சம்பந்தம்
கோதில்யோகங்கொடுப்பார்கூர்ந்து.

(இ-ள்.) சேல்போலுங் கண்களையுஞ் சிவந்த வாயினையுங் கிளிபோலுஞ் சொற்களையும் ஒளிபொருந்திய வளையல்களையு முடையவளே ? கேந்திரத்திலாவது, திரிகோணத்திலாவது இருந்த, இராகு கேதுகளுக்கு அல்லாத விடத்ததிபதியுடனே சம்பந்தமுண்டாகில், அந்த, இராகு கேதுக்கள் குற்றமற்ற பெரிய யோகபலனைக் கொடுப்பார்கள் என்பதாம்.

(க-ரை.) அல்லாவிடத் ததிபதியுடனே சம்பந்தமுறலென்றல், கேந்திரத்திலிருந்தால், திரிகோணதிபதியுடனும், திரிகோணத்திலிருந்தால், கேந்திராதிபதியுடனும், சம்பந்தமுறல் பிரபலத்தான பிரபலகிரக சம்பந்தக்கிரக அனுசாரியாய் விசேஷசுபபலன்களைக் கொடுப்பாரென்றறிவது.

கேந்திரகோணத்தலைவர்-கேட்கிலொருவரே
லாந்திரமாயோக-மளிப்பரன்றே-கூர்ந்தறிவீர்
அன்னியகோணத்தவனே-டார்ந்திடிலீயும்பலன்கள்
என்னலறிவரிதாமிங்கு.

(இ ள்.) கேந்திராதிபதியும், திரிகோணதிபதியும் ஒருவராகில், நிறைந்து திரமாயிருக்கப்பட்ட யோகபலனைக் கொடுப்பார். அவர் அன்னிய திரிகோணதிபதியுடனே சம்பந்தமுற்றாராகில், அவர்கொடுக்கும் பலன்களை என்னலளவிட்டறியப்படாதென் றறிவீர் என்பதாம்.

(க-ரை.) அவர்கள் பலத்திற்கு அனுசாரியாய் பலத்தை விசாரித்துச் சொல்லுவது,

### இராஜயோகபங்கம்.

தன்மகன்மப்பதிக-டாமெட்டுடன்பதினென்
றின்றலைவராகிலவ-ரின்பமுற்ற-நன்னயஞ்சேர்
சமபந்தத்தாலே-சகத்திலுள்ளோர்தமக்குத்
தம்பலனீயாரென்றுசாற்று.

(இ-ள்.) தரும கருமாதிபதிகள், அட்டம இலாபாதிபதிகளாயிருந்தாலும், அட்டம இலாபாதிபதியுடைய சம்பந்தம்வந்தாலும், பூமியிலுள்ளோர்கட்குத் தங்கள் சுபபலனைக் கொடார்களென்று சொல்வாயாக என்பதாம்.

(க-ரை.) இவர்கள் சம்பந்தத்தால், இல்லையெனவே அன்னிய யோககாரக சம்பந்தமுண்டாயிருந்தால், யோகபலன் அடைவரெனக் கொள்க.

மாரகவிலக்கணம் வழுத்துகின்றது.

எட்டுமெதற்கெட்டு-மிரண்டனையுமாயுவென்று
திட்டமுடனறிந்து-சிரிலா-நட்டத்தை
மாரகமென்று-வகுத்தறிவாய்மாமயிலே
ஆர்கலிசூழும்புவியுளார்க்கு.

(இ-ள்.) பெருமைபொருந்திய மயில்போலுஞ் சாயலையுடையவளே? இலக்கினத்திற்கு-அ-ம் இடமும், அதற்கு-அ-ம்-இடமான-ங-ம் இடமும், ஆயுத்தானமென்று பேர். இவைகளுக்குச் சிறப்பில்லாத விரயத்தானங்களாகிய-எ-ம் இடத்தையும், உ-ம் இடத்தையும், கடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களுக்கு மாரகத்தானமென்று வருத்தறிவாயாக என்பதாம்.

(க-ரை.) பாவம்-கஉ-க்கும் இப்படியே பகுத்தறிவது.

நித்தியபலன்.

விருத்தம்.

செங்கதிருறுநட் சத்திரமுதலாய் திங்கணட் சத்திரமட்டும், சேரவேயெண்ணி ரெண்டினிற்பெருக்கித் தெரிந்தவன் சென்மநாண்முதலாய், பொங்கமாயநட் சத்திரமளவும் பொருந்தியதொகையுடன்வாரம், போதமூவகையுங்கூட்டியொன் பானிற் பொற்புடன்கழித்தசேடங்கள், இங்கிதஞ்செறியுமிரவி சந்திரன்சே யிராகுபொன்சனிபுதன்கேது, இனியசுக்கிரனுமா திசைப்படியே யிசைதொகைபாதிநா ழிகையாம், அங்கதுநித்ய பலனெனச்சொல்வ ரவைதனில்வரும்பலபாவம், அருண்மகா திசையின் பலனதுபோல வறிந்துநித்தியபலனுரைமின்.

(இ-ள்.) சூரியனிருக்கும் நக்ஷத்திரமுதல்-சந்திரனிருக்கிற நக்ஷத்திரம் வரையிலெண்ணி-இரட்டித்து வைத்து, ஜென்மநக்ஷத்திரமுதல்-அன்றையநக்ஷத்திரம் வரையிலெண்ணி - அன்றையவாரத்தொகையும் சேர்த்து-ஆகமூன்றின்மொத்தத்தை கூ-ல் கழித்து, நின்றதை திசாக்கிரமப்படிக்கு கிரகதிசை வருஷம் க-று உ-நாழிகை யாகக்கொண்டு-பலபாவமும் சொல்லுதல் நித்தியபலனும் என்பதாம்.

## இராசிசக்கிரம்.

உயிர் - உடல் - வெண்பா.

ஜெனித்தகடிகைக்குச்-சேர்ந்துவருஞ்சக்ரம்
தனித்ததுவேலக்கினமாச்-சாற்றத்-தினத்தில்வரும்
நக்ஷத்திரத்திற்கு-நாடுமிடஞ்சசிதன்
பக்ஷத்திராசியெனப்பார்.

(இ-ள்.) மாதலக்கினத்தில் - நின்றநாழிகைமுதல் - ஜெனித்தநாழிகைக்குரிய - சக்கிரமே - இலக்கினமென்றும், அச்செனித்த தினத்தில்வரும் நட்சத்திரத்திற்குரிய சக்கிரமே - இராசியென்றும் பேர் பெறும்.

## காலசக்கிரம்.

தேகம் - ஜீவம்.

ஒட்டியவிராசியுட-லொட்டிவிட்டதேஜீவம்
வட்டவலச்சக்ரவகை-மாற்றிடமாய்-திட்டமிது
மத்தியிலுறுங்கோள்தம்-மாட்சிபலன்ருட்சிபலன்
சொற்றிடுநாட்பாதத்தொடர்.

(இ-ள்.) காலசக்கிரவகையில்யாதொருஜாதகனுடைய ஜென்ம நக்ஷத்திரபாதம் - எந்தராசியைத்தொடருகிறதோ - சவ்வியத்திற்கு அதுவே தேகம் - அதுதொடர்ந்துவிடுகிறராசி எதுவோ அது-ஜீவம்-அபசவ்வியத்திற்கு - தேகராசி - ஜீவமாகவும் - ஜீவராசிதேகமாகவும் மாறும். இவ்விருராசியின்மத்தியிலுள்ள கிரககுணுகுணப்படி - பலாபலன்சொல்லுதல் எ-று.

## ஸ்திரீஜாதகம்பார்க்கும்வகை.

ஓதிடுவாய்கன்னிகைக்கு-வொன்பானிடக்கணவன்
பேதியாவேழிடமே-பெண்பிள்ளைச்-சாதிபொருள்
ஐந்தாமிலக்கினத்தா-லம்புலியால்பேதைகுணம
பைந்தோட்கயற்கண்ணுய்பார்.

(இ-ள்.) பெண்பிள்ளைகளுடைய ஜெனனஜாதகத்திற்கு - ஒன்பதாமிடத்தைக்கொண்டு - பதியினுடையபலனையும், ஏழாமிடத்தைக் கொண்டு - புத்திரர் - புத்திரிகள்பலனையும், ஐந்தாமிடத்தைக்கொண்டு - வரும்படிபலனையும், இலக்கினம் - இராசி இதுகளைக்கொண்டும், இவ்விடங்களிலிருந்த கிரகங்களைக்கொண்டும், அந்தஜாதகியினுடைய அழகுமுதலிய - குணுகுணங்களைச்சொல்ல - மற்றெல்லாப்பலன்களை - ஆண்பிள்ளைகளுக்குப் பார்த்துச்சொல்லுவதுபோல் சொல்லுதல் எ-று.

## அங்காரகதோஷம்.

### விருத்தம்.

வாக்கிருனன்கேழெட்டின்-மருவுமீராறிற்செவ்வாய்
தேக்கியவரன்றனக்குத்-திருந்தவேவந்துநிற்கில்
ஆக்கியமனையாள்சாவா-ளாயிழைதனக்குநிற்கில்
பாக்கியபுருஷன்செற்றுப்-பார்தனில்விதவையாமே.

(இ-ள்.) உ-ல் சு-ல் எ-ல் அ-ல் கஉ-ல் செவ்வாய்-புருஷனுடையஜாதகத்திருக்கில் - பெண்சாதிவியோகமாவாள், பெண்சாதியினுடைய ஜாதகத்திலிப்படிக்கிருக்கில் - புருஷனிறந்து விதவையாவாள், இருவருக்குமிப்படி யிருந்தாலும்-இல்லாவிட்டாலும் நல்லதே எ-று.

## துற்பலன்.

### வெண்பா.

மூக்கிரகநீசமுறின்-மூடங்களாகிவிடில்
வக்கிரமானாலுமே-வையத்துள்-துக்கம்
துயரமுந்துன்பமுஞ்-சொல்லுநேர்நேராய்
கயல்விழியாய்மாதேகணித்து.

(இ-ள்.) மூன்றுகிரகம்-ஒருஜாதகத்தில்-நீசமானால்-துக்கமே, மூடமானால்-துயரமே, வக்கிரமானால்-துன்பமே எ-று.

## நற்பலன்.

மூக்கிரகமுச்ச-முறிலாட்சிமொய்நட்பு
தக்கபடியுற்றிருக்கச்-சக்ரவர்த்தி-திக்கரசன்
மந்த்ரியிரனிறையாய்-மன்னுமெனச்சொல்வாய்
கொந்தலர்பூங்கோதாய்குறித்து.

(இ-ள்.) மூன்றுகிரகம்-ஒருஜாதகத்தில் - உச்சமாகில்-சக்கிரவர்த்தி - ஆட்சியாகில்-இராஜா-நட்பாகில்-மந்திரி - யெனச்சொல்லுவாய். ஆனால், நல்ல ஆதிபத்தியமும் - மூலத்திரிகோணமும் பெற்றிருக்கையிலே எ-று.

## பிரசவவீடுமுதலியவடையாளம்.

சேயுதிக்குமனையிருக்குந்-திசைகடகஞ்சிங்கம்
சென்மலக்கினமாயிற்றெற்குமூலை
யாயிருக்குங்கன்னிதனுர்-சேன்மிதுனம்வடக்கு
ஆடிடபமகரகும்பமதற்கோமேற்கு
வேயுருண்டதோளணங்கே-விரிச்சிகங்கோலாயின்
விளங்கமரர்வேந்தனூர்திசையெனவேவிளம்பாய்
தேயின்பிறைநெய்தீபத்-தில்லைவளர்பிறைக்கோ
செப்பிடுவாய்நெய்விளக்கினிறைவுவெனத்தேர்ந்தே.

(இ-ள்.) குழந்தைபிறந்த - திக்கறிய - இலக்கினம்கடகம்-சிங்க மாகில் தெற்கு, கன்னி - தனுசு - மீனம் - மிதுனமாகில் - வடக்கு, மேஷம் - ரிஷபம் - மகரம் - கும்பமாகில் - மேற்கு, விருச்சிகம் - துலாமாகில் - கிழக்கென்க, அபரபக்ஷகாலமாகில் - விளக்கில்-எண்ணெய் குறைவு, பூர்வபக்ஷகாலமாகில் - எண்ணெய் நிறைவென்கவென்பதாம்.

நிறைந்தபெண்ணுமிலக்கினத்திறுதிதீபம்
 நீண்டிருக்குங்குறைந்திருக்குமந்தமாயின்
புறந்தரவிலக்கினந்தான்சரமாயிற்றீபம்
 புறம்பாகுமுபயமெனிற்றிரமிருளாமென்ப
அறைந்தசனியங்கிசவீடாகிலதிற்காரி
 யம்புவியைப்பார்க்கவிருளகமதேயாகும்
சிறந்தமதிக்குஞ்சேய்க்குமங்கிசவீடதனைச்
 செவ்வைசனிபார்க்கிலோசெனிப்புபுலந்தெரிவாய்.

(இ-ள்.) இலக்கினம்-பெண்ணுமாகில் - முற்பாதியுமாகில் - பிரசவித்த அறையில் - விளக்குபிரகாசமாகவும், பிற்பாதியாகில் - பிரகாசமிராதாகவும், சரமாகில்-விளக்கிருந்ததென்றும், உபயமாகில்-வெளிப்புறத்திலிருந்ததென்றும், திரமாகில் - விளக்கில்லையென்றும், சந்திரனுக்கும் - செவ்வாய்க்கும்-இலக்கினம் அமிசமாகி சனிபார்வையுமுண்டாகில்-குழந்தைபிறந்தவிடம்-கழனிகட்டு என்பதாம்.

தெரிவைக்குந்துன்பமில்லைலக்கினத்தாதிக்கே
 திடமுடனேயந்தமெனிற்றேமொழிக்குத்துன்பம்
மருவியலக்கினமுதற்சந்திரனிருக்குமட்டும்
 மன்னுதொகைமடவார்கண்மருவியருகிருப்பர்
சருவியநற்சுபர்காணிற்றுன்றேன்றும்விரவற்
 சனிகுசன்பார்த்திடிற்றுயேசஞ்சலமுற்றிடுவள்
பெருமையுடனிருந்தகோணிறங்குழவிதனக்குப்
 பெறுமென்றேபெரியோர்களுரைப்பர்மிகத்தானே.

(இ-ள்.) இலக்கினம் - ஆதியாகில் - பெற்றவளுக்கு வருத்தமில்லை, அந்தமாகில் வருத்தமுண்டு, இலக்கினமுதல் - சந்திரனிருக்கிற வரையில்-எத்தனை கிரகங்களிருந்ததோ-அத்தனைபேர்-அருகிலிருப்பார்களென்க, இலக்கினத்தை சுபக்கிரகம்பார்க்கில்-அனுயாசமாய் தாய் பெற்றிருப்பள். சனி-செவ்வாய்பார்க்கில்-ஆயாசமாய் பெற்றிருப்பள். பின்னும்கிரகங்களுடைய - நிறமுதலானதைக்கொண்டு-குழந்தையினுடைய வடிவமுதலியதைச் சொல்லென்பதாம்.

தானருகேயிருந்தமடவார்பருவங்கூறில்
சனியிருந்துகண்டக்காற்றலைநரைத்தகறுப்பி
ஈனமிலாக்குசனிருந்துகாணின்முதுவயதே
யிசையமிறஞ்சிவப்பாகயிருப்பளமங்கலையாம்
ஞானிலமெண்குருவெள்ளிசசியிருந்துகண்டால்
நாரிசுமங்கலைவாலைநற்புதன்மத்திமையாம்
மாநிலமேற்பாம்பிருந்தாலனாசாரமடந்தை
மகவுநூலேலதரித்துவந்திடுங்கண்டீரே.

(இ-ள்.) சமீபத்திலிருந்த ஸ்திரீகளுடைய - பருவத்தைப்பேசில், இலக்கினத்தில்-சனியிருந்தாலும்-அதைப்பார்த்தாலும் - நரைத்தமயிர்-கறுப்பியெனவும், செவ்வாயிருந்தாலும் - பார்த்தாலும் - முதுமைவயது, சிவப்பி - அமங்கலியெனவும், குரு - சுக்கிரன் - சந்திரன் - இருந்தாலும் - பார்த்தாலும் - சுமங்கலி - பாலியமெனவும் - புதனிருந்தாலும்-பார்த்தாலும்-நிறமுதலியதை மத்திமமெனவும், இராகு-கேது இருந்தாலும் - பார்த்தாலும் - ஆசாரமில்லாதவளெனவும், குழந்தை மாலைபோட்டுவந்ததெனவும் சொல்லவென்பதாம்.

கண்டுமொழிமாதாவின்பருவங்காரி
கதிர்குருமூவருங்கண்டால்விருத்தையவளாகும்
மண்டுவெள்ளிசேய்பார்க்கவயதுநடுவாகும்
மதிபுதனுங்கண்டக்காலவள்வாலையாவள்
மிண்டுமுடவன்னிருந்தால்வீடுபுராதனஞ்சேய்
மேவில்வெந்துசுட்டினதோர்வீடாகுமென்னே
பண்டுசசிபார்க்கிலகம்புதியதுவேயாகும்
பரிதிக்குமரந்திரண்டபதியெனச்சொல்வாரே.

(இ-ள்.) குழந்தையைப் பெற்றவளுடைய-பருவத்தைக்குறித்துச்சொல்லில், சனி - சூரியன் - குரு - இம்மூவரும்-இலக்கினத்திலிருந்தாலும்-பார்த்தாலும் - முதிர்வயது, சுக்கிரன் - செவ்வாயிருந்தாலும் பார்த்தாலும் - நடுவயது, சந்திரன் - புதனிருந்தாலும்-பார்த்தாலும்-இளவயது எனவும், சனியிருந்தாலும் - பார்த்தாலும் - குழந்தைபிறந்தவீடு பழைமை, செவ்வாயிருந்தாலும்-பார்த்தாலும் - வீடுநெருப்புபட்டது, சந்திரனிருந்தாலும் - பார்த்தாலும்-வீடுபுதுமை, சூரியனிருந்தாலும்-பார்த்தாலும்-வீடு-செடி-செட்டுள்ளது என்பதாம்.

சொல்லுபுதன்பார்த்திருந்தாற்சித்திரவீடாகும்
சுக்கிரன்பார்த்திருந்தக்காற்சுசிவீடதாகும்

வில்லரசனிருந்துகண்டாற்கெட்டியகமாகும்
மின்னனையாள்விரும்புசுவைவெய்யவனேலுறைப்பாம்
நல்லமதிக்குப்பாகுஞ்சேய்துவர்ப்பைநாடும்
நாலுவகைச்சுவைபுதனேநல்கிவிப்பனிப்பால்
அல்லலறுங்குருமதுரம்வெள்ளிபுளிப்பாகும்
யணிகாரிகசப்பிலக்கினத்திசையில்சிரசே.

(இ-ள்.) புதனிருந்தாலும்-பார்த்தாலும்-வீடு-சித்திரவிசித்திரம், சுக்கிரனிருந்தாலும் - பார்த்தாலும் - வீடு பரிசுத்தம், குருவிருந்தாலும் பார்த்தாலும்-வீடு-அழுத்தம், பெற்றதாய் புசிப்பைப்பற்றிச்சொல்ல-சூரியன்-காரம், சந்திரன்-தித்திப்பு, செவ்வாய்-துவர்ப்பு, புதன்-நாலு தினுசும், குரு-மதுரம், சுக்கிரன்-புளிப்பு, சனி-கசப்பு என்பதாம்.

சிரசராசியிற்சுங்கனிருக்கவிளக்கையும்
திரங்களைப்பாவர்கள்பார்க்கிற்றீர்க்கமுறுந்தீபம்
உரைமருவும்லக்கினத்துக்கிருபாலுநான்கு
மோதுதசந்தனிலிருந்தாருடன்கூடியிருப்பர்
இரவிபுந்திபளிங்குகேந்திரத்திருக்கிற்கிழக்காம்
இரணியன்கேந்திரத்தேறியிருந்திடிலுத்தரமே
அரவுசெவ்வாய்சென்மத்திலுறினுந்தெற்காகும்
அணிபுமனைசேர்காரிக்ககமேற்குவாசல்.

(இ-ள்.) சரராசியுதையமாக-சுக்கிரனிருக்க-விளக்கொளியைவும்-நிலைபேதகமும், திரலக்கினத்தில்ஜனிக்க-பாவர்கள்பார்க்க-விளக்கின் சுடர்மேல்நோக்கியும் நிலைமாறாமல்நிற்கும். (உபயலக்கினமுதயமாகில்,பிரசவ அறையிலிருந்த விளக்கையெடுத்துவிட்டு வேறுவிளக்கைவைப்பார்கள்.) இலக்கினத்திற்கு உ-ச-கo-கஉ-ல் எத்தனைகிரகங்கள் நின்றதோ-அத்தனை பெண்கள்பிரசவ அறையில் - பிரசவகாலத்தில் தாயுடனிருப்பார்கள். கேந்திரத்தில் சூரியன் - புதன் - சுக்கிரன் இருக்கில்-கிழக்கு, குருவிருக்கில்-வடக்கு, செவ்வாயும்-இராகும் இலக்கினத்திலிருக்கில் - தெற்கு, சனியிருக்கில் - மேற்கு, இத்திசைகளிற் பொருந்திய வாசற்படியுள்ள வீடாயிருக்கும் என்பதாம்.

வாசமுறுமூன்றுறிற்பதினொன்றிற்பாவர்
வந்திருக்கச்சனிபத்தாமனையதனிற்சார
நீசமடந்தையரிருந்துபுரிவர்பரிகாரம்
நீண்டசனிசுபர்மனையிலேறிநல்லோர்காணில்
ஆசவிலீனத்தொழில்செய்நாரியருகிருப்பர்
ஆமென்றேசுருதியறிந்துரைத்தாராய்ந்தோர்

தேசுறுநற்கலைநிறையுந்திங்கண்முகமயிலே
 செப்பினரிப்பலபாகத்தெரிந்துகொளத்தானே.

(இ-ள்.) ங-சு-கக-ல் பாபக்கிரகமிருந்தாலும், க௦-ல் சனியிருந்தாலும், நீசஸ்திரீகள் பெற்றவளுக்கு-உபசாரம் செய்வார்கள். அந்தச் சனியே-சுபர்களுடைய வீட்டிலிருந்து - சுபர் பார்வையும் பெற்றால், தாழ்ந்தஜாதிஸ்திரீகளிருந்து உபசாரஞ்செய்வார்கள் என்பதாம்.

## சதுரங்கபலயோகம்.

வெண்பா.

ஒன்றுநான்கேழ்பத்தி-லொவ்வொருநற்கோளிருக்கி
லன்றுசதுரங்கபல-யோகமா-மென்றுணர்வீர்
ஆங்கதற்குப்பலனோ-வாயுவிர்த்திதீங்கில்லை
ஓங்குமிசைகல்வியுமுண்டு.

(இ-ள்.) க-ச-எ-க௦-என்கிற கேந்திரத்தில், ஒவ்வொரு சுபக்கிரகமிருந்தால், சதுரங்கபலயோகஜாதகமாகும். அதன்பலன் ஆயுவிர்த்திகரம், தீங்கில்லை, கீர்த்தி, கல்வியுண்டென்பதாம்.

## ஆரூடம்.

விருத்தம்.

நல்லதோர்பொருளைப்போக்கிநாடியேவருவோர்பக்க
வில்லதிலரவங்காரியிரவிசேர்ந்திருப்பாராகில்
சொல்லதுவின்றேசேருந்தொனிப்பவர்கோணமாகில்
அல்பகலுண்மூன்றைந்திலலறியேவரப்பார்மாதே.

(இ-ள்.) பாபக்கோள் நின்றராசிப்பக்கம் பொருளைப்போக்கினவர் வந்திருந்துகேட்கில், உடனே கிடைத்தது எனவும், மூலையில் வந்திருந்து கேட்கில், ங-நாளில் ரு-நாளில் தப்பில்-கரு-நாளில் கிடைக்கப்படும் என்று சொல்லவும்.

இப்படிநல்லோர்நின்றவிடத்தினிற்கேட்பாராகில்
பொய்ப்படும்போனசொத்துப்புலன்வரமெதுவாமென்று
மெய்ப்படச்சொல்லலாகும்மேவியகோணமாகில்
துய்ப்படவேதமூர்த்திசொன்னதுதவறேமாதே.

(இ-ள்.) சுபக்கோள்நின்ற ராசிப்பக்கம் வந்து கேட்கப்பட்டவர் சொத்து கிடைக்காது. மூலைப்பக்கமிருந்து கேட்கப்பட்டவர் சொத்து மெதுவில் கிடைக்கலாம் என்று சொல்லவும்.

## துநாக்கிரகதுற்றநிவிர்த்தி.

வெண்பா.

ஒருநூறுகோள்புத-ரேைாயிரங்கோள்
பிருகுவிலக்கங்கோள்-பீதன் - திருகேந்த்ரம்
பெற்றூற்பவமில்லே-பின்பென்னவேறுகுறை
பற்றுதுபாலன்வரப்பார்.

(இ-ள்.) புதன், சுக்கிரன், வியாழன் இம்மூவர் நல்ல கேந்திர... பெற்றிருந்தால், பிறந்தகுழவிக்கெல்லாக் குற்றங்களைப்போக்கும் எ-று.

## வந்தனம்.

விற்பூட்டுவெண்பா.

என்னைத்தலைமிதிக்கு-மெண்ணுடையோர்மேலிருக்கத்
தன்னைப்புகழத்-தகாதந்தை-யன்னையின்பேர்
சோதிடநூல்கற்கமுனைஞ்-சொன்னேனிதென்பேரால்
ஓதிடக்கொள்வாருவப்பு.

## வாழ்த்து.

மெய்மைபுணர்வோர்வாழ்க-வேதஞ்சுருதிபிநூல்
பொய்மையிலாவித்துஜெனம்-பூவசியர்-துய்யமையிங்க்
விஷ்கொடிசக்ரேஸ்வரியாம்-விக்டோரிதங்கிளேயும்
நிஷ்பக்ஷபாதநீதி.

## வழாநிலே.

ஓர்தந்தைதாயிற்-குடம்பெடுத்தோரிந்நூலைப்
பார்தனில்வேறச்சிற்-பதியார்கள்-யார்விரும்பில்
நூல்செய்தோர்சந்ததியார்-கோன்புகெடாமலவர்
பால்சேர்ந்திடிற்பெறுவர்பண்பு.

**சிற்றம்பலசேகரம்முற்றிற்று.**

---

விஜயஞூ புரட்டாசிமீ

---

